உ

ஓம் கணேஸாய நம:

# அறிக்கை.

---

சிறுபஞ்ச காவியங்களில் ஒன்று எனப்படும். யசோதர காவியம் என்னும் தமிழ் நூல் என்னால் எழுதப்பட்ட புதிய உரையுடன் விரைவில் விலைக்குத் தரப்படும். அந்நூல் முன் எவராலும் உரை எழுதப்படாதது. என்னால் எழுதப் பட்ட உரையே முதல் உரை. அந்நூல் "சித்திரத்தில் உருவம் சிதைத்தல் ஆகாது" "அறம் எனப்படுவது ஆருயிர் ஓம்பல்" "அஹிம்சா பரமோ தர்ம்ம:." என்னும் அருள் மொழிகட்கு இலக்கியம் ஆயது. அப் புத்தகம் ஆறு மாத கால அளவில் அச்சிட்டு முடிவு பெறும். அதன் விலை முதலிய விவரம் வேண்டுபவர் ரிப்ளை கார்டு எழுதி தெரிந்து கொள்ளலாம்.

இப்படி

17-4-1940. வே. மு. ஸ்ரீநிவாஸ முதலியார்,

நெ. 1, எண்ணேக்காரத் தெரு,

காஞ்சீபுரம்.



ஓம் கணேசாய நம:

# திரு ஒத்தூர்த் தேவாரச் சிற்றுரையின் புறவுரை.

திரு ஒத்தூர்த் தேவாரத்தினுக்குத் திருவாளர், "வித்துவான். ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை" என்பவரால் எழுதப்பட்ட உரைநூல் ஒன்றனை யான் கண்டேன். அந்நூலுள், *பேரறிஞர்கள் பலரால் பகரப்பட்ட உரைச் சிறப்புப் பாயிரங்கள் பலவுள. அப் பாயிரங்களைப் பகர்ந்த அறிஞர்கள், "நகுதற் பொருட்டு அன்று நட்டல் மிகுதிக்கண் மேற்சென்று இடித்தற்பொருட்டு" என்ற பொய்யா மொழியை மறந்தவராய் அவ்வுரையுள் உள்ள பிழைகளை எடுத்துக் காட்டித் திருத்த முயலாமல் "வாரம் பட்டுழித் தீயவும் நல்லவாம்" என்ற ஆன்றோர்தம் மொழிக்கு இலக்கிய மாகியவராய் உரைகாரரிடங் கொண்ட வாரத்தினால், தாங்கள் பகர்ந்த பாயிரங்களுள் அவ்வுரையைப் பலவாறாகப் புகழ்ந்துளார்கள். அப்படி வாரங்கொண்டு பிழைகளை மறைத்துப் புகழ்தலினால் தமிழின் பெருமை கெடுதலன்றிக் கற்க வேண்டுவன வற்றை முறையாகவும் முற்றாகவும் கல்லாமுன் நூலெழுதவும் உரை எழுதவும் முயலுபவர், திருந்திய நன்னெறியைப் பெறாரென்பதனை அப்பேரறிஞர்கள் மறந்தார்கள் போலும்.

ஆதலால், அவர்களும், பிறரும், வாரங்கொண்டு பிறரெவருக்கும் அத்தகைய பொய்ப்புகழ் பொருத்திச் சிறப்புப் பாயிரங் கொடுத்துத் தமிழ்மொழிக்கு ஒருகேடு செய்யா திருத்தற் பொருட்டு அவ்வுரையின் குற்றங்களுள் (கற்க வேண்டுவனவற்றை முறையாகவும் முற்றாகவும் கல்லாதவருக்கும்) வெள்ளிடையாகத் தோன்றும் பருஉப் பொருட்ட வாகிய (ஸ்தூலமாகிய) சில குற்றங்களை எடுத்துக் காட்ட எண்ணி முறையாகவும் முற்றாகவும் கல்லாதா ரினத்தேனாகிய யானும் இச் சிற்றுரையினை எழுதினேன்.

இவ்வுரை சிற்றுரையாமோ ? ஆம். சிற்றுரையே. என்னை ? முன்னுரையுள் வெள்ளிடையாகக் காணப்பட்ட பருஉப்

---

*தோரமங்கலம் ஆசிரிய அ. வரத நஞ்சையப் பிள்ளை அவர்கள். தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச்சங்கத் தலைவர் திரு, த. வே. உமா மகேசுவரம் பிள்ளை அவர்கள், B. A., B. L., சென்னைச் சைவசித்தாந்த மகாசமாஜக் காரியதரிசி திரு, ம. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள், B. A., B. L., சென்னைக் கார்பொரேஷன் கல்வி நெறித்தலைவர் திரு, ச. சச்சிதாநந்தம் பிள்ளை அவர்கள், B. A., L.T., ஆகிய அந்நால்வரும்.

பொருட்டவாகிய (ஸ்தூலமாகிய) பிழைகளுள் சிலவற்றை எடுத்துக் காட்டி விளக்கியதால் நூல் நீண்டதன்றி நூலின் பொருளை விளக்கியதால் உரை விரிந்ததன்று ஆதலால். இச்சிற்றுரை, முன் உரைகாரரை மறுக்கும்பொருட்டு எழுதப்பட்டதன்றெனக் கொள்ளுக. என்னை? அவ்வுரைகாரர்தம் பேச்சுக்களையும், கட்டுரைகளையும் யான் பார்த்திருக்கிறேன். அதனால், அவர் போன்றாரைத் தெருட்டி நற்புக்கொளுவல் என் போன்றாருக்கு இயலாத வொரு செயலென்பதனைப் "புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை வாய்மையால் காணப்படும்" என்ற பொய்யா மொழியால் தெளிந்தேன் ஆதலால். அவர்தம் உரை நூலுக்கு உரைச் சிறப்புப் பாயிரம் பகர்ந்த பேரறிஞர்கள் பொருட்டே இச்சிற்றுரை என்னால் எழுதப்பட்டது எனக் கொள்ளுக. இச் சிற்றுரையை மறுப்பவர் "வாளொடு என் வன்கண்ணர் அல்லார்க்கு நூலொடு என் நுண் அவை அஞ்சுபவர்க்கு" என்ற பொய்யில் புலவனார்தம் பொருளுரையைத் தேராமல் தம் பெயரை அறிவிக்கவும் நாணம் உடையவராய்ப் புனை பெயராலே, பிறர் பெயராலே, நேரல்நெறியின் நீரல் சொற்களைக்கொண்டு (இந்த மூஞ்சிக்குத் தஞ்சாவூர் மஞ்சளா என்பதுபோன்ற விலாவணைபாடி) எழுதுவார் எழுத்துக்களை "நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக் குலத்தின்கண் ஐயப்படும்" என்ற திருமொழியை உன்னி யான் போற்றுதல் செய்யேன். தூற்றுதல் என் உள்ளத்தினும் கொள்ளேன். என்னை? அச்செயல் இழிமக்கள் செயல் என்பர் அறிஞர் ஆதலால். "நயனில சொல்லினும் சொல்லுக சான்றோர் (முன்) பயனில சொல்லாமை நன்று" என்ற தேவர்தம் ஆணையை மறவாதவராய் நேரிய நெறியில் இச் சிற்றுரையின் பிழைகளை எடுத்துக்காட்டி எழுதுவார் எழுத்தை "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வு உண்டாம் உய்வு இல்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்ற திருமொழியைப் போற்றி நன் நண்பர்தம் நல்லெழுத்து என ஏற்றுப்போற்றுவன்.

இச் சிற்றுரையின் பிழைகளை நீக்கிச் செம்மை செய்து தந்த என்னுடைய ஆசிரியர்களுள் ஒருவராகிய ஆசிரியர், கா. ர. கோவிந்தராஜ முதலியார் அவர்களின் நன்றியை மறவாது மகிழ்வதன்றி அவர்கட்கு வேறு கைம்மாறு செய்யும் வகையைக் காண்கிலேன்.

"இருக்கை"
நெ 1, எண்ணெய்க்காரத் தெரு,
காஞ்சிபுரம்.

இப்படி,
வே. மு. ஸ்ரீநிவாச முதலியார்.

ஓம் கணேசாய நம:

ஸ்ரீ பாலகுஜாம்பாள் சமேத வேதபுரீசாய நம:

திரு ஞானசம்பந்த சுவாமிகள் அருளிய

# திரு ஓத்தூர்த் தேவாரமும்,

## வே. மு. ஸ்ரீநிவாச முதலியார் எழுதிய சிற்றுரையும்.

*திருச்சிற்றம்பலம் (பண்—பழந்தக்க ராகம்.)*

1. **பூத்தேர்ந் தாயன கொண்டுநின் பொன்னடி
ஏத்தா தாரில்லை யெண்ணுங்கால்
ஓத்தூர் மேய வொளிமழுவா ளங்கைக்
கூத்தீ ரும்ம குணங்களே.**

** முன் உரைகாரர் பொழிப்பு:—(திருவோத்தூரின்கண் விரும்பி எழுந்தருளியுள்ள பிரகாசம் பொருந்திய மழுவாகிய ஆயுதத்தை ஏந்திய அழகிய கையினையுடைய கூத்தாடும் பரமனே! உம்முடைய குணங்களைப் பாராட்டி உன் பொன்னடிகளில் பூவும் பூசைக்கு வேண்டும் மற்ற பொருள்களும் நல்லவாய் ஆராய்ந்து கொண்டுவந்து அருச்சித்துத் துதிக்காதவர்கள், ஆராயுமிடத்து, ஒருவருமிலர் என்றவாறு.) என்பது.*

பொருள்கோள்:—ஓத்தூர் மேய ஒளி மழு வாள் அங்கை கூத்தீர்! ஆய் அன பூ தேர்ந்து கொண்டு நின் பொன் அடி ஏத்தாதார் இல்லை எண்ணும் கால் உம்ம குணங்கள் ஏ.

இதன் பொருள்:—திரு ஓத்தூரினை விரும்பி வீற்றிருப்பவரும், சுடுகை பொருந்தியதும் ஒள்ளியதுமாகிய மழுவை ஒளி பொருந்திய அகக் கையில் ஏந்திக் கொண்டு திருக்கூத்து ஆடுபவருமாகிய இறையவரே! ஆகமங்களில் கூறப்படும் விதிப்படி குற்றம் அற்ற பூக்களைத் தேடிக் கொண்டுவந்து நும்முடைய பொன்போலுந் திருவடிகளில் இட்டு வணங்கி வாழ்த்தாதார், தேவர்கோன் முதலாக மூன்று உலகங்களிலும்

---

**முன் உரைகாரர் வித்துவான். ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை என்பவர், முன் உரைகாரர் எனக் கூறப்படும் பிறவிடங்களிலும் அவரையே கொள்ளுக.*

ஒருவரும் இலர். அவர்கள், நம்மை வணங்குதலின் ஏது என்னையென ஆய்ந்து பார்ப்பின், நம்மை அடைந்தார்க்கு வரைவின்றி அருளும் நம்முடைய அளவில்லாத நற்குணங்களே ஆகும். ஆதலால், நம் அடிமையாகிய யானும் நம் அருளைப் பெறுவான் நம்மை வணங்குகின்றேன் என்க.

குறிப்புரை:—நேர்ந்து - தேடி. ஆய் - அழகு. ஆய்அன - அழகை உடையன; குற்றம் அற்ற. நின், நும் மயக்கம். பொன் அடி, பொன்போலும் அடி. இறையவன் பொன்வண்ணன் ஆதலால், உவமைத் தொகைப்பாற் படுத்தலே சிறப்பாம். எண்ணுங்கால் - ஆய்ந்து பார்ப்பின். மே - (உரிச்சொல்,) விருப்பம். மேய: அகர ஈறு பெயர் எச்ச விகுதி. யகரமெய் இறந்தகால இடைநிலை. மேய...கூத்தீர் என முடிக்க. மழு, கூடுகைபோகந் தீய இருப்பு வட்டு. வாள் - ஒளி. அங்கை - (அகம் + கை, மருஉ) உள்கை, அகக்கை. ஏ, தேற்றம்.

*சிறப்புரை:—முன் உரைகாரர், மேய என்ற சொல்லை மேவுதல் என்ற தொழிற்பெயரின் திரிபாக எண்ணி "மேவிய என்று இருக்கவேண்டியது மேய என நின்றது எனக்கூறி "நம்பு மேவு நசையாகும்மே" (தொல். உரி-33.) என்ற பாவைக் காட்டினர். அவர் காட்டிய காட்டுப் பொருத்தம் அன்று. என்னை? அப்பா, உரியியல்பா. அப்பாவில் உள்ள மே என்ற ஓரெழுத்து மொழியே விருப்பம் என்ற பொருளைத் தரும் என்பது உரையாசிரியர்கள் கருத்து ஆதலால். அவ்வுரியியல் பாவிலுள்ள மே என்ற மொழி மேஎ என அளபேற்றிருத்தலே சிறப்பாகும். என்னை? உரையாசிரியர்களால் காட்டப்பட்ட காட்டுக்களால் அறிக. மற்றும் அவர், "பொன்னடி" என்பதற்குப் "போகம் அளிக்கும் திருவடி" ஆதலால் பொன்னடி என்றார் எனப் புராணிகர்களால் கூறப்படும் பொருந்தாப் பொருள்கூறி "பொன்னடைந்தார் போகங்கள் பல அடைந்தார்" என்ற (பிரம-தேவா.) தொடரைக் காட்டினர். அவர், அத்தொடரை உடைய பாவின் உண்மைப் பொருளை உணர்ந்திலர் போலும். நிற்க,*

*மழு என்பது போரிடையே எதிர்த்து நிற்பார் ஒருவர்மீது ஒருவர் எறிந்துகொள்ளும் கொல்படைகளுள் ஒன்றன்று. அது, தாருகாவனத்து முனிவர்கள், சிவபெருமானைக் கொல்லும பொருட்டு ஓமத்தீயின் ஆக்கிய* புலி, மான், பாம்பு, துடி, தீப்பிழம்பு, முயலகன், பூதம், வெண்தலை *முதலியவற்றுள்*

சேர்ந்ததும், சுடுகை பொருந்தியதும், வெள்ளியவண்ணம் உடையதுமாகிய ஒருவகை இருப்புவட்டு எனக் (கட்டி - உருண்டையெனக்) கொள்ளல் வேண்டும். என்னே ?

தாருகாவனத்து முனிவர்களால் சிவபெருமான்மீது ஏவப்பட்ட புலி, மான், பாம்பு, துடி, தீப்பிழம்பு, முயலகன், பூதம், வெண்தலை, மழு முதலியவற்றுள் யாதொன்றும் உலகில் போரிடையே ஒருவர்மீது ஒருவர் எறிந்துகொள்ளும் இயல்பினைப் பெற்ற படைவகைகளைச் சேர்ந்ததன்று. உலகினரால் போரிடையே ஆளப்படும் படைகளுள் ஒன்றனை ஏற்று ஆடினுன் சிவபெருமான் எனல் அப்பெருமான்றன் பெருமை பொருந்திய ஆற்றலுக்குச் சிறப்பன்று. பிறரால் தாங்குதற்கு அரிதாகிய படையைத் தாங்கி ஆடினுன் எனவே அப்பெருமான்றன் ஆற்றலுக்குச் சிறப்பாகும். பிறர் செய்தற்கு அரிதாகிய செயலைச் செய்த சிவபெருமான்றன் ஆற்றலை நினைப்பூட்டுவான், இப்பாவில் குறிக்கப்பட்ட "மழு" என்ற சொல்லுக்குச் சுடுகை பொருந்திய இருப்புக்கட்டி எனப் பொருள்கோடலே பொருத்தமாகும். என்னே ? அம்மழுவேன்சோல் கூத்தர் என்ற அப்பெருமான்றன் (சிறப்புத் தொழிலொடு கூடிய) பெயரைச் சிறப்பித்து நிற்றலால். நிற்க,

"வான் ஏறு உரும் எனது ஆயுதம் அவன் ஆயுதம் மழுவாள், யான்" (தக்க-யாக-453.) என்றதொடருக்கு அதன் உரையாசிரியர் "ஆகாசத்தில் உரும் ஏருன வச்சிராயுதம் எனதாயுதம், ஈசுவரனுக்கு ஆயுதம் மழு" என்று பொழிப்புரைத்து அவ்வுரைக்குச் சிறப்புரையாக "மகாதேவருடைய திருக்கையிலுள்ள மழு வென்பது ஓமமந்திரத்தால் பிராமணர் (தாருகாவன முனிவர்) விடுவித்த பகைப்படை என்ருன் என்றவாறு. மழுவை வாள் என்றதன்று; ஆள்யான் - ஆளுகிறயான் என்றவாறு. மழுவாள் அன்று என்று ஆட்சேபஞ் சொல்லலும் ஆம். எனவே மழு, ஏந்தும் மழு என உணர்க. (எறியும் மழு அன்று) அஃது இருப்புக்கட்டி போலும் நெருப்புக்கட்டி என்றவாறு" எனக் குறித்தார். அக்குறிப்பு இவண் பொன்னைப் போற்றுதல் போலப் போற்றுதல் பாலதாம்; "இரும்பின் கட்டி என்பர் ஒரு சாரார்" என முன்னுரைகாரர்போல எளிதாக எள்ளி இகழ்தற்பாலதன்று. இன்றும் சூளுரைப்பாருள் சிலர், தம் மெய்ம்மையைக் காட்டுவான் யான், மழுவேந்திச் சொல்லுவன் என்னும் வழக்காற்றினையும், அரசியலாரால் தொகுக்கப்பட்ட அகராதியில் (தமிழ்

லெக்ஷிகனில்) மழு ஆஸ்ரித விஷயத்தில் மழுவேந்திக் கொடுத்துக் காரியஞ் செய்யுமவன்" (ஈடு-2-6-9) என்ற குறிப்பினையும் நினைக்க.

மழு என்ற சொல் போர்க் கருவியாகிய பொருளைச் சுட்டிப் பிறவிடங்களில் சிவபெருமானை அல்லது பிறரைச் சார்ந்து நிற்குமாயின், அச்சொல்லுக்குப் பரசு அல்லது கோடாலி (கோடரி, கோடழி) என்ற படையெனப் பொருள் கொள்ளுக. என்னை? "எறி மழுவோடு இளமான் கையின்றி இருந்த பிரான்" (புக, வீழி - தேவா.) "பரசு தரித்திலர் போலும்" (பிரம - தேவா.) "பரசு எனும் படை ஆள்வீர்" (வேணு - தேவா.) மழுப்பல கொண்டு அவர் மார்பம் பிளப்பர்" (சூளா-துறவு-100) "பாவப் பெருமரம் விரதமழுவின் வேர் அறத் துணிக்கும்" (பெருங்கதை-2-11-43, 44.) "நான்மறையாளன், மழு ஏறு உண்ட மன்னவன் போல" (பெருங்கதை-3-27-178.) என்ற தொடருக்கு நன்றி யறிந்தாரால், தம் மனத்துள் எந்நாளும் மறவாமல் போற்றப் படும் பேராசிரியர் * பிரம்மஸ்ரீ உத்தமதானபதி ஐயரவர்களால் எழுதப்பட்ட குறிப்பும் ஏதுக்களாம்.

---

* மஹா மஹோபாத்தியாயர், தாக்ஷிணாத்திய கலாநிதி, டாக்டர் முதலிய பலவகைச் சிறப்புப் பெயர்களை உடைய பேராசிரியர் பிரம்மஸ்ரீ உ. வே. சாமிநாத ஐயரவர்கள். உத்தமதானபதி என ஒரு புதிய பெயரைச் சொல்லியதன் ஏது என்னை? முற்கூறிய சிறப்புப் பெயர்கள் திரு. ஐயரவர்களின் அறிவின் பெருமையைச் சிறப்பித்தல் அல்லாமல் அவர்கள் தமிழ் மொழிக்கும் தமிழர்கட்கும் செய்த உபகாரத்தையும், அவ்வுபகாரத்தின் பயனையும் சிறப்பியா ஆதலால், "ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவர்க்கு எழுமையும் ஏமாப்புடைத்து" என்ற பொய்யா மொழிக்கு ஏற்ப அவர்கள்செய்த உபகாரத்தின் பயன், மக்கட்கு அவர்களின் பிறப்புக்கள் தோறும் தொடர்ந்து நலம் விளைப்பதாகும். அன்றி, அவர்கள் உபகாரம் உயர்குடிப் பிறப்பாளர், கீழ்க்குடிப் பிறப்பாளர் என்றும், பொருளாளர், வறுமையாளர் என்றும் பிரித்து வரைவு செய்யாமல் யாவர்க்கும் பயன்தருவதாகும். அவர்கள் செய்த உபகாரம் என்னை? செல்லால் அரிக்கப்பட்டு மண்ணாகி மாழ்குவதற்கு உரிய நூல்களை மாழ்காமல் பாதுகாத்ததன்றிச் சிறியவிலையால் யாவர்க்கும் எளிதில் கிடைக்கும்படி செய்தனர். அந்த உபகாரத்தினும் சிறந்ததொரு உபகாரம் உண்டோ? இல்லை நிற்க,

2. இடையீர் போகா விளமுலை யாளையோர்
புடையீ ரே!புள்ளி மானுரி
உடையீ ரே!யும்மை யேத்துது மோத்தூர்ச்
சடையீ ரே!யும தாளே.

முன் உரைகாரர் பொழிப்பு:—(நடுவே ஈர்க்கும் நுழையாத இளமை பொருந்திய கொங்கைகளை உடைய உமாதேவியை ஒரு பக்கத்தே கொண்டு, புள்ளிகளை உடைய மான் தோலாகிய உடையை உடுத்து, திருவோத்தூரின்கண் எழுந்தருளிய சடையினையுடைய பரமனே! உம்முடைய திருவடிகளை வணங்கி உம்மைத் துதிக்கின்றோம். எ-று.) என்பது.

பொருள்கோள்,—ஓத்தூர் சடையீரே! இடை ஈர் போகா இள முலையாளை ஓர் புடையீரே! புள்ளி மான் உரி உடையீரே உம் அது ஆள் உம்மை ஏத்துதும் ஏ.

இ - ள்:—திரு ஓத்தூரினை விரும்பி வீற்றிருக்கும் சடைமுடியை உடைய இறையவரே! அயல் இடத்தில் ஈர் அள

---

திரு. ஐயர் அவர்களின் தகுதிக்கு ஏற்பத் தமிழர்கள் சிறப்புச் செய்யார்கள் எனத் திருவருளே, உத்தமதானபதி என்ற சிறப்புப் பெயரை அவர்கட்குத் தாயின் கருவினிலே செறித்து வைத்ததெனக் கொள்ளுக. என்னை? அவர்கள் பிறந்த ஊர் உத்தமதானபுரம் ஆதலால். அது, ஆகுபெயர். இன்று வரை அவர்களின் தகுதிக் கேற்பப் புகழ் செய்யாத் தமிழர்கள் இனி எனும் உத்தமதானபதி என்ற சிறப்புப் பெயரால் புகழ்வார்களாயின் அத்தமிழர்கள் நன்றி யறிந்தார் என்ற புகழுக்கு உரியவராவார். இப்படி ஒரு பெயர் பண்டு எவருக்கேனும் உண்டோ? பலருக்கு உண்டு. என்னை? சதத்தனார், நற்றத்தனார், திருவள்ளுவனார் என்பன. அவை, ஈகையாகிய உபகாரத்தையே சிறப்பிப்பனவாம். திரு. ஐயர் அவர்களின் ஈகையாகிய உபகாரத்தைச் சிறப்பித்தற்கு உத்தமதானபதி என்ற பெயரே ஏற்றதாகும். "உத்தமதானனார்" எனவும் ஆம். உத்தமதானபதி என்பதற்குத் தலையாய ஈகையாளர்க்குள் தலைவர் என்பது பொருள். உத்தமம் என்ற பெயர் தலை(மை) என்ற பொருளைத்தருமோ? தரும். என்னை? ஆசிரியர் திருவள்ளுவனார், உத்தமம், மத்திமம், அதமம் என்ற, வடமொழிப் பெயர்களால் கொள்ளத்தக்க பொருள்களைக் குறிக்கும் இடங்களில் முறையே தலை, இடை, கடை என்ற தமிழ் மொழிச்சொற்களால் குறித்தனர். அக்குறிப்புக்களை அவர்தம் முப்பாலுள் காண்க.

வும் நெகிழ்ந்து செல்லாதனவும், மெல்லியனவும் ஆகிய குவிந்த முலைகளை உடைய உமாதேவியாரை ஒரு பக்கத்தில் கொண்டவரே! புள்ளிகள் பொருந்திய மானின் தோலை உடையாக உடுத்தியவரே! நும்முடைய அடிமையாகிய யான் நும்மை வணங்குகின்றேன் என்க.

குறிப்புரை:—இடை - அயல்இடம். போகா - செல்லா, நெகிழ்ந்து செல்லா. ஈர், அணுவினும் சிறிய நுண்ணிய உரு. ஞாயிற்றின் கதிர் சிறுபுழை வழியாய் மனையுள் புகுங்கால், புகை போல நீண்டு தோன்றும் சாயலானது, வளியால் சிதறப்படுமாயின், அச்சாயலின் விலகி நுண்ணியதாகத் தோன்றும் பொருளிற்குத் திரிசரேணு என்று பெயர்;அத்திரிசரேணு எட்டுக்கொண்டது ஈர் என்பது. (மனுத-அத்-8-சுலோ-132) அது, இம்மியுங் கோடேன், இம்மியும் பெற்றிலேன் என்னும் வழக்குப்போல இவண் சிறுமைப் பொருட்டு நின்றது. இளமுலையாள், உமாதேவியார். புடை-பக்கம். உரி - (ஆகுபெயர்) தோல். உம்மை, நும்மை திரிபு. ஏத்துதும் - (ஒருமையிற் பன்மை மயக்கம்) வணங்குகின்றேன். உம், நும் திரிபு. ஆள்-அடிமை.

*சிறப்புரை:— அத்திருப்பதியில் உமாதேவியார் பெயர் இளமுலை நாயகியார் "பால குஜாம்பாள்" என்பது. ஆதலால், "ஈர் இடைபோகா இளமுலை" என்ற தொடருக்கு "ஈர்க்கும் இடையில் நுழையாதபடி புடைதிரண்டு பருத்த முலை" எனல் பொருத்தம் அன்று. அடிகள் திருஅண்ணாமலைத் திருப்பதிகத்துள்ளும் "தளரா முலை முறுவல் உமை" என்றூர்கள். என்னை? அவண், உமாதேவியார் பெயர் உண்ணாமுலை நாயகியா "அபீத குஜாம்பாள்" என்பது ஆதலால். (தளர்தல்-நெகிழ்தல். தளரா-நெகிழா.) அக்குறிப்பு இவண் நினைத்தற்பாலது. தளராமுலை என்ற தொடரில் உள்ள முலை என்ற சொல்லை முல்லை என்ற சொல்லின் விகாரமாகக்கொண்டு முறுவலுக்கு உவமையாகக் கோடலும் ஆம். (தளர்தல்-நெகிழ்தல், பூத்தல். தளரா-பூவா, அரும்பு.) ஆயினும் அப்பொருள் சிறப்பின்று. உமாதேவியார் பெயர் உண்ணாமுலை நாயகியார் ஆதலால்.*

*பீர்க்கு எனவழங்குஞ் சொல் பீர் என நூற்களில் வழங்குமாறு போல ஈர்க்கு என்பதும் ஈர் என வழங்குவதாயிற்று" எனக் கூறிப் "பீரென் கிளவி அம்மொடுஞ் சிவணும்" என்*

(தொல்-எழு-புள்ளி, 70) பாவை விதியாகக் காட்டினர் முன்னு ரைகாரர். அவர் காட்டிய காட்டும் அவர்தம் கருத்தும் பொருத் தம் அல்ல. என்னை? ஆசிரியர் தொல்காப்பியனுர் பீர் என்னும் ரவ்வீற்று மொழிக்கு இலக்கணம் சொல்லினுரன்றிப் பீர்க்கு என்ற குவ்வீற்றுச் சொல்லிற்கு இலக்கணம் சொல்லினரல்லர் ஆதலால். "ஈர்க்கு இடைபோகா ஏர்இள வன முலை"(பொருநர்- 36.) என்றும், "ஈர்க்கிடைபோகா இளமுலை மாதர்தம், கூர்த்த நயனக் கொள்ளையின் பிழைத்தும்"(திருவா—போற்றி—34, 35.) என்றும் கூறிய ஆசிரியர்களின் கருத்தை முன் உரைகாரர், உணர்ந்திலர் போலும். என்னை ? அவர், அவ்வாசிரியர்கள் அவ் வடிகளுள் உமாதேவியார்தம் கன்னித் தன்மையைக் கூறவில்லை என்பதனையும் மானிட மகளிர்தம் பொது வியல்பைக் கூறினுர் கள் என்பதனையும் அறியாமல் அவ்வடிகளை உமாதேவியின் கன்னித் தன்மைக்குக் காட்டாகக் கொண்டார் ஆதலால்.

3. *உள்வீர் போல நொடிமையி னூர்திறம்
கொள்வீ ரல்குலோர் கோவணம்
ஒள்வா ழைக்கனி தேன்சொரி யோத்தூர்க்
கள்வீ ரே!யும காதலே.

முன் பாடம்:—*உள்வேர்.

*முன் உரைகாரர் பொழிப்பு:—(ஒள்ளிய வாழைப்பழங்கள் தேனைச் சொரியும் திருவோத்தூரின்கண் எழுந்தருளிய கள்ளத் தன்மையினையுடைய பரமனே! பலி பெறுதற்குரிய தன்மையுடையவரிடத்தே, ஒரு கோவ ணத்தை, அரையில், அணிந்து, மண்ணுட் சென்று ஊடுருவும் வேர் போலச் சென்று, பலி பெறுவீர். இதுவும் மேற்கூறியனவும் ஆகிய இவை உம்முடைய காதற் செய்கைகளேயாம், எ-று.) என்பது.*

பொருள்கோள்:—ஒள் வாழைக்கனி தேன் சொரி ஓத் தூர்க் கள்வீரே! உம காதல் உள்வீர் போல நொடிமையினூர் திறம் கொள்வீர்! அல்குல் ஓர் கோவணம் (கொள்வீர்!) ஏ.

இ-ள்:—ஒளி பொருந்திய வாழையின் கனிகள் தேன் போலும் இனிய சாறுகளைச் சொரிகின்ற திரு ஓத்தூரின்கண் பொருந்தி இருத்தலை உடைய இறையவரே! (விருப்பும்

வெறுப்பும் இல்லாதவராகிய நீவிர் நம்முடைய அருளினாலே) விரும்புதலை உடையீர்போல (நம்மை) வாழ்த்துவார்தம் பண்பினை (நம் மனத்துள்) விரும்புதலை உடைய இறைய வரே! அல்குல்மீது சிறிய கோவணத்தைச் சார்த்துதலை உடைய இறையவரே! வணக்கம் என்க.

குறிப்புரை:—உள்வீர் - உள்ளுதலை உடையீர், விரும்புதலை உடையீர். நொடிமை - சொல்லுதல், வாழ்த்துதல். நொடிமையினார் - வாழ்த்துவார். திறம் - பண்பு. நலம் எனலும் ஆம். கொள்வீர் - கொள்ளுதலை உடையீர், விரும்புதலை உடையீர். ஓர் - ஒன்று, சிறுமைப் பொருள். கோள்வீர் - கோள்ளுதலை உடையீர், சார்த்துதலை உடையீர். தேன் - (ஆகுபெயர்.) சாறு. சோரி - (வினைத் தொகை) ஒழுகும். "இளவாழை நுதிக் கமழ் தேன் ஒழுகி" (சூளா. சீவய. 282) ஒத்தூர்க்கு - கு, உருபு மயக்கம். அள்வீர் - அள்ளுதலை உடையீர், பொருந்தி இருத்தலை உடையீர். (கள்வீரே எனக்கொண்டு உருவின்றி உறைபவரே - அருபரே எனலும் ஆம்.) காதல் - அன்பு, அருள். "அருள் என்னும் அன்பு ஈன்குழவி" என்பது பொய்யாமொழி. வணக்கம், இசை எச்சம். கோள்வீர் என்பதனைக் கோவணத்தின் முன்னும் கூட்டுக.

சிறப்புரை:—*இப்பாவில் அடிகள்* சைவர்கட்கு இன்றி யமையாத சிறப்பினதாகிய கோவண வேடத்தினைச் சிறப் பித்துக் கூறினார்கள் ஆதலால், அமணர்கட்கு இருப்பின் அமை யாத சிறப்பினதாகிய கோவணமும் இல்லாத (நிர்க்கிரந்த) வேடத்தினை வெறுத்தபடியாம். *சைவர் நூற்களில் சிவபெரு மானை நக்கன் எனக் குறிக்கப்பட்ட இடங்களில் சிலர் அம் மொழிக்கு "திருவாணன்" (கோவணமும் இல்லாதவன்) எனப் பொருள் கூறுகின்றனர். அவர் கூற்றுச் சைவர் நூற்கட்கும் ஒழுக்கத்திற்கும் முரணும். "நக்னன்" என்ற வடசொல்லின் திரிபாகிய நக்கன் என்ற மொழி சிவபெருமானைச் சுட்டி நிற்கும் இடங்களில் (மிக்க உடை இல்லாதவன்) கோவணம ஒன்றனையே உடையாக உடையவன் எனப் பொருள்கோடல் வேண்டும். என்னை? கோவணம் ஒன்றே உடையவனும், மேல் ஆடை இல்லாதவனும், குளிக்குங்கால் (குளித்து) ஈர உடையை உடுத்தி இருப்பவனும் ஆகிய இவர்கள் நக்கன் (நக்னன்) எனற்கு உரிய ரென்பர் அறிஞர் ஆதலால். நக்கன் என்ற சொல்லைத் தமிழ்*

மொழியாகக் கொள்ளின், அம்மொழிக்கு நகைத்தவன் (சிரித்தவன்) எனப் பொருள்கோடல் ஆம். நிற்க,

"நோடிமையினார்" என்ற தொடரினுக்குப் "பலி பெறுதற்கு உரிய தன்மை உடையார்" என்று பொருள் எழுதினர் முன்னுரைகாரர். அத்தொடரினுக்கு அப்பொருள் கோடல் தமிழ்த்தேஎத்தில் இல்லாத வொருவழக்கு. குதிரைக்கோடு போல. என்னை ? சில சொற்கள் உடன்பாடு எதிர்மறைகட்குப் பொதுவாகவும், தன்வினை பிறவினைகட்குப் பொதுவாகவும், தற்கிழமை பிறிதின் கிழமைகட்குப் பொதுவாகவும் நிற்பது போலத் தோன்றினும் அவை, பொருள் திரிபுற, வினை திரிபுற, கிழமை திரிபுற, இடம் திரிபுற, பொருள் தருதல் இல்லை ஆதலால். "நோடிமை" என்ற சொல்லுக்குப் பொருளும் இடமும் திரிபுற "பலிபெறுந்தன்மை" எனப் பொருள் கோடல் குற்றம் ஆம். என்னை ? இருத்தல் என்ற சொல்லால் கொள்ளப் படும் பொருளுக்கு நடத்தல் என்ற சொல்லையும், வெண்மை என்ற சொல்லால் கொள்ளப்படும் பொருளுக்குச் செம்மை என்ற சொல்லையும், இயம்புதல் என்ற சொல்லால் கொள்ளப் படும் பொருளுக்கு ஏற்றல் என்ற சொல்லையும் பெயர்களாக வைத்துப் பொருள்கொள்ளுதல் திரிபாதல் போலச் சோல்லுதல் என்னும் பொருள் கொள்ளுதற்கு உரிய "நோடிமை" என்ற சொல்லுக்குப் "பலி பெறுதற்கு உரிய தன்மை உடையார்" என வினை திரிபுற பெறுதல் என்ற பொருள் கோடலும் திரிபாம். அன்றி, "நோடிமை"என்றசொல்லுக்குப்"பலி பெறுதற்கு உரிய தன்மை உடையார்" என ஐந்து சொற்களால் ஆகிய ஒரு நீண்ட தொடரின் பொருளை விரித்துக் கூறுதலும் நூல் வழக்கன்று.

மற்றும், அவர், திருக்கயிலாயத் திருப்பதிகத்துள்ளே "முடியசடை" என்ற பாவில் செடியுடைய தலையில், வெடிய வினை கொடியர்கெட விடுசில்பலி நோடிய மகிழ் அடிகள் இடமாம்" என்ற தொடரைக் காட்டி "நோடிதல்—பலிபெறுதல்" என்றார். அவர், அத்தொடரினை உடைய பாவிற்கு என்ன பொருள் கொண்டனர் என்பது விளங்கவில்லை. அத்தொடரில் உள்ள "இடு சில்பலி" என்பதனைச் "சில்பலி இடு" என மொழி மாற்றிச் "சில்பலி இடு மகிழ் அடிகள்" எனத் தொடராக்கித் "தாருகாவனத்து முனிவர்தம் மனைவியர்கள், "சிலவாகிய பலியை இடுதற்கு நோடிய (அழைக்க) அதற்கு மகிழ்ந்த அடிகள்" எனப் பொருள் கோடல் வேண்டும் என்பது என் எண்

ணம். அன்றிச், சிலவாகிய பலியை இடும்படி நோடிய (கேட்பதற்கு) விரும்பிய அடிகள் எனலும் ஆம். அடிகள் இப்பதிகத்துள் "மிக்கார்" என்ற பாவில் பலிஇடநக்கீரே" என்ற குறிப்பினை இவண் நினைக்க. "நோடிமை—சொல்லல். நோடிய—சொல்ல. (அழைக்க, கேட்க) எனப் பொருள் கோடலே சிறப்பாம். நோடிதல், நோடிமை என்பவற்றுக்குப் பலி பெறுதற்குரிய தன்மை உடையார் எனல் பிழையாம். "உள்வீர்" எனப் பாடங் கொள்ளுதலே சிறப்பாம். என்னை? எதுகை எழிலாலும் பொருள் பொலிவாலும்.

முன்னிருந்த "உள்வேர்" என்ற பாடத்தினையே வேண்டுபவர் "உம காதல் வேர் உள் போல நோடிமையினூர்" திறம் கொள்வீர்! அல்குல் ஓர் கோவணம் (கொள்வீர்!)" என முன் இரண்டடிகளையும் மொழி மாற்றிக்கொண்டும், "நோடிமையினூர்" என்ற பாடத்தினை "நோடிமையிலார்" எனத் திருத்திக் கொண்டும், மேல் வருமாறு பொழிப் புரைத்துக் கொள்ளுக:— "ஒள்ளிய நிறத்தனவாகிய வாழையின் கனிகள், தேன் போலும் இனிய சாறுகளைச் சொரிகின்ற திரு ஓத்தூரின் கண் பொருந்தி இருக்கும் இறையவரே! வாரமும் ஓரமும் இல்லாதவராகிய நீவிர், நும் அருளினாலே நும்மனத்தகத்தே வேரை (வெகுளியை) உடையீர் போல வெகுண்டு நும்மை வாழ்த்தும் இயல்பு இல்லாதவராய் இகழ்பவருடைய வன்மைகளை அழிப்பவரே! அல்குல்மீது சிறிய கோவணத்தைச் சார்த்துபவரே! வணக்கம்" என்க.

இப்பொழிப்புக்கு உரிய குறிப்புரை:—உள்—இருத்தல்; உடையீர் என்னும் பொருட்டு. வேர் - வெகுளி. "பொள்ளென ஆங்கே புறம் வேரார்" (திருக்கு—487) "வெகுளி என்பர் வேரமும் ஆகும்" (பிங்கலம்—வகை—6. பா—114) அடிகளும் "திகழ் பாலன்மேல், வேர்ப்பது செய்த வெங்கூற் றுதைத்தானும்" (புகலி—தேவா) என வேர் என்னுஞ் சொல்லை வெகுளிப்பொருட்டில் ஆண்டார்கள். நொடிமையினூர்—நொடிமை: வாழ்த்துதல், இனூர்: (இன்னூர் விகாரம்) வருந்துபவர், வாழ்த்துதற்கு வருந்துபவர், வாழ்த்தும் இயல்பு இல்லாதவராய் இகழ்ந்தவர் எனலும் ஆம். திறம்—வன்மை. கொள்ளல், அழித்தல் பொருட்டு. கொள்ளல், சார்த்தல்பொருட்டு. கொள்வீர் என்பதனைக் கோவணத்தின் முன்னுங் கூட்டுக.

4. **தோட்டீரே! துத்தி யைந்தலை நாகத்தை**
**ஆட்டீரே! யடியார் வினையை**
**ஓட்டீ ரே! யுமை யேத்துது மோத்தூர்**
**நாட்டீ ரே! யரு ணல்குமே.**

*முன் உரைகாரர் மொழிப்பு:—(தோடும், புள்ளிகளை யுடைய ஐந்து தலை நாகத்தை யாட்டுதலும், அடியார்களின் வினையைப் போக்குதலும் உடையவராய்த் திருவோத்தூர் நாட்டின்கண் எழுந்தருளிய பரமனே! உம்மை ஏத்துகின்றேம்; ஆகையால் எங்களுக்குத் திருவருள் பாலிப்பீராக, எ-று.) என்பது.*

இ - ள்:—திருவோத்தூராகிய திருப்பதியை ஆட்சியாக உடைய இறையவரே! இடக்காதில் தோடு என்னும் அணியை உடையவரே! பொறிகள் பொருந்தி விரிந்தகன்ற படமாகிய தலையை உடைய நாகத்தை ஆட்டுதலை உடையவரே! நும் அடியார்களின் பாபங்களைப் போக்குதலை உடையவரே! நும் அடிமையாகிய என்னுடைய பாபமும் நீங்குதற் பொருட்டு யான், நும்மை வாழ்த்துகின்றேன். எனக்கும் அருள் செய்வீராக என்க.

குறிப்புரை:—தோடு, இடக்காதில் அணியப்படும் அணி. துத்தி - பொறி. ஐ - (பை என்னும் சொல்லின் விகாரம்) படம். மலர் அலர் ஆனாற்போல மொழி முதல் மெய் கெட்டதெனக் கொள்ளுக. ஐ + தலை, ஐந்தலை - பைபோன்ற தலை, படமாகிய தலை. "பைவிரிதுத்திப் பரிய பேழ்வாய் நாகம்" (நள், ஆல-தேவா) ஆட்டீர்-ஆட்டுதலை உடையீர், ஆட்டுபவரே. "சிவபெருமான் திருக்கூத்து ஆடுங்கால் அப் பெருமான்மீது அணியப்பட்ட நாகமும் ஆடும். அந்நாகத்தின் செயலை அதன் செயலுக்கு ஏது வானவனாகிய அப்பெருமான் மீது ஏற்றிக் கொள்ளுக. "ஆடு அரவு ஆட ஆடும் எம் அடிகள்" (அச்சிறு-தேவா.) ஆட, காரியப் பொருட்டு. ஓட்டீர்-ஓட்டுதலை உடையவரே. ஏத்துதும்-(ஒருமையில் பன்மை மயக்கம்) வாழ்த்துகின்றேன். நாட்டீரே, நாடு-திருப்பதி. அருள் நல்கும்-அருள் செய்வீராக. ஏ, அசை.

சிறப்புரை:—பண்டு வடவர் மகளிர் ஒரு காதில் தோடும், ஒரு காதில் குழையும் அணிதல் வழக்குப்போலும். என்னை? "நெய்விலைப் பசும்பொன் தோடும் நிழல்மணிக் குழையும் நீவி,

மைவிரி குழலினளே" (சீவகசிந்-488.) "வாணுதல் பட்டம் மின்ன வார்குழை திருவில் வீசப் பூண்முலைப் பிறழப் பொன் தோடு இடவயின் நுடங்க" (சீவகசிந்-1257.) "தோடு கொண்டு ஒரு செவி விளங்கத் துளங்குவ மகரம் ஒன்று ஆட" (நீலகேசி-67.) என இரு ஆசிரியர்களும் ஒரு காதில் தோடும், ஒரு காதில் குழையும் ஆகக்கூறி இருவகைக் காது அணிகளால் மகளிரையே சிறப்பித்தார்கள் அல்லாமல், அவர்கள், ஒரு காதில் தோடும், ஒரு காதில் குழையும் ஆகக்கூறி ஆடவர்களை இருவகைக் காது அணிகளால் ஓரிடத்தும் சிறப்பித்திலர் ஆதலால்.

ஆசிரியர் தோலாமொழித்தேவர் "மாடெலாம் எரிந்து மின்னும் வயிரக் குண்டலந்தோடு அம்பொன், தோடுலாம் துளங்கித் தோன்றும் சுடிகைவாண் முகத்து நல்லார்" (சூளா-சீயவ-104.) "மகரப் பைம்பூண் மடவார்கள் வயிரக் குழையும் பொன் தோடும்" (சூளா-அரசி-347.) என மகளிர், தம் இரு காதுகளிலும் ஒரு காதில் தோடும் ஒரு காதில் குழையும் ஆக இருவகை அணிகளை அணியும் வழக்கத்தினைக் கூறிச் சிறப்பித்தனர். ஆயினும் அவ்வாசிரியரே, ஆடவனைச் சிறப்பிக்குங்கால் "மணி குண்டலங்கள் இருபாலும் வந்து வரையாகம் மீது திவளத், துணி கொண்டு இலங்கு சுடர் வேலினோடு வருவான் இது என் கொல் துணிவே" (சூளா-அரசி-197.) என ஆடவர்கள் தங்களுடைய இரு காதுகளிலும் குண்டலம் அல்லது குழை ஆகிய ஒருவகை அணியையே அணியும் வழக்கினைக் கூறிச் சிறப்பித்தனர். ஆதலால், பண்டு, வடவர் மகளிர் ஒரு காதில் தோடும் ஒரு காதில் குழையும் அணிதல் வழக்கு என்றும், அவ்வட ஆடவர்கள், தங்களுடைய இருகாதுகளிலும் குண்டலம் (குழை) என்ற ஒரு வகை அணியையே அணிதல் வழக்கு என்றும் கொள்ளுக. இவ்வேதுக்களினால், ஆடவர்கள் தம்முடைய இரு காதுகளிலும் ஒரு காதில் தோடும், ஒரு காதில் குழையும் ஆக இருவகை அணிகளையும் அணிவர் என்ற முன் உரைகாரர் கூற்று வழுவாம் எனக் கொள்ளுக. "ஒரு குழை ஒருவன் போல" (கலி—26, 105.) எனப் பலராமனைச் சிறப்பு நோக்கி இனம் பிரித்துக் கூறியதாலும் பிற ஆடவர் இருகாதுகளிலும் குழையாகிய ஒரு வகை அணியை அணிதலே வழக்கு எனக் கொள்ளுக. சிறப்பு நோக்கி என்றது என்னை? "பலராமன், யமுனையால் அளிக்கப்பட்டதும் மிகச் சிறந்ததுமான ஒரு குண்டலத்தை அணிந்தனன் என்பது புராண கதை" என்றார்கள் ஆசிரியர் பிரம்மஸ்ரீ இ. வை. அநந்தராமையர்

அவர்கள். (தம் கலித்தொகைப் பதிப்பில், கலி-105-உரை.) அக்கதையின் விரிவை வல்லார் வாய்க் கேட்டுணர்க. சிவ பெரு மான் சக்தி, சிவம் ஆகிய இருவகை உருவன் என்பதற்கு ஏற்பச் சைவ சமயாசிரியர்கள் தங்கள் தேவாரங்களில் அப்பெருமானைச் சிறப்பித்துக் கூறுங்கால் ஒரு காதில் தோடும், ஒரு காதில் குழை யும் ஆக இருவகைக் காது அணிகளாலும் சிறப்பித்துக் கூறி னார்கள் போலும். ஒரு காதில் தோடும் ஒரு காதில் குழையும் ஆக இரு காதுகளிலும் இருவகை அணிகளை அணிதல் தமிழ் மகளிர்தம் வழக்கன்று. என்னை? பண்டைய தமிழ் நூற்களுள் கூறப்படாததால். முன்னுரைகாரர், தமிழர்தம் வழக்கு அல் லாததாகிய ஒரு காதில் குழையும் ஒரு காதில் தோடும் ஆக இரு காதுகளிலும் இருவகையாக அணிகளை அணியும் வழக்கத்தைத் தம் உரையிடையே எடுத்துக் காட்டியதன் ஏது விளங்கவில்லை. அவர், தோடு பெண்களுக்கும் உரித்து (பக் 28.) என்றதனாலும், "வாணுதற் பட்ட மின்ன" (சீவகசிந்-1257) என்ற தொட ரையும், "தோடகமா யோரீ காதும் ஒரு காது இலங்கு குழை தாழ" (நறை—தேவா) என்ற தொடரையும் எடுத்து ஆண்ட தாலும் ஆடவரும் தோடு என்னும் அணியை அணிவர் என்பது அவர்தம் கருத்துப் போலும். அப்படி கருதுதலும் தவறேயாகும்.

நாகத்தை ஆட்டினர் என்றதற்குத் தலபுராணத்தில் இறைவன் பாம்பாட்டியாக வந்து சமணர்கள் அடிகள் மீது ஏவிய பாம்பின் வன்மையைக் கெடுத்து அப்பாம்பினை ஆட்டினன் என்ற கதை யைக் குறித்தபடி எனலும் ஆம். தேவாரங்களில் ஐ + தலை நாகம், ஐந்தலை நாகம் எனவரும் இடங்களில் (பை + தலை) பைத்தலை என்றசொல்லின் திரிபாகக்கொண்டு பையாகியதலை, பைபோன்ற தலை, பையை உடைய தலை + நாகம் எனவும், ஐவாய் நாகம் என வரும் இடங்களில் மைவாய் அல்லது பை வாய் என்ற சொற்க ளின் திரிபாகக் கொண்டு நஞ்சு பொருந்திய வாயையுடைய நாகம், அல்லது பை போன்ற வாயையுடைய நாகம் எனவும் பொருந் தும் வழி அறிந்து பொருள்கோடல் வேண்டும் என்பதூஉம், ஐ என்ற மொழிக்கு ஐந்து என எண்ணல் அளவையால் பொருள் கோடல் உண்மைப் பொருள் அன்றும் என்பதூஉம் என் நம்பிக்கை. என்னை? இருதலை நாகம் முத்தலை நாகம் எனவும், இருவாய் நாகம், மூவாய் நாகம் எனவும் பலவாகத் தலையையும், வாயையும் எண்ணல் அளவையால் இயம்பும் வழக்குப் பண்டைய நூற்களுள் இன்மையால்.

5. குழையார் காதீர் கொடுமழு வாட்படை
உழையாள் வீர்திரு வோத்தூர்
பிழையா வண்ணங்கள் பாடிநின் றுடுவார்
அழையா மேயரு ளல்குமே.

*முன் உரைகாரர் பொழிப்பு:—(குழை அணிந்த காதினையுடையீராய், கொடிய மழுவாயுதத்தையும், மானையும் ஏந்துகின்ற பரமனே! திருவோத்தூரின்கண் மூவகை வண்ணங்களும் பொருந்திய பாட்டுக்களைப் பிழையின்றிப் பாடி, திருமுன் நின்று ஆடும் அடியவர், தேவரீரைக் குரலிட்டு அழையாதவாறு அவர்களுக்கு அருள் நல்குதல் வேண்டும். எ-று.) என்பது.*

பொருள்கோள்:—பிழையா வண்ணம் கள் பாடி நின்று ஆடுவார் அழையாமே அருள் நல்கும் கொடு மழு வாள் படை குழை ஆர் காதீர்! திரு ஓத்தூர் உழை ஆள்வீர்! ஏ.

இ-ள்:—அன்பு பொருந்திய மனத்தினராய் நம்முடைய புகழைச்சொல்லி ஆநந்தத்தால் குதித்துக் கூத்து ஆடுவாராகிய நம் அடியார்கள், இடையூறு உற்று ஐயோ எனக்கூவி வருந்தாதபடி அவர்கட்கு அருள் செய்கின்ற, கொடிய பரசாகிய ஒள்ளிய படையையும், குழைபொருந்திய காதினையும் உடைய இறையவரே! திரு ஓத்தூராகிய திருப்பதியை ஆட்சியாகக் கொண்ட இறையவரே! வணக்கம் என்க.

குறிப்புரை:—குழை, வலக்காதில் அணியப்படும் அணி. ஆர்-பொருந்திய. குழையார்காதீர் - (குறிப்பு வினையாலணையும் பெயர்) இறையவரே. மழு-பரசு. வாள்-ஒளி. மழுப்படை, இரு பெயர் ஒட்டு. மழுவாள், இருபெயர் ஒட்டெனலும் ஆம். உழை, ஏழனுருபு. "சூலமொடு ஒண்மழு ஏந்தி" (வேட்-தேவா.) பிழையா வண்ணம்-வஞ்சனை இல்லாத இயல்பினராய், அன்பு பொருந்திய மனத்தினராய். கள், அசை. பாடி-சொல்லி. நின்று, (இடைச் சொல்) அசை. ஆடுவார்-அடியார். அழைத்தல்-கூவுதல். (நீலகேசி-20-உரை) அழையாமே-கூவாமே, கூவிவருந்தாதபடி. "அருள் நல்கும் காதீர்" என முடிக்க. "அருள் செய்கின்றவரும் காதினை உடையவரும் ஆகிய இறையவர்" என முடித்தலும் ஆம். வணக்கம், இசையெச்சம்.

*சிறப்புரை:—மழு என்னும் பொருளின் விளக்கத்தினை முதற் பாவின் சிறப்புரைப் பகுதியுள்காண்க. இவ்வகைப்பொருள்*

கோடல் அன்றி, வருந்துவான் ஒருவனுக்கு அயலான் ஒருவன் ஏதுவின்றி ஒரு கடவுளை அருள் செய்யும்படி ஏவினன் எனல் சிறப்பில் பொருளாம். என்னை? அருளும்வகையை அருளையுடைய அப்பெருமானே அறிகுவன் ஆதலால். சைவசமய ஆசிரியன்மார் மூவரும் முறையே பாம்பின் நஞ்சால் இறந்துபட்ட மருகல் வணிகனையும், அப்பூதி நாயனார் மகனையும், பல ஆண்டுகளின் முன் முதலையால் விழுங்கப்பட்ட பார்ப்பனச் சிறுவனையும் உயிர் பெற்று எழும்படி செய்ய இறைவனிடம் விண்ணப்பித்துப் பாடிய செயல், இறைவனைப் பிறர்பொருட்டு அருள்செய்யும்படி ஏவிய செயலன்றோ எனின், அன்று. என்னை? அவர்கள்செயல், இறந்துபட்டவர்களின் சுற்றத்தினர் மாட்டுக்கொண்ட இரக்கத்தால் ஆகிய சிறப்புச் செயலாம். பொதுச் செயலன்று ஆதலால்.

இப்பாவிற்கு மற்றும் ஒரு பொருள்: "குழை பொருந்திய காதினை உடையீரும் கொடிய மழுவாகிய ஒள்ளிய படையையும், மானையும் ஆட்கொண்டீரும் ஆகிய திருஓத்தூரின்கண் எழுந்து அருளிய இறைவரே! என, அன்பு பொருந்திய மனத்தினராய்ச் சிவபெருமான் உடைய புகழைச் சொல்லி ஆநந்தத்தால் குதித்து ஆடுவார் ஆகிய அடியார்கள் துன்புறுங் காலங்களில் அவ்வடியார்கள், இறைவரே! எம்மைப் பாதுகாக்க வேண்டும் எனத் தம்மை அழைக்காமுன்னே தாமே தம்அருளைச் செலுத்தி அவர்களுடையதுன்பங்களைப் போக்குவர்" எனவும் ஆம்.

6. மிக்கார் வந்து விரும்பிப் பலியிடத்
தக்கார் *தமக்களீ ரென்று
உட்கா தாருள ரோ?திரு வோத்தூர்
நக்கீ ரே!யரு ளல்குமே.




முன்பாடம்:—*தம்மக்க ளீரென்று.

முன் உரைகாரர் பொழிப்பு:—(சிவனடியார்களாகிய உயர்ந்தோர் தம் மனைவாயிலில் வந்து நின்று, தம்மை யேற்று விரும்பிப் பலியிடுமாறு, "தக்கோருடைய மக்காள்!" என்று கூறி யழைத்தால், கேட்டு, அவரை உபசரிக்குங்கால் குற்றம் நிகழா வண்ணம் அஞ்சி ஒழுகாதவர் உளரோ; இலர்; ஆகலின், திருவோத்தூரின்கண் எழுந்தருளிய நக்கவேடம் பூண்ட பரமனே! தேவரீர் திருவருள் புரிதல் வேண்டும். எ-று.) என்பது.

பொருள்கோள்:—மிக்கார் விரும்பி வந்து பலி இட நக்கீரே! திரு ஓத்தூர் தக்கார் தமக்கு அளீர் என்று உள்காதார் உளரோ? அருள் நல்கும் ஏ.

இ-ள்:—கற்பின் சிறந்தாராகிய தாருகாவனத்து முனிவர்தம் மனைவியர், அன்பு மிக்காராய் நம்முன் வந்து ஐயம் இட அவர்களைக் கண்டு நகைத்தவரே! திரு ஓத்தூரின்கண் எழுந்தருளிய இறையவரே! தேவர்கோன் முதலிய பெருமை மிக்காருள் எவரேனும் தங்கட்கு அருள் செய்யவேண்டும் என்று நம்மைத் தம்மனத்துள் நினையாதவர் ஒருவர் உளரோ? இலர். ஆதலால், நம் அடிமையாகிய யான் எனக்கும் நீவிர் அருள் செய்யவேண்டும் என நம்மை வணங்குகின்றேன் அருள் செய்வீராக என்க.

குறிப்புரை:—மிக்கார்-கற்பின் சிறந்தார். விரும்பி-அன்பு மிக்காராய். வந்து-முன்வந்து. பலி-உணவு, ஐயம். தக்கார்-பெருமைமிக்கார். அளீர் - (அளியீர் விகாரம். ஈர்: ஏவற் பன்மை விகுதி) அளிப்பீராக, அருள் செய்ய வேண்டும். உட்காதார்-உள்காதார், நினையாதார். உளரோ-(ஓ, எதிர்மறை) இலர். திரு ஓத்தூர், (ஆகு பெயர்) இறையவர். திரு ஓத்தூரீர் விகாரம் எனலும் ஆம். நக்கீரே-நகைத்தவரே. அருள் நல்கும்-அருள் செய்வீராக. யானும் வணங்குகின்றேன், இசையெச்சம்.

*சிறப்புரை:—தக்கார்தம் மக்களீர்எனப் பாடங் கொள்ளுதலும், பலி வேண்டுவோர் பலி இடுவோரைத் தக்கோருடைய மக்காள் என அழைப்பார் என்று கூறுதலும் மரபு வழுவாம். என்னை? அவ்வகை அழைப்பு நம் தேசத்தில் எவ்வகை மதத்தாரிடத்தும் இல்லை ஆதலால். "உயர்திணை என்மனார் மக்கள் சுட்டே" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார். ஆதலால், மக்கள் என்பது ஆண், பெண் ஆகிய இருபாலாரும் விரவிய பலர்பால் பெயராம். ஆகவே, ஐயம் வேண்டுவோர் ஆணொழித்து மகளிரிடத்து வேண்டாமல் இருபாலாரிடத்தும் வேண்டுவோர் எனலும் பொருத்தமின்றாம் "மக்களீர் என்பது பெரும்பான்மையும் ஆணொழிந்து நின்றது" என்றார் முன்னுரைகாரர். அவர், அவ்வகை நுண்பொருளை எந்நூலகத்துக் கண்டனர் என்பது விளங்கவில்லை. அவர்தம் மொழிப்பு உரையின்படி எவரது ஒழுக்கத்திற்கு எவருக்கு அருள் செய்யவேண்டும் என்பதும் விளங்கவில்லை. இத்தகைய மொழிப்பும் பழிப்பில் மொழிப்பாமே.*

7. தாதார் கொன்றை தயங்கு முடியுடை
நாதா வென்று நலம்புகழ்ந்து
ஓதா தாருள ரோ?திரு வோத்தூர்
ஆதீ ரே!யரு ணல்குமே.

*முன் உரைகாரர் பொழிப்பு:—(திருவோத்தூரின்கண் எழுந்தருளியுள்ள முதல்வரே! தேன் நிறைந்த கொன்றைமாலை விளங்குகின்ற முடியையுடைய தலைவா! என்று உம்முடைய நலங்களைப் புகழ்ந்து ஓதித் துதிக்காதவர்கள் உண்டோ? இல்லை. ஆகையால், தேவரீருடைய திருவருளாகிய பரமுத்தியைக் கொடுத்தருளுவீராக. எ-று.) என்பது.*

பொருள்கோள்:—திரு ஓத்தூர் ஆதீரே! தாது ஆர் கொன்றை தயங்கும் முடி உடை நாதா! என்று நலம் புகழ்ந்து அருள் நல்கும் ஓதாதார் உளரோ? ஏ.

இ-ள்:—திரு ஓத்தூரின்கண் எழுந்தருளிய முதல்வரே! என்றும், இதழ்கள் பொருந்திய கொன்றை மலர்களை விளங்கும்படி சூடிய முடியை உடைய தலைவரே! என்றும், நம் பெருமையைப் புகழ்ந்து சொல்லித் தமக்கு அருள் செய்ய வேண்டும் என்று நம்மைக் கேளாதவரும் உளரோ? மூவுலகினும் இலர். ஆதலால், நம் அடிமையாகிய யான், எனக்கும் நீவிர் அருள் செய்ய வேண்டும் என நும்மை வணங்குகின்றேன் அருள் செய்வீராக என்க.

குறிப்புரை:—தாது - (ஆகுபெயர்) இதழ். தேன் எனலும் ஆம். ஆர்-பொருந்திய. தயங்கல்-ஒளிர்தல். நாதா-(வடசொல் திரிபு, விளி.) தலைவரே. பன்மையில் ஒருமை மயக்கம். நலம்-பெருமை. ஓதுதல்-மொழிதல். ஓதாதார்-மொழியாதார், கேளாதவர்; உளரோ - (ஓ, எதிர்மறை,) இலர். ஆதீரே- (ஆதியீரே விகாரம்) முதல்வரே. அருள் நல்கும்-அருள் செய்வீராக. ஏ, அசை.

சிறப்புரை:—*முன் உரைகாரர்தம் உரைச்செயல், உழைப்பாளி செய்த தொழிலுக்குரிய கூலியைத் தனக்குக் கேட்கும் விழிப்பாளியின் செயலொடு ஒப்பதாம் என ஒழிக்க. அவர் தம், முற்பாவின் (6-வது பாவின்) உரையையும் இவ்வகையே கொள்ளுக. என்னை? அவர்தம் பொழிப்பு உரையை ஆழ்ந்து சூழ்ந்து நோக்குக.*

8. என்று நிம்மலை யென்ற வரக்கனை
வென்றார் போலும் விரலினால்
ஒன்றார் மும்மதி லெய்தவ னோத்தூர்
என்றார் மேல்வினை யேகுமே.

*முன் உரைகாரர் பொழிப்பு:—("இம்மலைதான் எனக்கு யாதாகும்!" என்று கூறி, அதனை எடுக்க முயன்ற அரக்கனாகிய இராவணனைத் தம் கால் விரலை யூன்றி வென்றவரும், பகைவராகிய திரிபுரத்தசுரர்களின் மூன்று மதில்களையும் அம்பை எய்து அழித்தவருமாகிய பரமனுடைய திருவோத்தூர்" என்று சொல்லிப் புகழ்பவருடைய, இனிமேல் அனுபவிக்க வேண்டிய வினைப்பயன் அவரை விட்டு நீங்கிப் போகும், எ-று.) என்பது.*

பொருள்கோள்:—இம்மலை என்று ஆன் என்ற அரக்கனை எனவும், விரலினால் வென்றார் போலும் எனவும் மொழி மாற்றுக.

இ-ள்.—இராவணன், தான் சென்ற வழியில் தடையாய்க் குறுக்கிட்டு நின்ற கயிலை மலையைப் பெயர்த்து எறிவான், இம்மலை என்வன்மைக்கு எம்மாத்திரம் என்று வன்மை பேசியவனாய் அம்மலையைப் பெயர்க்க அசைத்த போது அம்மலையின் தலையில், தன் காலின் விரல் ஒன்றனை ஊன்றி அவ்வரக்கன் வலியைக் கெடுத்தவரும், பகைத்தவர் தம் மூன்று மதில்களையும் ஒரே அம்பினை எய்து எரியும்படி செய்து அழித்தவரும் ஆகிய இறையவர் எழுந்தருளிய இடமானது திரு ஓத்தூராகிய திருப்பதி என்று சொல்லிப் புகழ்வாரைப் பாவங்கள் பற்றாமல் நீங்கும். ஆதலால், என் பாவமும் நீங்கும்பொருட்டு யானும் புகழ்கின்றேன் என்க.

குறிப்புரை:—என்று, எற்றுவிகாரம். எற்று—எம்மாத்திரம். ஆன், அசை. அரக்கன், இராவணன். வென்றார், இறைவர். வென்றன் என இருப்பின் சிறப்பாம். போலும், ஒப்பில் போலி. ஒன்றமை, பொருந்தாமை. ஒன்றார் - (அன்பு) பொருந்தாதவர், பகைவர். எய்தவன், (ஒருமையில் பன்மை மயக்கம்) இறைவர். என்றார்மேல் - (மேல், உருபு மயக்கம்) என்றாரை. வினை - (தீவினை விகாரம்) பாவம். ஏகும்-நீங்கும். ஏ-அசை.

சிறப்புரை:—*இராவணன், கயிலை மலையைப் பெயர்த்த நிகழ்ச்சியைச் சிவமகாபுராணம் வேறுவகையாகக் கூறும். இராமாயணம் - உத்தரகாண்டம் - வரையெடுத்த படலத்துள்* 140.

வது பாவின் "பிறைச்சடை முடிக்கடவுள் பொன்திருவடி பெரு விரல் தலையினால், நெறுக்கென அழுத்திட உடல் பொறைபதைப்ப நிருதர்க்கு இறைவனும்" என்ற இடையடிகள் இரண்டனையுங் காட்டி: "நெருக்கென அழுத்துவதைவிடப் பைய ஊன்றுதலே பரமனுடைய பெருங்கருணைச் செயலாகும்" என்றார் அன்றி, அதற்குக் காட்டாக "உரம்நெரிய மெள்ளவிரல்வைத்து" (தோணி—தேவா.) என்ற தொடரையும் காட்டினார் முன்உரைகாரர். அவர், திருக்கயிலாயத் திருப்பதிகத்துள், "அரக்கன் உணராது, ஒருத்தியை வெருக்குற வெருட்டலும், நெருக்கென நிறுத்த விரலால்" என்ற தொடரில் உள்ள நெருக்கென என்பதற்கு யாது பொருள் உரைப்பரோ! நிற்க, அடிகள், பைய என்ற சொல்லை இப்பாவினுள் ஆண்டிலர். ஆதலால், அவ்வுரைகாரர், பைய ஊன்றுதல் என்ற குறிப்பை எதன் பொருட்டு எவரைக் குறைகூறுவான் அவ்வுரையிடைக் குறித்தார் என்பது விளங்கவில்லை. அன்றியும், "நெறுக்கென" என்று எதுகையிடத்து நின்ற சொல்லை "நெருக்கென" எனவும், அப்பாவின் 140-வது எண்ணை 71-வது எனவும், மாற்றியதன் எதுவும், இராமாயணம் உத்தரகாண்டத்தின் ஆசிரியர் கம்பர் என்றதன் எதுவும் விளங்கவில்லை. நிற்க, அப்பாவின் எண் 71 என்ற குறிப்பால் அவர் முழுநூலைப் பார்த்தவர் அல்லர் என்பதும், பள்ளிச்சிறுஅர் கட்காகத் திரட்டப்பட்டதாகிய தொகைநூலைப் பார்த்தவர் என்பதும் தெரிகின்றன. கம்பர் பைய எனச் சொல்லத் தெரியாமல் நெருக்கெனக் கூறினார் என அவரைக் குறை கூறுதற்குக் கம்ப ராமாயணம் என்றார்போலும். என்னை? தாம் கம்பரை வைதால் தம்மைப் பிறர் பெரிய அறிஞர் என மதிப்பர் என்பது அவர்தம் எண்ணம் போலும். அவர் காஞ்சியில் ஒரு கூட்டத்தில் கம்பர் சேக்கிழாரைப் பாடாததால் அவர், ஒரு புலவரல்லர் எனவும், உமாபதிசிவமும், மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையும் பெரும் புலவர்கள் ஆகையால் அவர்கள், சேக்கிழாரைப் பாடினார்கள் எனவும் கூறியதனை யானே நேரில் கேட்டேன். அன்றி, அவர், பிறரை வைதலே தமக்குப் புகழாதற்கு எது என்ற எண்ணத்தைக் கொண்டவர் எனப் பிறவகையாலும் யான் நம்புகின்றேன்.

இராமாயணம், உத்தரகாண்டத்தின் ஆசிரியர் "நெறுக்கென" என்றது விரைவுப்பொருட்டு என்றும், அடிகள், தம் தேவாரத்தில் "உரம்நெரிய மெள்ள விரல் வைத்து" (தோணி-தேவா.) என்றது மென்மைப் பொருட்டு என்றும் கொள்ளல் வேண்டும். என்னை? அடிகளும் "அரக்கன் உணராது, ஒருத்

தியை வெருக்குற வெருட்டலும் நெருக்கென நிருத்த விரலால்" என்றூர்கள் ஆதலால். அவ்விரு ஆசிரியர்தம் கருத்துக்களின் வேற்றுமைகள், ஆசிரியர் கவிச் சக்கரவர்த்தியாராகிய கம்பர்தம் புலமையை அளவிட்டு அறிந்து அவர்களைப் (பொய்ந்நெறியால்) புறக்கணித்துப் புகலும் புலமையார்க்குப் புலப்படாது போதலும் ஒரு புதுமையே? அவர் புலமை உடையர் அல்லர் போலும். என்னை? புலமை உடையார் பிறரைப் பழியார் ஆதலால். புகழ்ச்சிக்குரிய பலவின் கனியும் கருப்பங் கழியும் இனித்தலும், இகழ்ச்சிக்குரிய எட்டிக்கனியும் வேப்பங் குழையும் கைத்தலும், அதனதன் பிறவிப் பண்பே, அதுபோல ஒருவரை ஒருவர் புகழ்தலும் ஒருவரை ஒருவர் இகழ்தலும் அவரவர் பிறவிப்பண்பேயாம். ஆகவே, "தவமும் தவமுடையார்க்கு ஆகும் அவம் அதனை, அஃதிலார் மேற்கொள்வது" (திருக்கு—262) "நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக், குலத்தின்கண் ஐயப்படும்" (திருக்கு-958) என்ற பொய்யா மொழிகளைப் போற்றிப் பொறப்பிலார் புல்லுரைகளைப் புறக்கணித்தலே நற்புறு செயல் என்பர் நன்னெறியறிந்த நாவலர். ஆதலால், அத்தகையார்தம் பழிப்பைமறக்க. நிற்க,

அவ்வுரைகாரர், தம்மால் காணப்பட்ட நூற்கள் பலவற்றினின்றும் ஒவ்வொருசொல்லை ஒவ்வொருதொடரை அச்சின்னஞ் சிறுநூலுள் புகுத்திக்காட்டிப் பலநூற்களைக் கற்றூரொடு தாமும் பெருமைபெற வெண்ணிய தம் பேரவாவால் பிழைசெய்தார் போலும். என்னை? "கல்லாத மேற்கொண்டு ஒழுகல் கசடு அற வல்லதூஉம் ஐயம் தரும்" என்பதூஉம் "அரங்கின்றி வட்டாடியற்றே நிரம்பிய, நூலின்றிக் கோட்டிகொளல்" என்பதூஉம் பொய்யா மொழிகள். அவைகளை அவர் அறிந்திலர் ஆதலால்.

இப்பாவிலுள்ள ஒன்றூர் என்ற சொல் உடன் பாட்டுப் பொருளைத்தரும் சொல்போல நின்று எதிர்மறைப் பொருளைத் தந்து நிற்பதற்குத் "தூய ஆன்பாலில் நீலமணியைப் பெய்த விடத்து அது (அப்பால்) கெடுதலும் பின்னர் அம்மணியை நீக்கினும் பாலின் கேடு நீங்காது நிற்றலும் போல" என ஒரு உவமையைக் கூறினூர் முன்னுரைகாரர். தன்கண் நீலமணியைப் பெய்த காலத்தில் தன் வெள்ளிய வண்ணத்தின் திரிந்தபால் தன்கண் பெய்யப்பட்ட அந்நீலமணியை நீக்கிய பின்னரும் தன் வெள்ளிய வண்ணத்தின் திரிந்தே நிற்கும் எனல் பிழையாம். என்னை? பாலில் பெய்யப்பட்ட நீலமணியை நீக்கிவிடின் அப்பால் தன் வெள்ளிய வண்ணத்தையே பெற்று நிற்கும் ஆதலால்.

அவரால் கூறப்பட்ட உவமையால் அவர், சீவக சிந்தாமணி என்ற நூலின் உரைக் குறிப்பினைப் பார்த்தவர் என்பதும், அக் குறிப்பினை எழுதிய ஆசிரியர்தம் கருத்தினை அறியாதவர் என் பதும் அறியப்படுதல் அல்லாமல், அவ்வுவமை, உவமேயத்திற் குப் பொருந்தியதாகத் தோன்றவில்லை. என்னை ? நீலமணியை ஆய்ந்து அதன் நலன் தேர்பவர், அம்மணியைப் பாலில் இட்டு அதன் பண்பினை அறிவர் என்றும், நீலமணியைப் பாலில் பெய்த காலத்தில் அப்பால் முற்றும் நீலவண்ணமாகத் திகழ்ந்து தோன் றும் என்றும், அம்மணியைப் பாலினின்றும் நீக்கிவிடின் அப்பால் தன் உண்மையான வெள்ளிய வண்ணத்தோடும் விளங்கித் தோன்றும் என்றும் கூறுவர் அறிஞர் ஆதலால். சீவக சிந்தாமணி யின் 167, 1325-ம் பாக்களையும். ஆசிரியர் பரஞ்சோதி முனி வர்தம் திருவிளையாடல் - மாணிக்கம் விற்ற படலம் 73-ம் - பாவையும் அவைகளின் உரைகளையும் பார்க்க. நிற்க,

வெள்ளிய பாலில் நீல மணியைப் பெய்த காலத்தில் அப் பால் தன் நிறத்தின் திரிந்து நிற்பதுபோல ஒரு உடன்பாட்டுச் சொல்லில் எதிர்மறை விகுதி புணருங்கால், அச்சொல், உடன் பாட்டுப் பொருளைத் தராமல் எதிர்மறைப் பொருளைத் தரும் சொல்லாகத் திரிந்து நிற்கும் என்பதற்கும், பாலில் இடப்பட்ட நீல மணியை, அப்பாலின் நின்றும் நீக்கியபின் அப் பால் தன் பண்டைய வெள்ளிய வண்ணத்தினையே பெற்று நிற்பதுபோல உடன்பாட்டுச் சொல்லொடு புணர்ந்த எதிர்மறை விகுதி கெடுங் கால், அவ் வுடன்பாட்டுச்சொல் எதிர்மறைப் பொருளைத் தரா மல் உடன்பாட்டுப் பொருளையே தரும் என்பதற்கும் அவரால் கூறப்பட்ட உவமை ஒப்பாகுதலன்றி, தன் வண்ணம் திரிதற்கு ஏதுவான நீலமணியைத் தன்னின் நின்றும் நீக்கிவிடின் தன் வண்ணத்தின் திரிதல் இல்லாத பாலின் பண்பு, தன்னொடு புணர்ந்த எதிர்மறை விகுதி நீங்கினும் தனக்குரிய உடன்பாட்டுப் பொருளைத்தராமல் எதிர்மறைப் பொருளையேதரும் உடன்பாட் டுச்சொல்லின் பண்பிற்கு எவ்வகையால் ஒப்பாகும் ? நிற்க,

எதிர்மறைவிகுதி புணர்ந்துகெட்டதால் விகாரப்பட்ட தாகிய "ஒன்றார்" என்ற எதிர்மறைச் சொல்லுக்குப் பாலில் நீல மணியைக் கூட்டுதலையும் பிரித்தலையும் சுட்டிக் காட்டிய காட்டு, உவமை வகையால் பொருத்தம் அற்றதாகும். என்னை ? மேலே கூறிய ஏதுக்களால். அவ்வகைப் பொருத்தம் அற்ற காட்டுக்களைக்

காட்டுதலைத் தர்க்கநெறி யறிந்தார் "தானே தன்பக்கம் அழியக் கூறுதல்" ஆகிய "இட்டவிரோதம்" என்னும் குற்றமாம் என்பர்.

அவர் கூறிய உவமையை அறிஞர் எவரும் ஏற்கார். ஏற் புடைத் தாம் என்றார் உரைச் சிறப்புப் பாயிரக் காரர் ஒருவர் எனின், "வாரம் பட்டுழித் தீயவும் நல்லவாம்" (சீவகசிந் - 888.) என்பது ஆன்றோர்தம் திருமொழி ஆதலால், அவர்தம் கூற்றினை அவர் போன்றாருக்கே ஆகும் என அகற்றுக.

* அவ் வுரைச் சிறப்புப் பாயிரக்காரர், அவ்வுரைகாரர் மாட்டுவாரம் கொண்டனரோ? ஆம். என்னை? அவரால் கூறப் பட்ட உரைச் சிறப்புப் பாயிரத்துள் ஏதுக்கள் பல உண்டு. அவற்றுள் ஒன்றனை இவண் காட்டாக நாட்டுகின்றேன். முன் உரைகாரர், தம் உரைப்பாயிரத்துள் (பக்—19.) "தேவாரம் என்பதன் பொருள்" என்ற 3-ம் பகுதியுள் தேவாரம் என்ற தொடரைப் பலவகைப் பொருள் கோடற்கு ஏற்றவாறு கண் ணழித்துக்கொள்ளும் முறைகளைச் "சைவத்திரு, சுவாமிநாத பண்டிதர் அவர்களால் எழுதப்பட்டபடி இங்குக் கூறுதும்" எனக் குறித்தார். அக்குறிப்பினுக்கு மாறாக அவ்வுரைச் சிறப்புப் பாயிரக்காரர், அவ்வுரைகாரரே தேவாரம் என்ற தொடரைப் பலவகைப் பொருள் கோடற்கு ஏற்பக் கண்ணழித்துக் காட்டினார் என்று அவ்வுரைகாரருக்கு ஒரு பெருமையைக் காட்டி மகிழ்ந்து எழுதினார் ஆதலால். வாரம் கொண்டனர் என யான் சொல்லா விடின் பிறர், அவரைப் பாயிரம் பகரும் பண்பறியாதவர் என்பர். அவ்வகைப் பழிப்பை அவர்மாட்டுக் கூறுதலை யான் விரும்புகின்றிலேன். என்னை? அவர், கற்றாரால் கற்றாரெனக் கழறப்படும் தகுதியைப் பெற்ற கணக்காயனார் ஆதலால்.

9. நன்று நான்மறை யானொடு மாலும்
சென்றார் போலும் திசையெலாம்
ஒன்று யொள்ளெரி *யாய்! திரு வோத்தூர்
நின்றீ ரே! யுமை நேடியே.

மூன்பாடம்:—*யாய் மிக.

முன் உரைகாரர் பொழிப்பு:—(திசை முற்றும் தான் ஒன்றாய், ஒள்ளிய நெருப்புருவாய்த் திருவோத்தூரின்கண் ஓங்கி நின்ற பரமனே! நன்றாகிய வேதம் நான்கினையும் ஓதும் பிரமனும் திருமாலும் முறையே உம்முடைய முடியையும் அடியையும் தேடி ஆராய்ந்து கொண்டு சென்றார்கள்; அதனை

* தோரமங்கலம் ஆசிரியர்-அ. வரதநஞ்சையப்பிள்ளை அவர்கள்.

*அறியாதவர் தேவரீரை அயருள் ஒருவராக வைத்து எண்ணி மயங்குவர், எ-று.) என்பது.*

இ - ள்:—உம்மைத் தேடிக்கொண்டு, தம்மைக் கற்றார்கட்கு நலனை ஆக்கும் நான்கு மறைகளையும் கற்ற நான்முகனும் திருமாலும் செல்லும்படி, கீழ் உலகும் மேல் உலகும் ஆகிய எல்லா இடங்களிலும் பொருந்தி ஒள்ளியதாய் எரியும் தழல் போன்று நின்ற இறையவரே! திரு ஓத்தூரின் கண் நிலை பெற்றிருக்கும் இறையவரே வணக்கம் என்க.

குறிப்புரை:—நன்று-நலம். ஆம் - (பிறவினைப் பொருள்) ஆக்கும். ஒடு, எண்ஒடு. சென்றார்-(முற்றெச்சம்) செல்ல, செல்லும்படி. போலும், ஒப்பில் போலி. திசை எலாம்-கீழ் உலகும் மேல் உலகுமாகிய எல்லா இடங்களிலும். ஒன்றுஆய்-ஒன்றுதலாகி, பொருந்தி. எரிஆய்-(விளி.) எரியும் தழல் ஆகினுய், எரியும் தழல் போன்று நின்ற இறையவரே. நின்றிரே-நிலை பெற்று இருப்பவரே. வணக்கம், இசை யெச்சம். ஏ, அசை.

*சிறப்புரை:— முன் உரைகாரர் மொழிப்புப்படி, சிவபெருமான் நெருப்புருவாய் நீண்டு நின்றது திரு ஓத்தூரில் அன்று. அந் நிகழ்ச்சி அவ்வூர்ப் புராணத்துள்ளும் இல்லை. அவ்வகைப்பொருளை அவ்வுரைகாரர் எவ்வகையால் கொண்டார் என்பதும் விளங்கவில்லை. சிவபெருமான் அரி அயர்கள் பொருட்டு நெருப்புருவாய் நின்றது திருப்பாற் கடலிடை அல்லது திருஅண்ணுமலையில்என்பதும், தேவர்கட்கு வேதம் ஓதுவித்தற் பொருட்டு ஆசிரிய வடிவனுய் அமர்ந்தது திரு ஓத்தூரில் என்பதும் புராணங்களுள் காணப்படும் வரலாறுகள். அவர்தம் உரை, புராணங்களின் வரலாறுகளோடு மாறுபடுதலால் அது, மறுத்தற்பாலதாம். அவரால் அடிகள் தம் தேவாரத்தினின்றும் எடுத்துக் காட்டப்பட்ட காட்டுக்களெல்லாம் கழிக்கத் தக்கனவாம். என்னை? பொருத்தம் இன்மையால். நிற்க,*

நான்மறைகள் என்பன *தொன்றுதொட்டு எழுதிக் கல்லாமல் ஆசிரியர்கள் சொல்ல மாணவர்கள் கேட்டுக் கற்றுவரும் ஆரிய மொழியாலாகிய* இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வடமொழி வேதங்களே ஆகும். அவை, தமிழ் மொழியால் ஆகிய தமிழ் வேதங்கள் அல்லவோ? அல்ல. என்னை? *ஆரியர்களால் சொல்லப்படும் இருக்கு முதலிய வேதங்கட்கும் கிறிஸ்தவர்களாலும், இஸ்லாமியர்களாலும் சொல்லப்படும் பைபிள்,*

குராஅன் ஆகிய அவைகட்கும் ஒப்பாகப் பண்டு ஒருகாலத்தில் தமிழ் மொழியால் தமிழர்கட்கு என ஒருவேதம் இருந்தது எனத்தெரியவில்லை. மலடி மகன்போல. என்னை? இருப்பின் அன்றோ தெரியப்படும். இன்று திருமுறைகள் எனச் சொல்லப் படும் (ஆரிய மொழிகள் திரிபுற்று விரவிய) தமிழ்ப் பாக்களால் ஆகிய நூற்களை வேதங்கள் என மொழிதல் முகமன் மொழியாம்.

சமயாசிரியர்கள் "இருக்காதி நான்மறை" என்ற தொடரில் இருக்காதி என்னும் வடமொழித் தொடரின் பக்கத்தில் நான் மறை என்ற தமிழ்மொழித் தொடரை வைத்திருத்தலால் பண்டு தமிழர்கட்கு எனத் தமிழ் மொழியாலும் வேதங்கள் இருந்தன வாகும். அவை, கடல் கோளால் அழிக்கப்பட்டன என்பர் சிலர். அவர் கூற்றினைத் "தாமறிவர் தாங்கண்டவாறு" (திரிகடு—36) என்ற பெரியார்தம் மொழியை உன்னி, மலடி என்ற சொல்லின் ஈற்று இகரம் பெரும்பாலும் பெண்பாலைச் சுட்டுதலால் மலடிக் கும் பண்டு மக்கள் பிறக்கும் வழக்கு இருந்தது போலும். அவ் வழக்கு இன்று மக்கள் கூட்டம் பெருகுதலால் நின்றபடியாம் என்பார் கூற்றொடு கூட்டி, அவர்களிடத்தில் சிலவினவுக. அவ் வினவல் யாவை ?

பண்டு நம் நாவலம் பொழிலினுள் தமிழர்கட்கு என இருந்த தமிழ் வேதங்கள் போலத் தமிழரும் ஆரியரும் அல்லராகிய பலவகை மொழியாளர்கட்கும் என்ன என்ன மொழியால் என்ன என்ன பெயர்களை உடைய வேதங்கள் இருந்தன? இன்று என்ன என்ன மொழியால் என்ன என்ன பெயர்களை உடைய வேதங்கள் இருக்கின்றன? பண்டிருந்து இன்று இல்லையாயின் அதன் ஏது என்னை? இன்ன காலம் என அறி தற்கு இயலாத முற்காலத்தில் ஆசிரியர் அகத்திய முனிவரால் தமிழ் மொழிக்கு எழுதப்பட்ட தமிழ் மொழியாலாகிய அகத் தியம் என்னும் (முதல்) இலக்கண நூலின் நின்றும் பல நூற் பாக்களையும், பிற ஆசிரியர்களால் எழுதப்பட்ட தமிழ் மொழி யால் ஆகிய பல யாப்பு இலக்கண நூற்களின் நின்றும் பல பாக்களையும், பல இசை நூற்களின் நின்றும் பல பாக்களையும், பேராசிரியர்கள் பலர், தம்மால் எழுதப்பட்ட முதல் நூற்களின் இடையேயும், உரைநூற்களின் இடையேயும், முன்னோர் மொழி யாகவும், எடுத்துக் காட்டாகவும் நாட்டி ஆண்டனர் அன்றோ ? அவ்வாசிரியர்கள் அந்நூற்களை எடுத்து ஆண்டாற்போல எந்த ஆசிரியரேனும் தம்மால் எழுதப்பட்ட நூலிடையே இது தமிழ்

வேதம் என எடுத்துக்கூறி அத்தமிழ் வேதப் பாக்களை ஆண்டனரோ? ஆண்டிலராயின் இறந்துபட்டதாகச் சொல்லப்படும் தமிழ் மொழியாலாய வேதத்தினின்றும் பண்டைய ஆசிரியர்கள் எடுத்து ஆளாததன் ஏது என்னை? ஆண்டிருப்பர். அவ்வாளப்பட்டபாக்கள் கடல் கோளால் அழிந்தன போலும் எனின், அக்கடல்கோள், தமிழ் வேதத்தினின்றும் எடுத்துப் பிறநூற்களுள் ஆளப்பட்ட பாக்களையும் தேடி எடுத்துச் சென்றதோ?

என்றும் எழுதிக் கற்கப்படாததாகிய ஆரியர்தம்வேதம் இன்றும் ஊறு ஒன்றும் இன்றி உலவாநிற்க எழுதிக் கற்கப்பட்டதாகிய தமிழர்தம் வேதம்மட்டும் வழக்காறற்று அழிந்ததன் ஏது என்னை? கடல்கோள் குமரி நாட்டினை அழித்தகாலத்தில் தமிழ்வேதம்அக் குமரி நாட்டில் மட்டும்தான் இருந்ததோ? பிறதமிழ்நாட்டில்அத் தமிழ்வேதம் இருந்ததில்லையோ? அக்குமரிநாட்டினர் மட்டும் தான் தமிழ் வேதத்தைக் கற்றுவந்தனரோ? அக்குமரி நாட்டில் இருந்த தமிழ் வேதங்களோடே அவ்வேதங்களைக் கற்றாரையும் அக்கடல் பெருக்கு ஆய்ந்து தேடி எடுத்துக் கொண்டதோ? அக் குமரி நாட்டினர் அல்லாத பிற தமிழ் நாட்டினரால் அத் தமிழ் வேதம் கற்கப்பட வில்லையோ? பிற தமிழ் நாட்டினர் கற்றிலராயின், அவர்கள் தமக்கும் பண்டு தமிழ்மொழியால் வேதங்கள் என நூற்கள் இருந்தன. அவை, கடல் கோளால் இறந்துபட்டன எனச் சொல்லிக் கொள்ளுதலால் ஆம் பயன் என்னை? அக்கடல் கோள் தமிழ்வேதங்களையும், அத்தமிழ்வேதங்களைக் கற்ற தமிழ் வேதியர்களையுந்தான் தேடி அழித்துச் சென்றதோ? பிற நூற்கள் அக்கடல் கோளால் அழிக்கப்படாமல் இன்றும் இருப்பதன் ஏது என்னை? பொருள் இலக்கணம் அழிவுபட்டதற்கு வருந்தி இறைவனிடத்தில் முறையிட்டுப் பொருள் இலக்கணம் பெற்ற தமிழ் அரசன் அல்லது பிற தமிழர், தமிழ் வேதம் அழிவுபட்டதற்கு வருந்தி இறைவனிடத்தில் முறையிட்டு அத்தமிழ் வேதங்களை அல்லது வேறு தமிழ் வேதங்களைப் பெற்றுப் பாதுகாவாததன் ஏது என்னை? ஆரியவேதங்களால் மூடப்பட்ட கோயிலைத் தங்கள் (வடசொல் விரவிய) தமிழ்ப்பாக்களால் திறக்கவும் மூடவும் செய்த சமயாசிரியர்கள், பாம்பு கடித்ததால் நஞ்சுஒன்றி இறந்தவர்களை உயிர் பெற்று எழச்செய்த சமயாசிரியர்கள், நோய் வாய்ப்பட்டு இறந்த பெண்ணைத் தீயிட்டு எரிக்கப்பட்டதால் வெந்து அழிந்த அவள்தன் உடம்பினின்றும் கழிந்த எலும்புகளைப் பின்னும் பெண்ணாக்கி உயிருடன் உலவச்செய்த சமயா

சிரியர்கள், முதலையால் விழுங்கப்பட்டு அழுக்காகி (மலமாகி) அழிவுபட்ட பார்ப்பன மகனை அவன் இறந்த பல ஆண்டுகளின் பின், கழிந்த ஆண்டுகளின் வளர்ச்சியுடன் உயிர்பெற்று வரச் செய்த சமயாசிரியர்கள், தங்களுடைய (வடசொற்கள் விரவிய) தமிழ்ப்பாக்களால் இறைவனை மகிழச்செய்து அவ்விறைவனுடைய திருவருளால் அக்கடல்கோளால் இறந்துபட்ட தமிழ் வேதங்களைப் பெற்றுத் தமிழர்கட்குத் தராததன் ஏது என்னை? ஆரிய வேதங்களை அரக்கன் களவு செய்யப்பட்ட காலத்தில் அவ்வரக்கனை அழித்து அவ்வாரியவேதங்களை ஆரியர்கட்குத் தந்த இறைவன்போல ஒரு இறைவன் தமிழர்தம் வேதங்கள் அழிக்கப்பட்ட காலத்தில் அவ்வேதங்களை அழிக்கப்படா வண்ணம் பாதுகாத்துத் தமிழர்கட்குத் தராததன் ஏது என்னை? ஆசிரியர் சேக்கிழாரால் செய்யப்பட்ட பெரிய புராணத்தைத் தம்மதத்தின் சிறந்த நூலாகக் கொண்டு பாராட்டும் தமிழ் நாட்டுச் சைவர்களிற் சிலர் தங்கட்கும்பண்டு தமிழ் மொழியால் வேதங்கள் இருந்தனஎன்றும் அவை, பின் கடல்கோளால் இறந்துபட்டன என்றும், ஆதலால் அவை, இன்று இல்லை என்றும் சொல்லுதல்போலத் தமிழ்த் தேசத்திலுள்ள வடகலை வைணவமதத்தார் சொல்லாவிடினும், தமிழ்த்தேசத்தில் உள்ள தென்கலை வைணவ மதத்தார்களும் பண்டு தமிழ் மொழியால் வேதங்கள் இருந்தன என்றும், அவை கடல்கோளால் அழிந்தன என்றும் சொல்லிக் கொள்ளாததன் ஏது என்னை? வைணவமதத்தார்க்கு உரிமையில்லாமல் பெரிய புராணச் சைவர்களாகிய ஒருவகைத் தமிழர் கட்கு மட்டும்தான் அழிவுபெற்ற அத்தமிழ் வேதங்கள் உரியனவாக இருந்தனவோ? வடமொழியால் வேதங்கள் இருந்தன எனக் கூறிய ஆசிரியர் சேக்கிழார், தமிழ்மொழியாலும் வேதங்கள் பண்டு இருந்தன என்று குறிப்பிடாததன் ஏது என்னை? என்பன. நிற்க,

பண்டு தமிழர்கட்கெனத் தமிழ்மொழியால் வேதங்கள் இருந்தன. அவை, கடல்கோளால் அழிவுபட்டன என்பார், நூற்களின் புறத்தனவாகிய (பருஉப்பொருட்டவாகிய) இப்போது வினாக்கட்கு நேரிய நெறியில் விடைதருவாராயின், பின்னர், நூற்களின் அகத்தனவாகிய (நுண்பொருட்டவாகிய) சிறப்பு வினாக்களை விடுப்பன். அவைகட்கும் அவர்கள் நேரிய விடைகளைத் தருவாராயின் பினனர் அவர்களால் காட்டப்படும் நன்றறியார் செயலாகிய ஆரியர்களையும் ஆரிய மொழிகளையும் தூற்றும் செயலையானும் எற்றுப் போற்றுதலைப்பற்றி எண்ணுகின்றேன்.

ஒருவர் பிறர் குற்றங்களை எடுத்துக் காட்டுவதால் அவர் நன்று அறியார் ஆவரோ எனின், உண்மையாகிய குற்றத்தினைக் கண்டும் வாரத்தினால் அதனை எடுத்துக் கூறாமல் விடுத்து ஓரத்தினால் பொய்க் குற்றம் சார்த்திக் குறை கூறுபவரையே நன்று அறியார் என்றேன். என்னை ? திருவாசகம் என்ற நூலின் முதல் நான்கு நெடும் பாக்கட்கு மட்டும் உரை எழுதிய ஆசிரியர் சாமி வேதாசலம் (மறைமலை அடிகள்) அவர்கள், அந்நான்கு பாக்களுள் போற்றித் திருஅகவல் என்னும் பாவின் இடையே "ஆறு திங்களின் ஊறு அலர் பிழைத்தும்" என்ற அடிக்கு; ("ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய, வழுக்கியும் வாயாற் சொலல்" (திருக்கு. 139.) என்ற பொய்யா மொழியார் தம் விதியையும் புறக்கணித்தவராகி ("ஆறாந் திங்களில் கொலைக்குக் காரணம் ஆகிய பழிச் சொல்லுக்குத் தப்பியும்" எனப் பொழிப்புரையும், **கணவர் இல்லாக்காலத்தேனும், கைம்மை நிலையிலேனும் பிழைத்துக் கருக்கொண்ட மகளிர் தாம் சூல்கொண்டமை ஆறுந்திங்களிற் புறத்தார்க்குக் கட்புலனாக, அவர் அது கண்டு பழித்துத் தூற்றுவர் ஆகலின் அப்பழி மொழிக்கு அஞ்சி அம்மகளிர் அவ்வாறுந் திங்களிற் கருச்சிதைத்தற்கு முயலுதல் வழக்கம்** அங்ஙனம் சிதைக்கப் படுதலுக்குத் தப்பியவாறு தெரிப்பார் "ஆறு திங்களின் ஊறு அலர் பிழைத்தும்" என்றார்) எனச் சிறப்புரையும் செப்பி எழுதினார்.

ஆறாந் திங்களிலே கருவைச் சிதைப்பர் என்பதனையும், அது ஒரு வழக்கம் என்பதனையும், அறிஞர்கள் நினைவு கூர்ந்து அவர்தம் ஒழுக்க முறைமையை உணர்வார்கள் என யான் நம்புகின்றேன்.

அவரால் உரைக்கப்பட்ட அப்பொருளால் பொதுவாக நம் நாவலம் பொழிலில் வாழும் மகளிர் யாவரும் கற்பு நெறி கடந்து ஒழுகுபவர் (விபசாரிகள்) எனவும், சிறப்பாக நம் தமிழ்த் தேசத்தில் வாழும் சைவசமய மகளிர் யாவரும் கற்புநெறி கடந்து ஒழுகுபவர் (விபசாரிகள்) எனவும் கருதலாம் அன்றோ ? என்னை ? சைவசமயத்தவராகிய தமிழ்ப் பெரியாரால் தமிழ்மொழியில் எழுதப்பட்ட முதல் நூல் அத்திருவாசகம் ஆதலால். அவ்விழிதகைய பொருளைப் பொய்யாகத் தமிழ்மகளிர் மாட்டு ஏற்றி எழுதிய மணிதரை (அவர் ஒரு தமிழர் என்ற வாரத்தினால்) சாமி என்றும் அடிகள் என்றும் போற்றுகின்றவர்கள் நன்று அறிந்தார் ஆவரோ? ஆகார். நிற்க, உண்மையான குற்றத்தை (கருத்தை) எடுத்துச் சொல்லுபவரை ஓரத்தினால் தூற்றுகின்றவர்கள் நன்று அறிந்

தார் ஆவரோ? ஆகார். எவரைத் தூற்றுகின்றார்கள் எனின், பேராசிரியர் மு. இராகவ ஐயங்கார் அவர்கள் தம்மால் எழுதப் பட்ட தொல்காப்பிய ஆராய்ச்சி என்ற நூலில் ஆரியர்கள் தமிழர் கட்குக் கற்புநெறியைக் காட்டினார்கள் என எழுதினார் என்று (அவர் ஒரு பார்ப்பனர் என்ற எண்ணத்தினால்) அவர்மீது பொய்க் குற்றம் சார்த்தி அவரை வைத வசைமொழிக்கு வரைவு உண்டோ?

சாமி வேதாசலம் என்பவர் தமிழர் என்ற எண்ணத்தினால் அவர் தம் பிழையை மறந்து அவரைப் போற்றியும், திரு.மு. இரா கவ ஐயங்கார் என்பவர் பார்ப்பனர் என்ற எண்ணத்தினால் அவர் தம் உண்மை ஆய்வின் திறத்தைப் புறக்கணித்து அவர்பால் பொய்க் குற்றம் சார்த்தி அவரைத் தூற்றியும், ஆரியர் மாட்டும் ஆரிய மொழி யிடத்தும் கொண்ட பகைமையால் நூலாசிரியர்-தம் கருத்துக்கு மாறாகத் தம் கருத்துப்படி பொய்ப்பொருள் கூறி யும் எழுதியும் திரியும் கூட்டத்தினர் போன்றாரையே யான் இவண் நன்று அறியார் என்றேன் என்க.

காஞ்சி மெய்கண்டார் கழகத்தாரால் பதிப்பிக்கப்பட்ட காஞ்சிப் புராணத்தின் குறிப்புரையுள் தமிழர்கட்கு எனத் தமிழ் மொழியால் பண்டு வேதங்கள் இருந்தன எனக் குறித்தார்களே எனின், ஆரிய மொழியிடத்து ஏதுவின்றிப் பகைமை பாராட் டப்படும் இக்காலத்தில் எவரும் தம் கொள்கையாகிய எதனையும் எந்நூலகத்தும் புகுத்தி எழுதலாம் அன்றோ? என்னை? அயலார் ஆளுகைக்கு உட்பட்டிருத்தலால் நூலாசிரியர் கருத்துக்கு மாறாகப் பொய்யுரை எழுதுபவர்களைத் தண்டிப்பார் எவரும் இன்று இலர் என்ற எண்ணத்தால் எழுதினார்கள். அக்குறிப் புரையைப் பொய்களாகிய குப்பைகட்கு ஒரு கொட்டில் எனக் கொள்ளுக. என்னை? அவ்வுரை, அந் நூலாசிரியர் தம் கருத் துக்கும், உண்மைக்கும், தமிழ் மரபுக்கும் மாறாக எழுதப்பட்ட தால். அக்குறிப்புரையை எழுதுவித்த அக்கழகத்தார்தம் சீரில் செயலை எடுத்து இயம்புதலும் நாவிற்கு ஒரு இழுக்கேயாகும். ஆதலால், அக்கழகத்தார்தம் பேச்சும், அக்குறிப்புரைப் பேச்சும் இவண் மேல் வேண்டா.

**10. கார மண்கலிங் கத்துவ ராடையர்**
**தேரர் சொல்லவை தேறன்மின்**
**ஓரம் பாலெயி லெய்தவ னோத்தூர்ச்**
**சீர வன்கழல் சேர்மினே.**

*முன் உரைகாரர் பொழிப்பு:—(உலகத்தீரே! கரிய சமண் சமயத்தைச் சேர்ந்த, கலிங்கமாகிய சிவந்த ஆடையை அணிந்துள்ள சமணரும், தேரவாதிகளும் சொல்லுகின்ற பொய்ப்பொருள்களை மெய்யென உணராதீர்கள்; மற்று, திரிபுராதிகளின் மூன்று மதில்களையும் ஓர் அம்பினால் எய்தவனும், திருவோத்தூரில் எழுந்தருளிய மெய்ம்மையான கீர்த்தியை யுடையவனுமாகிய பரமனுடைய வீரகண்டை யணிந்த திருவடியைச் சிந்தித்தடைவீர்களாக, எ-று.) என்பது.*

பொருள்கோள்:—கார் அமண் துவர் கலிங்கம் ஆடையர் தேரர் சொல் அவை தேறல்மின் ஓர் அம்பால் எயில் எய்தவன் ஒத்தூர் சீர் அவன் கழல் சேர்மின் ஏ.

இ-ள்:—நீரில் குளியாமையால் அழுக்குப்படிந்து கரியவாகிய மேனியை உடைய சமணர்களாலும், துவர் தோய்க்கப்பட்டுச் செவந்த கலிங்கமாகிய ஆடையைப் போர்த்துக் கொள்ளுகின்ற பௌத்தர்களாகிய தேரர்களாலும் சொல்லப்படும் பொய்யாகிய அறநெறிகளை மனத்துள் பொருளெனக் கொள்ளாதீர்கள். ஒரு அம்பினைச் செலுத்தி மூன்று மதில்களையும் ஒரே காலத்தில் அழியும்படி செய்தவனும், திருவோத்தூரின்கண் எழுந்தருளிய மிக்க புகழை உடையவனும் ஆகிய சிவபெருமான்றன் திருவடிகளை வாழ்த்தி வணங்குங்கள். வணங்குவீர்களாயின் அப்பெருமான்றன் திரு அருளுக்கு உரியவர் ஆவீர்கள் என்க.

குறிப்புரை:—கார் - கருமை. அமண், சமணர் விகாரம். கார்அமண் - கரியமேனியை உடைய அமணர். கலிங்கம் - (ஆகுபெயர்) ஆடை. துவர்ஆடை "மருதமரத்தின் (வேரினின்றும்-பூவினின்றும்) கொண்ட" துவரில் தோய்க்கப் பட்டதால் செவந்த ஆடை. கலிங்கம் துவர்ஆடை, இரு பெயர் ஒட்டு. துவராடையர், பௌத்தர். தேரர், (ஸ்தவிரர் என்ற வடசொல் திரிபு) பௌத்தர். துவராடையர் தேரர், இருபெயரொட்டு. சொல் அவை, சொல்லப்படும் அறநெறிகள். தேறல்மின் - தெளியாதீர்கள், மனத்துள் பொருளெனக் கொள்ளாதீர்கள். ஓர் - ஒரு. அம்பால்: ஆல், உருபுமயக்கம். எய்தவன், சிவபெருமான். - சீர் (உரிச்சொல்.) மிக்க புகழ். அவன் - சிவபெருமான். சேர்மின், வாழ்த்தி வணங்குங்கள். ஏ, அசை.

சிறப்புரை:—*கார் அமண் என்றதன் குறிப்பு: அமணர்கள் ஸ்வேதாம்பரர் எனவும், திகம்பரர் எனவும் இருவகையினர்.*

இன்று தமிழ்த் தேளத்தில் வாழ்கின்றவர்கள் திகம்பரர் என்ற அமணர்கள். அவர்கள் சிறுதவம் (க்ஷுல்லக தவம்) என்றும், பெருந்தவம் (மஹாதவம்) என்றும் தவநெறியை இருவகையாகக் கொள்ளுபவர். அவ்விருவகைத் தவங்களுள், பெருந்தவமுடைய முனிவர்கள் நீரில் படிந்தேனும் முகந்தேனும் குளியார்கள். கோவணமும் கொள்ளார்கள். ஆதலால், அவர்கள் மேனிகள் அழுக்குப் படிந்து ஒளி மழுங்கித் தோன்றும். அவ்வழுக்குப் படிந்த மேனிகளை உடைய சமண முனிவர்களைக் கரிய மேனியர் என்றும், அழுக்கு மேனியர் என்றும், மாசுமேனியர் என்றும் வெற்றுஅரையர் என்றும் பலவாறாகச் சொல்லி இழித்து உரைத்தார்கள் சைவசமய ஆசிரியர்கள். என்னை ? அவ்வாசிரியர்கள், தம் மதத்தின் தத்துவங்களையும் தர்க்க நெறியில் கற்றிலர் போலும், கற்றிருப்பின் தங்கள் தேவாரப்பாக்களுள், தம் மத தத்துவங்களின் பெருமைகளைத் தர்க்க நெறியில் எடுத்துச் சொல்லிப் பிற மத தத்துவங்களின் இழிவுகளைக் காட்டிப் பாடியிருப்பார்கள். அவர்கள் தர்க்க நெறியில் தம் மத தத்துவங்களை எடுத்துப் பேசாமல், தாம் தோல்வியுற்ற காலத்தில் தம்மை வென்றாரை வைதுரைக்கும் இழிதொழிலை மேற்கொள்ளும் அறிஞர்கள்போலச் சமண பௌத்தர்களை வைதிரார்கள் என்க. என்னை? இன்றும் வெல்லப்பட்டார் வென்றாரை வைதுரைத்தலை உலகவழக்கில் வைத்துக் காண்க.

அச்சமண முனிவர்கள் அல்லது அச்சமய இல்லறத்தாராகிய சிராவகாகள் பிறப்பால் கரிய மேனியர் அல்லர். ஏனைய மக்கள் எவ்வெந் நாட்டில் எவ்வெவ் வண்ணத்தினரோ அவ்வந் நாட்டில் வாழும் (பிறந்த) சமணர்களும் அவ்வவ் வண்ணத்தினராகவே தோன்றுவர் என்பதனை அறியாமையால் "கரிய சமண் சமயத்தைச் சேர்ந்த சமணர்" என்றார் முன்னுரைகாரர். மற்றும் அவர்தம் கருத்துப்படி சமணர்தம் மதமும் கரியதன்று. வண்ணங்களுள்ளே வெள்ளிய வண்ணத்தினையே தூயது என்பது போல மதங்களுள்ளே அச்சமணர்தம் மதத்தினைத் தூயது என்னும் பொருட்டால் வெள்ளியது எனலாம். என்னை ? சைவர்தம் பெரிய புராணத்தைப் போலத் தீய பாபங்கட்கு ஏதுவாகும் பொய்யை யுரைத்தலும், உயிரைக் கொல்லுதலும், புலாலை உண்ணுதலும், பிறர் பொருளைக் கள்ளுதலும், அயலான் மகளை விழைதலும், பற்று மிகுதற்கு ஏதுவாகும் பேரவாவினால் மிகு பொருளைத் தேடுதலும் ஆகிய தீய தொழில்களைப் புகழ்ந்து

பேசாமல் அவற்றை நீக்கி ஒழுகுதலால் ஆம்பயனை முன்னொடு பின் முரணின்றிமொழிந்து தன்பங்கட்கு எதுவாகும் பாபங்கள் உயிர்களைப் பற்றுதபடி தடுக்கும் வழியை அறிவித்து உயிர்களைப் பாதுகாக்கும் பண்பினை உடைய மதங்களுள் அச்சமணர்தம் மதமும் ஒன்று ஆதலால்.

"கரிய சமண் சமயத்தைச் சேர்ந்த கலிங்கமாகிய சிவந்த ஆடையை அணிந்துள்ள சமணர்" என்றார் முன்னுரைகாரர். அவர் தம் மாற்றம், மரபறியார் மாற்றமாம் என மறுத்தற் பாலதாம். என்னை ? சமணர் செவந்த ஆடையை அணிபவர் என்பதூஉம், வேறு சமயத்தைச் சேர்ந்த சமணரும் உளர் என்பதூஉம் அவர் தம் கருத்துப்போலும். அப்படி கருதுதலும் பிழையேயாம். என்னை ? செவந்த ஆடையைப் போர்த்திருப்பவர் பௌத்தசமயத் துறவிகளே ஆவர். சமண் சமயத் துறவிகள் அல்லர். அவர்கள், பற்று ஆம் (மிகும்) எனக் கோவணமும் கொள்ளாதவர்கள் ஆதலாலும், வேறு எந்த மதத்தினர்கட்கும் சமணர் என்ற பெயர் இல்லாமையாலும். நிற்க,

மற்றும் முன்னுரைகாரர் "ஆடை ஒழிந்து அங்கு அமணே திரிந்து உண்பார் அல்லல் பேசி மூடு உருவம் உகந்தார்" (திருநஞ்-தேவா.) "போகம் அறியார் துவர் போர்த்து உழல்வார்" (வேணுபு-தேவா) என்ற இருவகைத் தொடர்களைக் காட்டி 'அவர்கள், (சமணர்கள்) ஆடையின்றி நிருவாணிகளாய் இருப்பதும், தம்மை மறைத்துக் கோடலும் உண்டெனக் கூறுதலின், ஈண்டுக் கூறும் துவராடை *மேற்போர்வை போலும்" என்றார். அத்தொடர்கட்கு அவ்வகைப் பொருளை அவரன்றி மரபறிந்த அறிஞர் எவரும் கொள்ளார். என்னை ? பற்று ஆம் (மிகும்) என்ற எண்ணத்தினால் கோவணமும் கொள்ளாதவராகிய சமண்சமயத் துறவிகள் மேற்போற்வையைக் கொள்ளுவரோ ? கொள்ளார்

---

*சமண் சமயத்தில் சிறுதவம் (ஆடையுடன் கூடிய 'சுல்லக' தவம்) உடையவர்கள் சிறு அளவில் செவ்வாடை அணிவர் ஆயினும், அச் சிறுதவம் உடைய சமண் சமயத் துறவிகளைத் தம் தேவாரங்களில் திரு ஞானசம்பந்தர் பழித்திலர். என்னை? சைவ சமயத்துள்ளும் ஒருவகையார் சிறு அளவில் செவ்வாடை அணிதல் வழக்கு ஆதலால். அடிகள், தம் தேவாரங்களுள்ளே செவந்ததும் நீண்டதும் ஆகிய ஆடையை மேற்கொண்டு திரியும் பௌத்தர்களையும், கோவணமும் கொள்ளாத (நிர்க்கிரந்த வேடமுடைய) மஹா தவமுடைய சமண் சமயத் துறவிகளையுமே பழித்துள்ளார் எனக் கொள்ளுக.

ஆதலால். மக்கள், ஆடையை நீக்கிய நிலைமைக்கு நிர்வாணம் என்பது பெயர் அன்று என்பதனை ஆன்றோர் மாட்டுக் கேட்டறிக.

அவ்விருவகைத் தொடர்களில் கூறப்பட்ட "ஆடை ஒழித்து அங்கு அமணே திரிந்து உண்பார்" "போகம் அறியார்" என்ற குறிப்புக்கள், சமண சமயத் துறவிகளைக் குறிப்பன என்றும், "அல்லல் பேசி மூடு உருவம் உகந்தார்" "துவர் போர்த்து உழல்வார்" என்ற குறிப்புக்கள் பௌத்தசமயத் துறவிகளைக் குறிப்பன என்றும் கொள்ளல் வேண்டும். ஆதலால், "மூடு உருவம் உகந்தார்" "துவர் போர்த்து உழல்வார்" என்பன சமண சமயத் துறவிகளைக் குறிப்பன அல்ல எனக் கொள்ளுக. மற்றும், "கமழ் துவர் ஆடையினால் தம் மெய்யைப் போர்த்து உழல்வாரும்" (திருப்புக. தேவா.) என்ற தொடரைக் காட்டிச் "சமண சமயத் துறவிகள் போர்வையை உடையார்" என்றார். அத்தொடரின் பொருள் பௌத்த சமயத் துறவிகளையே குறிப்பதாகும் அல்லாமல், சமணசமயத் துறவிகளைக் குறிப்பதன்று, அத்தொடரின் முன் நின்ற "கையில் உண்டு உழல் வாரும்" (திருப்புக. தேவா.) என்ற தொடரின் பொருளே சமணசமயத் துறவிகளைக் குறிப்பதாகும். நிற்க,

அடிகள், தம் தேவாரத்தில் பெரும்பாலும் ஒவ்வொரு பதிகத்திலும் ஈற்று அயல் பாவில் சமணர், பௌத்தர் ஆகிய இருவகை யாரையும் குறித்திருத்தலை அவர்தம் தேவாரத்தைப் பொறுமையுடன் கற்பார் அறிவர். "கற்றது கைம்மண் அளவு, கல்லாத உலகு அளவு" என்ற பொன்மொழியைப் புறக்கணித்துக் "கற்கக் கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக" "பணிவு உடையன் இன் சொலன் ஆதல் ஒருவர்க்கு அணி, அல்ல மற்றுப்பிற" "பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய, சுருக்கத்து வேண்டும் உயர்வு" என்ற பொய்யில் புலவனார் தம் பொருளுரைகளைத் தேராமல், கற்றோரால் கவிச்சக்கரவர்த்தியார் எனப் பாராட்டப்படும் ஆசிரியர் கம்பர்தம் புலமையைத் தூற்றித் திரிபவரும், இன்று வட ஆர்க்காடு என்பது பண்டைய தொண்டை நாட்டின் ஒரு பகுதி என்பதனையும், அது இன்றும் பேராசிரியர்கள் பலர்க்கும் நாடு ஆம் என்பதனையும் தெரிந்து கொள்ளாமல், வட ஆர்க்காடு கல்வி அறிவு இல்லாத நாடு என எள்ளி இகழ்பவரும் அறியார். என்னை? அவர்தம் அறிவு, பழித்தல் தொழிலை மேற்கொண்டதால். நிற்க,

மற்றும் அவர், "கடு உடை வாயினர் கஞ்சிவாயினர் பிடகுரை பேணிலார்" (வைகல்—தேவா.) "உடம்பினை மறைக்கும் படக்கர்கள் பிடக்குரை" (புறம்ப—தேவா.) என்ற தொடர்களைக் காட்டிச் "சுவாமிகள் பிடகநூலின் மெய்ம்மை இன்மையை உணர்த்துமாறு காணப்படும்" என்றார். பிடகம் என்ற நூல் சமணர்தம் நூலன்று. அந்நூல் பௌத்தர்கட்கே உரியது. அவ்விருவகைத் தொடர்களில் உள்ள "பிடகுரை" "பிடக்குரை" என்ற பெயர்களும் சமணபௌத்தர்தம் நூற்களைக் குறிப்பன அல்ல, அவை, "பிணக்குரை" என்ற சொற்றொடரின் பிழையுற்ற பாடங்கள். அப்பிழைகள், முன் உரைகாரர் போன்ற மரபறியாதார் எவராலோ செய்யப்பட்டன போலும். என்னை ? அப்பிழைகளைப் 'படக்கர்கள் பிடக்குரை" என்ற தொடரை உடைய பாவின் பொருளால் அறிக. சமணர்களைச் சாத் (ஸ்யாத்) வாதிகள் என்பது போலப் பௌத்தர்களைத் தேர (தவிர-ஸ்தவிர) வாதிகள் என்னும் வழக்கு நூற்களில் இல்லை. என்னை ? சமணர்தம் சாத் (ஸ்யாத்) என்ற சொல், அவர்களுடைய சப்தபங்கி (எழுவகை) நியாயம் என்னும் தத்துவ விளக்கத்தில் இன்றியமையாப் பொருளாய்ச் சார்ந்து நிற்றல் போலப் பௌத்தர்தம் தேர (ஸ்தவிர) என்ற சொல் அவர்களுடைய தத்துவ விளக்கத்தில் சார்ந்து நிற்றலில்லை ஆதலால். இவ்வேதுவினுல் முன் உரைகாரர் பௌத்தர்களைத் தேரவாதிகள் என்றதும் குற்றமாம். நிற்க,

தேவாரங்களைப் பொழுது போக்கிற்கும் பண் இசைக்கும் மேற்கோள் உரைக்கும் அங்கொரு பாவையும் இங்கொருபாவையுமாகப் படித்தல் அல்லாமல் "சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார், செல்வர் சிவபுரத்தின்" என்ற திருமுறையின் பொருளை உன்னி, முறையே எச்ச முடிபுகளை இகழாதவராகியும், வாக்கிய வழியின் வழுவாதவராகியும், பொருளைப் போற்றிப் படித்தவர்கள், அத்தேவாரங்களுள் பிணக்குரை, பிடக்குரை யானுற் போலப் பிழையுற்ற பாடங்களை ஆயிரத்தின் மேலும் அறிந்திருப்பார்கள் என யான் நம்புகின்றேன்.

11. குரும்பை யாண்பனை *யின்றிரு வோத்தூர்
அரும்பு கொன்றை யடிகளைப்
பெரும்பு கலியுண் ஞானசம் பந்தன்சொல்
விரும்பு வார்வினை வீடே.

முன்பாடம்:—*யீன்குலே.

*முன் உரைகாரர் மொழிப்பு:—(ஆண்பனைகள் குரும்பையினையும் குலையினையும் பெறும், திருவோத்தூரில் எழுந்தருளி இருக்கும் அரும்புகளையுடைய கொன்றை மலரால் தொடுக்கப்பட்ட மாலையணிந்த தலைவனாகிய பரமனைப் பெருமையினையுடைய சீகாழி என்னும் ஊரில் தோன்றிய ஞான சம்பந்தன் பாடிய பாட்டுக்களை விரும்பிப் பரவுவோருடைய வினைப்பயன் சிவபோகமேயாம். எ-று.) என்பது.*

பொருள்கோள்:—ஆண்பனை குரும்பை ஈன் திரு ஓத்தூர் கொன்றை அரும்பு அடிகளை பெரும் புகலி உள் ஞான சம்பந்தன் சொல் விரும்புவார் வினை வீடு ஏ.

இ-ள்:—தம்முடைய திருவருளால் ஆண் பனைகள் குரும்பையாகிய இளங்காய்களை ஈன்ற திருஓத்தூரின் கண் எழுந் தருளியவரும், கொன்றையின் மலர்களை முடியில் சூடாநின்றவரும் ஆகிய சிவபெருமானைப் பெருமை பொருந்திய திருக்காழி நகரில் பிறந்தவராகிய திரு ஞானசம்பந்த சுவாமிகளினால் புகழ்ந்து சொல்லப்பட்ட இத் திருப்பதிகத்தினை விரும்பிக் கற்பார்தம் செயல் வீடு அடைதற்கு ஏதுவாகிய செயலாகும் என்க.

குறிப்புரை:—குரும்பை, பாளையில் தோன்றும் இளங்காய். ஈன்திருவோத்தூர், வினைத் தொகை. அரும்பு - (ஆகுபெயர்) மலர். கொன்றை, மரவகை. அது அரும்பாகிய சினைக்குரிய முதல். அரும்பு கொன்றை, கொன்றை அரும்பு. முன்னுரைகாரர் கருத்துப்படி கொன்றை, ஆகுபெயரால் மாலை அன்று. அடிகள், சிவபெருமான். புகலி—திருக்காழி நகர். உள், ஏழனுருபு. சொல், (ஆகுபெயர்) திருப்பதிகம். விரும்புவார்—(ஆகுபெயர்.) கற்பார். வினை-செயல். வீடு—(ஆகுபெயர்.) ஏது. ஏ, தேற்றம்.

*சிறப்புரை:—"ஆண்பனைகள், குரும்பையினையும் குலையினையும் பெறும் திருவோத்தூர்" என்று கூறினார் முன்னுரைகாரர். அவர்தம் கூற்றுக் குற்றமேயாம். என்னை? ஆண்பனைகள் குரும்பை பொருந்திய பாளைகளை ஈனுதல் வழக்கில்லை. பெண்பனைகளும் குரும்பையை வேறாகவும், குலையை (பாளையை) வேறாகவும் ஈனுதல் வழக்கில்லை. சிவபெருமான் திருவருளால் ஆண்பனைகள் பெண்பனைகளாக மாறிக் குரும்பைகள் பொருந்திய பாளைகளை (குலைகளை) ஈன்றன என்பதே புராண வரலாறு. ஆதலால், அடிகள் "ஆண்பனைகள் குரும்பைகள் பொருந்திய பாளைகளை ஈன்ற திருவோத்தூரில் எழுந்தருளிய இறைவனைப் பற்றிய திருப்பதிகம்" என்றார்கள் எனக் கொள்ளுதலே சிறப்பாம்.*

"விரும்பு மேன்மைத் திருக்கடைக் காப்பு அதனில் விமலர் அருளாளே, குரும்பை ஆண்பனை ஈனும் என்னும் வாய்மை குலவுதலால், நெருங்கும் ஏற்றுப் பனைஎல்லாம் நிறைந்த குலைக ளாய்க் குரும்பை, அரும்பு பெண்ணை ஆகி இடக்கண்டோர் எல்லாம் அதிசயித்தார்." என்பது ஆசிரியர் சேக்கிழார்தம் திரு வாக்கு. (சம்ப-புரா-980) இப்பாவில் ஈனும், என்பது ஈன வேண் டும் என்பதன் பொருட்டு. "குலைகளாய்க் குரும்பை" என்ற பாடம் "குலைகளார் குரும்பை" என்று இருத்தற் பாலது. மற் றும், அடிகள் புராணத்துள் 443, 602, 637, 638, எண்களுள்ள நான்கு பாக்களும் உண்மைக்கும் கவிக்கருத்துக்கும் மாறுகப் பிழை பெற்றனவேயாம். அப்பிழைகளை இவண் குறிப்பின் இவ்வுரை விரிதல் அன்றி, மற்றொன்று உரைத்தலும் ஆம். ஆதலால் ஆய்ந்து அறிக.

"அரனைத்தொழுது குரும்பை ஆண்பனை என்று ஒருபா அறைந்திடலும், மரனில் கருங்காய்க் குலைசாய்ப்ப வானோர் தருமாமலர் சொரிந்தார்" என்ற தலபுராணக் கூற்றும் இவண் நினைத்தற் பாலதாம். நிற்க,

"கொன்றை என்றது ஆகுபெயரால் மாலை" எனவும், அது "மார்பில் அணியப்படும் மாலை" எனவும் எழுதினர் முன் உரை காரர். அவ்வுரையும் பிழையே. என்னை ? அடிகள், முன்னர், "தார்நார் கொன்றை துயங்கு முடியுடை நாதா எனவும் கொன் றையந் தாரும் குளிர் மதியமும் கூவிளமலரும் ........ஆறும் ஓர் சடைமேல் அணிந்த எம் அடிகள்" (ஐயாறு-தேவா.) "கொன் றைந் தாரோடு தண் கரந்தை சடைக்கு அணிந்த தத்துவனர்" (ஐயாறு-தேவா) "வண்டமரும் மலர்க் "கொன்றைமாலை வார் சடையான்" (காட்டுப்-தேவா.) தாரிடு கொன்றை யொர் வெண் மதி கங்கை தாழ்சடைமேல் அவை சூடி" (வாழ்கொளி-தேவா.) எனவும் கூறினர் ஆதலானும், "கொன்றையைச் சிவ பெரு மான்றன் முடிக்கு அணியாகச் சொல்லுதலே பெருவரவிற்று ஆத லானும், "கொன்றையின் மலர்களை முடியிற் சூடியவர்" எனலே சிறப்பாம்.

அடிகள், "மண்மகிழ்ந்த அரவம் மலர்க் கொன்றை மலிந்த வரை மார்பு" (பிரம-தேவா.) என்ற தொடரின் பொருளை யானும் அறிந்தே கூறினேன். "கொன்றை மார்பின் மாலை" எனல் இழுக்கென்பது என் கொள்கை அன்று. அது யாவர்க்கும் உடன்பாடு ஆதலால். முன்னுரை காரரால் பொருள்கொள்ளப்

பட்ட முறையையே இவண் குற்றம் உடைத்து என்றேன். "கொன்றை, மாலைக்கு ஆகுபெயர்" என்றதும் குற்றமே. என்னை? அரும்பு என்ற சொல் இருந்தும், அச் சொல்லை விட்டு அவ் வரும்பின் முதலாகிய அடைமொழியைக் கொண்டு ஆகு பெயரால் பொருள் கொண்டது ஆசிரியர்வழக்கன்று ஆதலால்.

"குரும்பை ஆண்பனை ஈன்குலை ஓத்தூர்" என்ற மூன் பாடப் படியே பொருள் வேண்டுபவர், "ஆண்பனை குரும்பைகுலை ஈன் ஓத்தூர்" என மொழி மாற்றிக்கொண்டு "ஆண்பனைகள் குரும்பையாகிய இளங்காய்கள் பொருந்துதற்கு ஏதுவான குலைகளை (பாளைகளை) ஈனுதல்வேண்டும் என்று; திருவோத்தூரின் கண் எழுந்தருளியவரும், கொன்றையின் மலர்களை முடியில் சூடாநின்றவருமாகிய சிவபெருமானைப் பெருமை பொருந்திய திருக்காழி நகரில் பிறந்தவராகிய *திருஞான சம்பந்த சுவாமிகளினால் புகழ்ந்து சொல்லப்பட்ட இத் திருப்பதிகத்தினை விரும்பிக்கற்பாரைப் பாபங்கள் பற்றுமல் நீங்கும் எனப் பொழிப்புரைத்துக் கொள்ளுக.

இப் பொழிப்புக்குரிய குறிப்புரை:—வினை - பாவம். வீடு என்பது விடுதல் என்னும் பொருட்டு, அது முதனிலை திரிந்த தொழிற் பெயர். விடுதல் ஆகும், நீங்கும் எனக் கொள்ளுக. ஏ- தேற்றம். அன்றி "விரும்புவார் வினை வீடே" என்பதற்கு விரும்பிக் கற்பார்தம் செயல் வீடு அடைதற்கு ஏதுவாகிய செயல் எனக் கோடலும் ஆம்.

திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய
† திரு ஓத்தூர்த் தேவாரத்தினுக்கு
வே. மு. ஸ்ரீநிவாச முதலியார் எழுதிய சிற்றுரை முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

"குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்,
மிகைநாடி மிக்க கொளல்"

---

*அடிகள்தம் தேவாரப் பதிகங்களில் ஈற்றில் உள்ள திருக்கடைக்காப்புப் பாக்கள் அடிகளால் பாடப்படாமல் பிறர் எவராலோ பாடப்பட்ட சிறப்புப்பாயிரம் என்பது என் நம்பிக்கை.

† திரு ஓத்தூர், செய்யாறு தாலூக்கா ஆகிய திருவத்திபுரம் என்பது. அது, காஞ்சீபுரத்தின் தென்மேற்கில் இருகாத எல்லையுள் உள்ளது.




ஓம் சிவாய நம:

ஓர் பங்கினை கீழுறை உமைபாகர் இரு அடிகட்கு வணக்கம்.

திருவாதவூர் அடிகள் அருளிய திருவாசகத்துள்

# சிவபுராணம் "என்னும்" முதல்பாவும்,

புதிய பாடங்களுடன்,

வே. மு. ஸ்ரீநிவாச முதலியார் எழுதிய உரையும்.

முதல் பதிப்பு.] 1943 [விலை ரூ. ஒன்று

இந்நூலுள் மூலபாடங்களில் பல (20) அடிகளில் திருத்தங்களும், திரு. மறைமலை அடிகள் என்பார் விரிவுரைக்கு மறுப்பு உரைக ளும், அவரால் அறிவிக்கப்படாத வினைமுடிபும் பலவகை ஆராய்ச் சிக்குறிப்புக்களும், 'திருவள்ளுவர்' மதத்தைப்பற்றிய கட்டுரை ஒன் றும் "கோகழி" என்பதன் பொருள்பற்றிய கட்டுரைஒன்றும் உள.

புறவுரையின் 2-ம் பக்கத்தின் தொடர்ச்சி.

அவ்வகவற் பாவினைக் கலி வெண்பாவாகவே விரும்புவார் பொருட்டு வெண்தளை பிறழாதபடி திருத்தம் செய்தேன். தொண்ணூற்று ஓராவது அடியில் "அல்லல் பிறவி அறு" என்றவரை நிறுத்திக்கொண்டு அதன் பின்னுள்ள "ப்பாய் என என்" என்ற தொடரை இடைச்செருகல் எனக் கழித்துவிட்டால் "அறு" என்பது மலர் என்னும் வாய்பாட்டு அசைச்சீராய் வெண்பாவின் இற்றுச்சீராம் என்பதனை எண்ணுக. தொண்ணூற்று இரண்டாவது அடி முதல் தொண்ணூற்று ஐந்தாவது அடிவரை உள்ள நான்கு அடிகளும் தனி வெண்பா. ஆதலால் அதனைப் பிரித்து வைத்தேன். அந் நான்கு அடிகளும் தனி வெண்பா என்பதனை மறை மலை அடிகள் என்பாரும் (எவரும்) இன்றுவரை அறிந்திலர். ஏனைய சிறப்புக்களைக் குறிப்பு உரைப் பகுதிகளில் அறிக.

> அரியகற்று ஆசுஅற்றார் கண்ணும் தெரியுங்கால்
> இன்மை அரிதே வெளிறு" என்பதனை எண்ணிக்.
> "குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
> மிகை நாடி மிக்க கொளல்" மேலோர் கடனே.

1-எண்ணெய்க்காரத் தெரு
காஞ்சீபுரம்,
1943ஆம் ஏப்ரல்மீ 24உ

இப்படி,
**வே. மு. ஸ்ரீநிவாச முதலியார்.**

---

**பதினோராந் திரு முறையுள் ஒரு பாவிற்குத் திருத்தம்:—**

பதினோராந் திரு முறையுள் கபிலதேவ நாயனார் அருளிய சிவ பெருமான் இரட்டை மணிமாலையில் இருபத்து எட்டாவது பாவின் முதல் அடி "கொடிறு முரித்தன்ன கூன்றாள் அலவன் குருகினம் சென்று" என இருத்தற்பாலது. (பெரும்பாணாற்றுப்படை அடி 207, 208 ஐக் காண்க.) இத்திருத்தம் பிரம்மஸ்ரீ மஹாமஹோபாத்தியாயர் உத்தம தானம் ஐயர் அவர்களால் திருக்காளத்தித் திருக்கோயிலின் திருப்பணி வள்ளலார் ஆகிய மெ. அரு. நா. இராமநாதன் செட்டியார் அவர்கட்கு அருளப் பட்டது.

அவர்களிடம் கேட்டபடி திருக்கூவம் தமிழறிஞர்கள் திரு. வைத்தியநாத முதலியார் திரு. முத்துச்சாமி முதலியார் என்பவர்கள் எனக்குச் சொன்னார்கள். அவ்வரிய திருத்தம் யாவருக்கும் பயனும் பொருட்டு இவண் குறித்து வைத்தேன். அவ்வடி பேராசிரியர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்கள் பதிப்பில் "கொடிறு முரித்தனன் கூருளனல்லன் குருகினம் சென்று" எனவும், திரிசிரபுரம் சோடசாவதானம் திரு. சுப்பராய செட்டியார் அவர்கள் பதிப்பில் "கொடிறு முரித்தனன் கூருனலவன் குருகினம் சென்று" எனவும் உள. சென்னை, சைவ சித்தாந்த சமாஜத்தார் பதிப்பில் உள்ள பாடம் பெரும் விபரீத பாடம். அதனை நேரில் கண்டு தெளிக.

உ-ஓம் கணேசாய நம:

## திருவாசகத்துள் சிவபுராணம் என்னும் முதற் பாவிற்கு வே. மு. ஸ்ரீநிவாச முதலியார் எழுதிய உரைநூலின் புறவுரை.



திருவாசகத்துள் சிவபுராணம் என்னும் அகல் பாவிற்கு யான் உரை எழுத எண்ணியதற்கு ஏதுக்கள் பல, அவற்றுள் சில:— அப்பாவில் செறிந்துள்ள பிழைகளை எடுத்துக் காட்டின் அறிஞரா வார் அந்நூலுள் பிறபாக்களில் செறிந்துள்ள பிழைகளையும் ஆய்ந்து அருளுவர் என்ற எண்ணமும் ஒன்று.

திருவாசகத்துள் முதலில் நிற்கும் "நான்கு நெடும் பாக்கட்கு மட்டும்" விரிவுரை எழுதிய "மறைமலை அடிகள்" என்பார்தம் தமிழ் அறிவு இலக்கியத்துறையில் பெற்றுள்ள இறப்பினை எடுத் துக் காட்டின் அவர்தம் அறிவை நம்பி ஆரிய மொழியையும் ஆரிய மொழியால் ஆய நூற்களையும் பழித்தும்-அழித்தும், தம் குடிக்குரிய பழைமையான நல்ல ஒழுக்க வழக்கங்களுக்கு மாறுகிய தீய நெறி யில் ஒழுகுதலால் நற்பயனை இழப்பவர் அவ் விரிவுரைகாரர்தம் சொல்லை ஆய்ந்து நன்னெறியில் ஒழுகி நற்பயனைப் பெற முயலினும் முயலுவர் என்ற எண்ணமும் ஒன்று.

[என்னை? இலக்கியத்துறையில் செம்பொருள் காணும் நெறி அறியாமல் இடர் படுவாரால் சாத்திரத்துறையில் காட்டப்படும் ஒழுக்க நெறி- வீட்டு நெறி எத்தகைய கேட்டினை அளிக்கும் என் பதனைக் காட்டிக்கொண்டு நாட்டுதலும் வேண்டுமோ! அவர் தம் இடர் பாட்டினை இந்நூலின் உரையிடையே ஆங்காங்கே (என்றுல் காட்டப்பட்ட அவருடைய விரிவுரையின் குற்றங்களைக் காண்க.]

அப்பாவிற்கு உரை கண்டார் எவரும் அம் (மறைமலை அடிகள் என்பார் உள்பட) இன்றுவரை வினைமுடிபு காட்டினர் அல்லர். வினைமுடிபு ஏலாத ஒரு பாவைத் திருவருளைப் பெற்ற ஒரு தெய்வப் புலவர் பாடுவரோ? பாடினர் ஆயின் அப்பா, திருவருளால் பாடப் பட்ட பா எனும் பெரும் பெயரைப் பெறுமோ? அப்பாவைப் படிப்ப வரும்தான் நற்பயனைப் பெறுவரோ? என்பனவற்றை எண்ணி ஆய்ந்து அப்பாவிற்கு ஏற்றதொரு வினைமுடிபைக் காணவேண்டும் என்ற அவாவும் ஒன்று. [என்றுல் காட்டப்பட்ட வினைமுடிபைக் காண்க.]

மூலபாடங்களைத் திருத்தியதற்குரிய ஏதுக்கள் பல. அவற்றுள் சில:— சிவபுராண பாவின் ஈற்றில் 'சொல்லற்கு அரியானை என் பது முதல்" பணிந்து' என்பதுவரை உள்ள நான்கு அடிகளும் அவ் அகவற்பாவின் வேறுகிய தனி வெண்பா (பல சுருதி) என்பதனை அறியாமையால் அந்த அகவற்பாவைக் கலி வெண்பா என முதன் முறை நினைத்தவரே வெண்தளை தட்டாமைப் பொருட்டு அவ்வக வல் (சிவபுராண) பாவின் இடை இடையே பொருத்தம் அற்ற (வேண்டப்படாத) எழுத்துக்களையும் சொற்களையும் செறித்து இருப் பர் என யான் எண்ணினேன், யான் அப்படி எண்ணுதற்கு ஏது வான குறிப்புக்கள் அப்பாவிடையே பல உள. அக்குறிப்புக்களும்,

(திருவாசகத்தினை முதன் முறை அச்சிட்டவர் அந்நூலுள் ஓர் இடத்தும் பாடபேதம் காட்டாமல் விட்டார். விட்ட அவர் தம் செயலும், திருவாசகத்துள் இடைச் செருகல் உண்டு என்பதனை வலியுறுத்துகின்றன) பல நூற்றாண்டுகட்கு முன்னர்ப் பலரால் பல ஏடுகளில் எழுதப்பட்டதும் பல பாக்களால் ஆகியதும் ஆய (ஒரு நூலுக்குள்) பல புத்தகங்களுள் ஒரு புத்தகத்துள்ளும் ஒரு பாடபேதம் இல்லாமல் இருக்குமோ? என்ற எண்ணமும், யான் மூல பாடங்களைத் திருத்தம் செய்ததற்கு எதுக்களாகும்.

[சைவ சமயத்தவர்களால் செந்தமிழ்த் திருமறைகள் எனப் போற்றப்படும் (தேவார திருவாசகங்கள் உள்பட) திருமுறைகள் உள்ளே எந்தத் திருமுறையேனும் பிழை செறியப்படாமல் உளதோ? தேவார திருவாசகங்களுள் செறிந்து கிடக்கும் பிழைகளோ பல. என்னை? சைவ சமயத்தவர் ஜைன பௌத்த சமயத்தவர்தம் நூற்களை அழிக்கவும், அவர்கள் நூற்களுள்ளே அவர்கள் சமயகருத்தை மாற்றித் தம் மத கொள்கையைப் புகுத்தி அந்நூற்களைத் திருத்தவும் அவர்களுடைய நூற்களைத் தமக்குரியவாக ஆக்கிக் கொள்ளவும் முயன்ற பெரும் முயற்சியால் தம்மத நூற்களிடையே செறிவுறும் பிழைகளை நீக்குதற்கு மறந்தனர்போலும் என்பது என் எண்ணம்.] நிற்க,

திருவாசகத்துள்ளே திருச்சாழல் பகுதியுள் "கோயில் சுடு காடு" என்ற பாவில் "கற்பொடிகாண்" என்ற தொடர் "காற்பொடி காண்" என இருத்தற்பாலது. என்னை? உவமைச்சுட்டு ஆதலால். கால் பொடி-காற்றால் எறியப்படும் பஞ்சினும் எளிதான பஸ்பம்-துகள். கால் - காற்று. பொடி-பஸ்பம், துகள். "கற்பொடி" எனப் பாடம் கொள்ளுதலால் பொருள் சிறவாமையைச் சிந்திக்க

திருப்பள்ளி எழுச்சியுள் "அருணன்" என்ற பாவில் ஈற்று அடியின் "அலைகடலே" என்ற தொடர் "அருட்கடலே" என இருத்தற்பாலது. என்னை? அப்பெயர் உருவகப் பெயர் ஆதலால்.

செத்திலாப்பத்தில் ஈற்றுப்பாவின் மூன்றும், நான்கும் ஆகிய அடிகள் முறையே ஒன்றும், இரண்டும் ஆக இருத்தற்பாலன, என்னை? அப்பத்தின் மற்றைய பாக்களின் இற்று முடியினை முன்னித் தெளிக. அன்றி, அப்பாவின் இற்று அடியின் "கடலே" என்ற இற்றுச் சீர் "கனலே" என இருத்தற்பாலது. என்னை? சிவபெருமான் "பொன் மேனியன்—சுடர்வண்ணன்" ஆதலால்.

இவை போன்ற சிறு பிழைகளையும் ஆய்ந்து அறிந்து அகற்றுதற்காம் ஆற்றல் இல்லாதார் என்னால் காட்டப்பட்ட பெரும்பிழைகளைப் பிழைகள் தாம் என ஒப்புக்கொள்ளார் என்பதனை யானே அறிகுவன். ஆயினும் அறிஞர் ஆவார் ஆய்ந்து கொள்ளுவர் என்ற எண்ணத்தினால் துணிந்து திருத்தங்களை வெளியிட்டேன். நிற்க,



இதன் தொடர்ச்சியை முதல் பக்க ராப்பரின் உள் புறத்தில் காண்க.

ஓம் கணேசாய நம:

## திருவாதவூர் அடிகள் அருளிய திருவாசகத்துள்

# சிவபுராணம் "என்னும்" முதல்பா.

(வே. மு. ஸ்ரீநிவாச முதலியாரால் திருத்தப்பட்ட படி)

சிறப்புப் பாயிரம்.

தொல்லை இரும் பிறவிச் சூழும் தளை நீக்கி
அல்லல் அறுத்து ஆனந்தம் ஆக்கி அதே—எல்லை
மருவா நெறி அளிக்கும் வாதவூர் எம் கோன்
திருவாசகம் என்னும் தேன்.

நூல்: சிவபுராணம். (அகவற்பா.)

திருச்சிற்றம்பலம்.

நமச்சிவாய வாஅழ்க! நாதன் தாள் வாழ்க!
இமைப் பொழுதும் என் நெஞ்சின் நீங்காதான் தாள் வாழ்க!
கோகழி ஆண்ட குருமணிதன் தாள் வாழ்க!
ஆகமம் ஆகி நின்று அண்ணிப்பான் தாள் வாழ்க!
ஏகன் அநேகன் "இறைவன்தன் தாள்" வாழ்க! (5)
வேகம் கெடுத்து ஆண்ட "வேந்து கழல்" வெல்க!
பிறப்பு அறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க!
புறத்தார்க்குச் சேயோன்தன் பூங்கழல்கள் வெல்க!
கரம் குவிவார் "கண்மகிழும்" கோன்கழல்கள் வெல்க!
"சிரம் கவிவார்" ஓங்குவிக்கும் சீரோன் கழல் வெல்க! (10)
ஈசன் அடி போற்றி! எந்தை அடி போற்றி!
தேசன் அடி போற்றி! சிவன் சேவடி போற்றி!
நேயத்தே நின்ற நிமலன் அடி போற்றி!
மாயப் பிறப்பு அறுக்கும் மன்னன் அடி போற்றி!
சீரார் "பெருந்துறைத்" தேவன் அடி போற்றி!
ஆராத இன்பம் "அருளி அடி" போற்றி! (16)

---

திருத்தப்படாத (முன்) பாடங்கள்:

அடி 5-ல் ஏகன் அநேகன் "இறைவன் அடி" வாழ்க.
,, 6-ல் வேகம் கெடுத்து ஆண்ட "வேந்தன் அடி" வெல்க.
,, 9-ல் கரம் குவிவார் "உள்மகிழும்" கோன்கழல்கள் வெல்க.
,, 10-ல் "சிரம் குவிவார்" ஓங்குவிக்கும் சீரோன் கழல் வெல்க.
,, 15-ல் சீரார் "பெருந்துறை நம்" தேவன் அடி போற்றி.
,, 16-ல் ஆராத இன்பம் "அருளு மலை" போற்றி.

"சிவன் அவன் என் சிந்தை உள் நின்ற அதனால்
அவன் அருளாலே அவன் தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுராணம் தன்னை
"உந்தை" வினை முழுதும் ஓய உரைப்பன் யான்." (20)
கண் நுதலான்! "தண் கருணைக்" கண் காட்ட வந்து எய்தி!
எண்ணுதற்கு எட்டா எழிலார் கழல் இறைஞ்சி
விண் நிறைந்தும் மண் நிறைந்தும் மிக்காய் விளங்கு ஒளியாய்!
எண் இறந்து எல்லை இலாதானே! நின் பெரும் சீர்
பொல்லா வினையேன் புகழும் ஆறு ஒன்று அறியேன், (25)
புல் ஆகிப் பூடு ஆய்ப் புழு ஆய் மரம் ஆகிப்
பல் விருகம் ஆகிப் பறவை ஆய்ப் பாம்பு ஆகிக்
"கல்லா" மனிதர் ஆய்ப் பேயாய்க் கணங்கள் ஆய்
வல் அசுரர் ஆகி "வநசரம் ஆய்க்" தேவர் ஆய்ச்
செல்லாஅ நின்ற இத்தாவர "செங்கமத்துள்"
எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன், எம்பெருமான்! (31)
மெய்யே! உன் பொன் அடிகள் கண்டு இன்று வீடு உற்றேன்.
உய்ய என் உள்ளத்துள் ஓங்காரம் ஆய் நின்ற
மெய்யா! விமலா! விடைப்பாகா! "வேதங்கள்
ஐயா என" ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே!
வெய்யாய்! தணியாய்! "இயமான்! விமலாஅ!" (36)
பொய் ஆயின எல்லாம் போய் அகல வந்து அருளி!
மெய்ஞ்ஞானம் ஆகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே!
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே!
அஞ்ஞானம் தன்னை அகல் விக்கும் நல் அறிவே! (40)
ஆக்கம் அளவு இறுதி இல்லாய்! அனைத்து உலகும்.
ஆக்குவாய்! காப்பாய்! அழிப்பாய்! அருள் தருவாய்!
போக்குவாய்! "புன்மைப்" புகுவிப்பாய்! நின் தொழும்பில்
நாற்றத்தின் நேரியாய்! சேயாய்! நணியானே!
மாற்றம் மனம் கழிய நின்ற மறையோனே! (45)

திருத்தப்படாத (முன்) பாடங்கள்:

அடி 20-ல் "முந்தை" வினை முழுதும் ஓய உரைப்பன் யான்.
,, 21-ல் கண்ணுதலான் "தன்கருணைக்" கண்காட்டவந்து எய்தி.
,, 28-ல் "கல்லாய்" மனிதர் ஆய்ப் பேயாய்க் கணங்கள் ஆய்.
,, 29-ல் வல் அசுரர் ஆகி "முனிவராய்க்" தேவர் ஆய்ச்.
,, 30-ல் செல்லாஅ நின்ற இத்தாவர "சங்கமத்துள்"
,, 36-ல் வெய்யாய் தணியாய் "இயமானனாம்விமலா"
,, 43-ல் போக்குவாய் "என்னைப்"புகுவிப்பாய் நின் தொழும்பில்.

கறந்தபால் கன்னலொடு நெய் கலந்தால் போலச்
சிறந்த அடியார் சிந்தனையுள் தேன் ஊறி நின்று
பிறந்த பிறப்பு அறுக்கும் எங்கள் பெருமான்!
நிறங்கள் ஓர் ஐந்து உடையாய்! விண்ணோர்கள் ஏத்த
மறைந்து இருந்தாய்! எம்பெருமான்! வல்வினையேன் தன்னை (50)
மறைந்திட மூடிய மாய இருளை
அறம் பாவம் என்னும் அரும் கயிற்றால் கட்டிப்
புறம் தோல் போர்த்து எங்கும் புழு அழுக்கு மூடி
மலம் சோரும் ஒன்பது வாயில் குடிலை,
மலங்கப் புலன் ஐந்தும் வஞ்சனையைச் செய்ய (55)
விலங்கும் மனத்தால் விமலா! உனக்குக்
கலந்த அன்பு ஆகிக் கசிந்து உள் உருகும்
நலம் தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலம்தன் மேல் வந்து அருளி நீள்கழல்கள் காட்டி!
நாயின் "கடையாய் நடந்த" அடியேற்குத்
தாயின் சிறந்த தயா ஆன தத்துவனே! (61)
மாசு அற்ற சோதி! மலர்ந்த மலர்ச் சுடரே!
தேசனே! தேன் ஆர் அமுதே! சிவபுரனே!
பாசம் ஆம் பற்று அறுத்துப் பாரிக்கும் ஆரியனே!
நேச! அருள்புரிந்து நெஞ்சில் வஞ்சம் கெடப்
பேராது நின்ற பெரும் கருணைப் பேர் ஆறே! (66)
ஆரா அமுதே! அளவு இலாப் பெம்மானே!
ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே!
நீராய் உருக்கி! என் ஆர் உயிராய் நின்றானே!
இன்பமும் துன்பமும் இல்லானே! உள்ளானே! (70)
அன்பருக்கு அன்பனே! "யாவும் ஆகி! அல்ல ஆகி!"
சோதியனே! துன் இருளே! தோன்றாப் பெருமையனே!
ஆதியனே! அந்தம் நடு ஆகி! அல்லானே!
ஈர்த்து என்னை ஆட் கொண்ட எந்தை! பெருமானே!
கூர்த்த மெய்ஞ் ஞானத்தால் கொண்டு உணர்வார் "தம்கருத்தே"
நோக்குஅரியநோக்கே! நுணுக்கு அரிய "நுண்மையே!" (76)

---

திருத்தப்படாத (முன்) பாடங்கள்:

அடி 60-ல் நாயின் "கடையாய்க் கிடந்த" அடியேற்குத்.
,, 71-ல் அன்பருக்கு அன்பனே 'யாவையும்ஆய் அல்லையும்ஆம்"
,, 75-ல் கூர்த்தமெய்ஞ்ஞானத்தால் கொண்டுணர்வார் "தம்கருத்தின்"
,, 76-ல் நோக்கரிய நோக்கே நுணுக்கரிய "நுண்ணுணர்வே"

போக்கும் வரவும் புணர்வும் இலாப் புண்ணியனே!
காக்கும் எம் காவலனே! காண்பு அரிய பேர் ஒளியே!
ஆற்று இன்ப வெள்ளமே! அத்தா! மிக்காய் நின்ற
தோற்றச் "சுடர் ஒளியாய்!" சொல்லாத நுண் உணர்வாய்!(80)
மாற்றம் ஆம் வையகத்தின் வெவ்வேறே வந்து "அறிவாய்!"
தேற்றனே! தேற்றத் தெளிவே! என் சிந்தனை உள்
ஊற்று ஆன உண் ஆர் அமுதே! உடையானே!
வேற்று விகார விடக்கு உடம்பின் உள்கிடப்ப
ஆற்றேன்; "எம் ஐயா! அரனே! ஓ என்று என்று (85)
போற்றிப் புகழ்ந்து இருந்து பொய் கெட்டு மெய் ஆனார்"
மீட்டு இங்கு வந்து வினைப்பிறவி "சாராமல்"
கள்ளப் புலக் குரம்பை கட்டு அழிக்க வல்லானே!
நள் இருளில் நட்டம் பயின்று ஆடும் நாதனே!
தில்லை உள் கூத்தனே! தென்பாண்டி நாட்டானே! (91)
அல்லல் பிறவி "அறுப்பாய்! எனை என்."

திருவாதவூர் அடிகள் அருளிய திருவாசகத்துள்
(வே, மு, ஸ்ரீநிவாச முதலியாரால் திருத்தப்பட்டபடி)
சிவபுராணம் (என்னும்) முதற் பா, முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

தனியன்—பல கருதி.

சொல்லற்கு அரியானைச் *"சொல்லின்" திரு அடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து—சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவன் அடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

திருவாதவூர் அடிகள்தம் திருஅடிகட்கு வணக்கம்.

---

திருத்தப்படாத (மூன்) பாடங்கள்: [உணர்வாய்.
அடி 80-ல் தோற்றச் "சுடர் ஒளியாய்ச்" சொல்லாத நுண்
,, 81-ல் மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே "வந்தறிவாம்"
,, 87-ல் மீட்டு இங்கு வந்து வினைப்பிறவி "சாராமே"
,, 91-ல் அல்லல் பிறவி "அறுப்பானே ஓ என்று"

* சொல்லித்

திருத்தங்கள்:—பக்கம் 52-ல் அகவல் பாவின் (சிவபுராண பாவின்) அடி 50-ல் "மறைந்து இருந்தாய்" என்ற தொடரின் பின்னர் "எம்பெருமான்!" என்ற தொடரையும், அடி 53-ல் 'புறம் தோல் போர்த்து!" என்ற தொடரின் பின்னர் "எங்கும்" என்ற தொடரையும் கூட்டிக் கொள்ளுக, அவை விடுபட்டன. அடி 71-ஐம், 76-ஐம் திருத்தப்பட்ட புதிய பாடங்களின் முன் பாடங்கள் என்றகுறிப்புகள் விடுபட்டன ஆதலால், அவற்றின் முன் பாடங்களை அவ் அவ் மூலபாடப்பகுதியின் "புட்நோட்" குறிப்பில் அறிக.

உ

ஓம் கணேசாய நம: ஓம் சிவாய நம:

திருவாதவூர் அடிகள் அருளிய திருவாசகத்துள்

# சிவபுராணம் எனும் முதல்பாவும்,

## வே. மு. ஸ்ரீநிவாச முதலியார் உரையும்.

(அவரால் செய்யப்பட்ட திருத்தங்களுடன்)



(நூல் பயன்-பல சுருதி.)—திருச்சிற்றம்பலம்.

தொல்லை இரும்பிறவிச் சூழும் தளைநீக்கி
அல்லல் அறுத்து ஆனந்தம் ஆக்கிஅதே—எல்லை
மருவா நெறி அளிக்கும் வாதவூர் எம்கோன்
திருவாசகம் என்னும் தேன்.

*பொருள் கோள்:* "வாதவூர் எம்கோன் தேன் என்னும் திருவாசகம்" என மொழிமாற்றி அத்தொடரைப் பாவின் தலைக்கண் வைத்துப் பொழிப்பு உரைக்க. பொழிப்பு உரைக்குங்கால் "திருவாசகம், நீக்கி அறுத்து ஆக்கி அளிக்கும்" என வினை முடிக்க. வினை முடிக்குங்கால் "அதே" என்ற சொல்லை "அது, ஏ" எனப் பிரித்து அவற்றை அசைநிலை எனக் கொள்ளுக.

பொழிப்புரை: *தாம்பிறந்த திருப்பதியின் பெயர் ஆகிய திருவாதவூர் என்னும் பெயரைத் தமக்கு இயல் பெயர் ஆக உடைய எம்முடைய சமய ஆசிரியர் மாணிக்க வாசகர் அருளியதும், தன்னைக் கற்பார்தம் நாவின்கண் தேன் போலும் இனிமையை ஊறுவிப்பதும் ஆகிய* திருவாசகம் என்னும் செந்தமிழ்த் திருமறை, *பழையவும் பெருமை உடையவும் ஆகிய உயிரினைச் செறியும் பாவம் ஆகிய* தொடக்கை அறுத்து, *அத்தொடக்கின் செயலால் ஆம்* துன்பத்தினை அழித்து, *உயிரை* இன்பத்தில் திளைக்கச் செய்து *பின்னும் பிறவாமை ஆகிய பேற்றினைப் பெறுதற்கு ஏது ஆனதும், குற்றம் அற்றதும் ஆகிய வீட்டினை அடைவிக்கும்* தவ நெறியையும் உயிருக்கு அளிக்கும் என்க.

குறிப்பு உரை: தொல்லை: பழைமை. இரும்: (இருமை.* விகாரம்) பெருமை. பிறவி: (ஆகுபெயர்) உயிர். சூழும்: செறியும். தளை: (ஆகு பெயர்) தொடக்கு, பாவம். "அறம் பாவம் என்னும் அரும் கயிற்றால் கட்டி" என்ற (இப்பா - அடி - 52.) திருவாக்கை நினைக்க. நீக்கி: அறுத்து. அல்லல்: துன்பம். அறுத்து: அழித்து. ஆநந்தம்: (வடமொழி) இன்பம். ஆக்கி: பெருக்கி, திளைக்கச் செய்து. அதே: அது, ஏ, அசைநிலை. எல்லை: முடிவு, கெடுதல், குற்றம். மருவா: அடையாத, இல்லாத, அற்ற. நெறி: தவம். (சீவகசிந்தா - 2879.) தவ நெறி, தலைக்குறை விகாரம் எனலும் ஆம். "தம் கையால் தொழுது தம் நாவின் மேல் கொள்வார் 'தவநெறி' சென்று அமர் உலகம் ஆள்பவரே" என்ற (சுந்தரர் - திருத்தி, வேள்வி.) திருமறையை நினைக்க. எம் கோன்: எம், தன்மைப் பன்மை. கோன், மாணிக்கவாசகர்.

சிறப்பு உரை: இன்னகாலத்தில் ஆயது எனச் சொல்லுதற்கு எட்டாத பழைமையையும், இன்ன காலத்தில் அழிவது எனச் சொல்லுதற்கு இயலாத பெருமையையும் உடையது உயிர் என (உயிரின் இயல்பு இற்றெனை) அதன் பண்பினை விளக்குவான் **தொல்லை இரும்** என இரு சொற்களைப் பிறவி (உயிர்) என்னும் பெயருக்கு அடையாக அமைத்தார் ஆசிரியர் என்க. நிற்க,

சிவ பெருமான் உடைய திருப் பெயர்களை (திருப்புகழ்களை) உண்மை அன்புடன் நினைப்பவர் - துதிப்பவர் உடைய மனத்தின் கண் துதிக்கும் தோறும் **மகிழ்ச்சி (இன்பம்) மிகுதலால்** அப் பெருமானைப் **பால்** என்றும், **அமுது** என்றும், **கன்னல்** என்றும், **தேன்** என்றும் **கனி** என்றும் ஏத்திப் புகழ்தல் பொய்ந்நெறிப் புகாப் புலவர் தம் வழக்கு. அவ் வழக்கினை மேல் காட்டப்படும் திரு மறைகளால் அறிக.

"**தேனும்** ஆய் **அமுதும்** ஆய்த் தெய்வமும் தான் ஆய்" (சம்ப-இலம்)
"**தேனினும்** இனியர் **பாலன** நீரர் தீங்கரும்பு அனையர்" (சம்ப-அச்)
"திரு மணியைத் தித்திக்கும் **தேனைப் பாலைத்**
தீங்கரும்பின் இன் சுவையைத் தெளிந்ததேறல்" (அப்பர்.ஆரூர்.)
"கரும்புதரு கட்டியை இன் அமிர்தைத் தேனைக்
காண்பரிய செழுஞ் சுடரைக் கனகக் குன்றை" (அப்பர்-ஆரூர்.)

---

* கந்தபுரா-அசுரகா- மாயை உப- 7ல், இருமை: பெருமை. (திருவால-திருவிளை-மணம் செய்-12ல்) அம்மொழி, முதல் திரிந்து "இருமை" என நின்றுளது. இருமை: பெருமை. அத் திருமை எனும் மொழியே இவண் முதலும் கடையும் திரிந்து "இரும்" என நின்று "பெருமை" எனும் பொருள் சுட்டி உளது என்க.

"கற்றவர்கள் உண்ணும் கனியே போற்றி" (அப்பர் - ஆரூர்)

"அரும்பினை அலரினை அமுதினைத் தேனை
ஐயனை அறவனைப் பிறவி வேர் அறுக்கும்
கரும்பினைப் பெருஞ்செந்நெல் நெருங்கிய கழனிக்
கழுமல வளநகர்க் கண்டு கொண்டேனே" (சுந்தரர்)

"தேனே அமுதே கரும்பின் தெளிவே தித்திக்கும்
மானே அருளாய் அடியேன் உனை வந்து உறும் ஆறே" 1

"தேனையும் பாலையும் கன்னலையும் அமுதத்தையும் ஒத்து
ஊனையும் என்பினையும் உருக்காநின்ற ஒண்மையனே" 2

"சேயன் அணியன் தித்திக்கும் தீங்கரும்பு-
ஆய் அமுது ஆகி நின்று அண்ணிக்கின்றானே" (திருமந்தி-2365.)
எனச் சைவ சமய ஆசிரியர்களும்,

"நண்ணித் தென்குருகூர் நம்பி என்றக்கால்
அண்ணிக்கும் அமுது ஊறும் என் நாவுக்கே" (நாலா-கண்ணி)

"தேனும் பாலும் அமுதும் ஆய திருமால் திருநாமம்
நானும் சொன்னேன் நமரும் உரைமின்
நமோ நாராயணமே" (நாலா-பெரிய திரு-6-10-6)

"தேனும் பாலும் கன்னலும் அமுதும் ஆகித் தித்திப்ப
யானும் எம்பிரானையே ஏத்தினேன் யான் உய்வானே" 3

"தேனைப் பாலைக் கன்னலை அமுதைத்
திருந்து உலகு உண்ட அம்மானை" (நாலா-திருவாய்-8-4-11)

என வைணவ சமய ஆசிரியர்களும் தம் இறையவர் ஆகிய திருமாலைத் தேன் என்றும், பால் என்றும், கன்னல் என்றும், அமுது என்றும் புகழ்ந்தபடியை இவண் நினைக்க. நிற்க,

உண்மை அன்புடன் நினைக்கும் தோறும் நினைப்பவர்தம் நெஞ்சில் தேன்போலும் இனிமை ஊறுதற்கு ஏதுவான தம் இறையவர் தம் திருப்பெயர்களை (திருப்புகழ்களை) ஏற்று உள்ள திருமறைகளையும் தேன் என ஏத்திப் புகழ்தல் பொற்புறு புலவர்தம் வழக்கு. அவ் வழக்குப்படியே சிவபெருமான் உடைய திருப் பெயர்களை (திருப்புகழ்களை) ஏற்று உள்ள செந்தமிழ்த் திருமறையாகிய திருவாசகத்தினையும் தேன் என ஏத்திப் புகழ்ந்தார் தென் மொழியின் துறை தெரிந்த தெள்ளிய ஆசிரியர் ஒருவர் என்க. என்னை ?

---

1. திருவாச-சத. 2. திருவா-நீத். 3. நாலா-திருவாய். 4-3-6.

"மன்னு புகழ் சேர் மணவாள மாமுனிவன்
தன் அருளால் உள் பொருள்கள் தன் உடனே - சொன்ன
திரு வாய்மொழி நூற்று அந்தாதி ஆம் தேனை
ஒருவாது அருந்து நெஞ்சே உற்று" (திருவாய்-நூற்று-தனியன்)

"குரவை முதலாம் கண்ணன் கோலச் செயல்கள்
இரவு பகல் என்னுமல் என்றும் - பரவுமனம்
பெற்றேன் என்றே களித்துப் பேசும் பராங்குசன் தன்
சொல் தேனில் நெஞ்சே துவள்" (திருவாய்-நூற்று-54)

என வைணவ சமய ஆசிரியர்களும் தம் திரு மறைகளைத் தேன் எனப்புகழ்ந்தபடியால் வழக்கு உண்டு என்பதனை அறிக.

மேற் காட்டியபடி சைவ, வைணவ சமய ஆசிரியர்கள் தம் தம் இறையவரையும் திருமறைகளையும் புகழ்தலே அன்றித் தம் தம் திரு மறைகளைக் கற்பதால் ஆம் பயனையும் எடுத்துச் சொல்லிப்புகழ் தலும் வழக்கு. அப்படி நூற்பயனைச் சொல்லிப் புகழ்ந்து பாடப் பட்டபாக்களை நூற்பயன்-பலசுருதிஎன்பது ஆன்றோர்தம் வழக்கு. அவ்வழக்குப்படியே செந்தமிழ்த் திருமறையாகிய திருவாசகத்தினைக் கற்பதால் ஆம் பயன் ஒன்றனையே இப்பாவில் எடுத்துச் சொல்லி னர் இயலறி புலவர் ஒருவர் என்க. என்னை ?

"கன்னலம் கழனி ஓதம் வந்து உலவும்
கழுமல நகர் உறைவார் மேல்
ஞான சம்பந்தன் நற்றமிழ் மாலை
நன்மையால் உரைசெய்து நவில்வார்
ஊன சம்பந்தத்து உறுபிணி நீங்கி
உள்ளமும் ஒருவழிக் கொண்டு
வானிடை வாழ்வார் மண்மிசை பிறவார்
மற்றிதற்கு ஆணையும் நமதே" (சம்பந்)

"மாடம் மல்கு கடலூரில் மறையோர் ஏத்தும் மயானத்துப்
பீடை தீர அடியாருக்கு அருளும் பெருமான் அடிகள் சீர்
நாடி நாவல் ஆரூரன் நம்பி சொன்ன நற்றமிழ்கள்
பாடும் அடியார் கேட்பார்மேல் பாவம் ஆன பறையுமே" (சுந்த)

"திங்கள் அணி திரு ஆலவாய் எம் அண்ணல்
திருவிளை ஆட்டு இவை அன்பு செய்து கேட்போர்
சங்கநிதி பதுமநிதிச் செல்வம் ஓங்கித்
திகைமைதரு மகப்பெறுவர் பகையை வெல்வர்

மங்கல நன்மணம் பெறுவர் பிணிவந்து எய்தார்
வாழ்நாளும் நனி பெறுவர் வான்நாடு எய்திப்
பங்கவர்ஆய் அங்குஉள்ள போகம் மூழ்கிப்
புண்ணியர் ஆய்ச் சிவன் அடிக்கீழ் நண்ணி வாழ்வார்"
எனச் சைவ சமய ஆசிரியர்களும்,

"வல்வினை தீர்க்கும் கண்ணனை வண்குருகூர்ச் சடகோபன்
சொல்வினையால் சொன்ன பாடல் ஆயிரத்துள் இவை பத்தும்
நல்வினை என்று கற்பார்கள் நலனுடை வைகுந்தம் நண்ணித்
தொல்வினைதீர எல்லாரும் தொழுது எழ வீற்று இருப்பாரே"
(நாலா. திருவாய். 4-4-11)

"திரு அடியை நாரணனைக் கேசவனைப் பரஞ்சுடரைத்
திரு அடி சேர்வது கருதிச் செழுங் குருகூர்ச் சடகோபன்
திரு அடிமேல் உரைத்த தமிழ் ஆயிரத்துள் இவைபத்தும்
திரு அடியே அடைவிக்கும் திரு அடி சேர்ந்து ஒன்றுமின்"
(நாலா-திருவாய் 4-10-11)

"நாடிய பொருள் கைக்கூடும் ஞானமும் புகழும் உண்டாம்
வீடியல் வழியது ஆக்கும் வேரியம் கமலை நோக்கும்
நீடிய அரக்கர் சேனை நீறுபட்டு அழிய வாகை
சூடிய சிலை இராமன் தோள்வலி கூறு வோர்க்கே"

என வைணவ சமய ஆசிரியர்களும் தம் தம் திருமறைகளைக் கற்பதால் ஆம் பயனைப் பகர்ந்து புகழ்ந்தபடியால் அறிக. நிற்க,

முன்னர்க் காட்டப்பட்ட ஏதுக்களின்படி திருமறைகளைக்கற்பதால் ஆம் பயனைப் பகரும் பாக்களைப் பலசுருதி—நூற்பயன் என்பது ஆன்றோர்தம் வழக்கு. ஆதலால், அவ்வழக்குப்படியே சிவபெருமான் உடைய திருப் பெயர்கள்—திருப்புகழ்கள் செறிந்துள்ள திருவாசகம் ஆகிய செந்தமிழ்த் திரு மறையைக் கற்பாற்கு அது (இன்ன பயனை அளிக்கும் என்பார்) "**துனை நீக்கி, அல்லல் அறுத்து, ஆநந்தம் ஆக்கி, எல்லை மருவா நெறி அளிக்கும்**" என இப்பாவில் சிறப்புப்பாயிர உறுப்புக்களுள் நூற்பயன் ஒன்றனையே எடுத்துச் சொல்லிப் புகழ்ந்தார் செந்தமிழ்ச் செந்நெறிதெரிந்த செந்நாப் புலவர் ஒருவர் என்க.

சிறப்புப் பாயிர உறுப்புக்களுள் நூற்பயன் ஒன்றனையேயும் உரைக்கும் ஆன்றோர்தம் அரு நெறியை மறந்தபடியால் திரு. "**மறைமலை அடிகள்**" ஆயினார் ஒருவர், (திருவாசகத்துள் முதல் நான்கு நெடும் பாக்கட்கு மட்டும்) தம்மால் எழுதப்பட்ட "**திருவாசக விரிவுரை முதற்பாகம்**" என்னும் நூலகத்தே, தம்மின்

முன்னர், நூல் முற்றும் உரை எழுதிய ஆசிரியர் ஒருவரை இகழ் தற் பொருட்டு, இப்பா, சிறப்புப்பாயிரம் ஆதலால் இப்பாவில் ஆக்கியோன் புகழைக் கூறி இருத்தல் வேண்டும் என்ற எண்ணத் தினல் "எல்லே மருவா நெறி அளிக்கும்" என்ற தொடரைத் திருவா தவூர் அடிகளைச் சிறப்பிக்கும் அடை மொழித் தொடர் என உரை எழுதினர். அவர்தம் உரை, பொருத்தம் அற்ற உரையே. என்னை?

முன்னர்க் காட்டப்பட்ட ஏதுக்கள்படி சிறப்புப் பாயிர உறுப் புக்களுள் நூற்பயன் ஒன்றனையேயும் உரைக்கப்படும் வழக்கு உண்மையாலும், பலசுருதி — நூற்பயன் நுவலப்படும் பாக்களில் நூலை ஆக்கியோன் சிறப்பும் செப்பல் வேண்டும் என்று செந்நாப் புலவர்தம் செவ்விய ஆணை ஒன்று இன்மையாலும் ஆம்.

மற்றும், அவர் கொண்ட கொள்கை கவியால் கருதப்படாத ஒன்று, என்னை? கவி, "அளிக்கும்" என்ற மொழியைப் பெயர் எச்சமாகக் கொண்டு 'வாதவூர்' என்னும் திருப்பதிக்கு ஏனும் 'கோன்' என்ற மாணிக்கவாசகருக்கு ஏனும் அடை மொழியாக வைத்து இருப்பார் ஆயின், ஆக்கி என்ற சொல்லோடு "அது" எனும் சொல்லைச் சேர்த்து "ஆக்கியது" என (மயங்கும்படி) இறந்தகால முற்றுச் சொல் ஆக்காமல் "ஆக்கி" என்ற சொல்லோடு "இடும்" என ஒரு சொல்லைக் கூட்டி "ஆக்கிடும்-ஆக்கியிடும்" என (ஐயமற) எதிர்கால (செய்யும் என்) முற்றுச் சொல்லாகவே கொள்ளும்படி வைத்திருப்பார். "ஆக்கியது" என்ற சொல்லை "ஆக்கிடும்- ஆக்கி யிடும்" என வைத்து இருப்பினும் குற்றம் ஒன்றும் இன்று அன்றே? ஆதலால், கவி, "ஆக்கி" என்ற எச்சம் "அளிக்கும்" என்ற முற் ருெடு முடிதலை வேண்டியே "ஆக்கி" என்ற எச்சத்தின் முன்னர் "அதே" என்ற அசை நிலை பெய்து "ஆக்கியதே" எனச் சீரை நிரைத்தார் எனக் கொள்ளுதலே கவிக்கருத்தாம் ஆதலால். அன்றி,

"ஆக்கி" என்ற எச்சச் சொல் ஈறு திரிந்து "ஆக்கியது" என முற்றாக நின்றது எனவும், ஆதலால் அது, முற்று எச்சம் எனவும் கூறினும் பொருத்தம் ஆகும். "ஆக்கியது" என்பது இறந்தகால முற்றுச் சொல்லே எனக் கோடல் எவ்வகையானும் இவண் பொருந்துவது அன்று எனக் கொள்ளுதலே நேர்மையாகும்.

இவ்வேதுக்களினல் "எல்லே மருவா நெறி அளிக்கும்" என்ற தொடரை, வாதவூர் அடிகளைச் சிறப்பிக்கச் செறித்த அடை மொழித் தொடர் என்ற திரு. மறைமலை அடிகள் ஆகிய விரிவுரை காரர் கொள்கை விளிந்தது என்க.

நூல் : (திருவாசகம்—சிவபுராணம்.)

*திருச்சிற்றம்பலம்.*

[1]நமச் சிவாய வாஅழ்க! நாதன்தாள் வாழ்க!
[2]இமைப் பொழுதும் என்நெஞ்சின் நீங்காதான் தாள்வாழ்க!
[3]கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க!
[4]ஆகமம் ஆகி நின்று அண்ணிப்பான் தாள்வாழ்க!
5. [5]ஏகன் அநேகன்* இறைவன்தன் தாள்வாழ்க!

*பொழிப்புரை:* [1]வணக்கம் சிவபெருமானுக்கு என்று சொல்லப்படும் ஐந்து எழுத்துக்களால் ஆகிய திருமறை வாழ்தல் வேண்டும். அத் திரு மறையின் ஒலியையே தனக்குத் திரு மேனியாக உடைய சிவபெருமானின் திரு அடிகள் வாழ்க. [2]கண் இமைத்தல் ஆகிய சிறிய கால அளவும் என்னால் மறக்கப்படாதவன் ஆகிய சிவபெருமான் உடைய திருஅடிகள் வாழ்க. [3]திருக்காழி என்று சொல்லப் படும் திருப்பதியினைத் தனக்கு ஆட்சியாகக் கொண்ட மாணிக்க மணிபோலும் செவ்விய திருமேனியான் ஆகிய சிவபெருமான் உடைய திரு அடிகள் வாழ்க. [4]ஆகமங்கள் வடிவாகி அவற்றைக் கற்பார்தம் நெஞ்சின்கண் நின்று அவர்கட்கு இன்பத்தினை ஊட்டுபவன் ஆகிய சிவபெரு மான் உடைய திரு அடிகள் வாழ்க. [5]எல்லா உலகங் களினும் உள்ளும் புறமும் எஞ்சாது நிறைந்து நிற்றலால் ஒருவன் எனவும், எல்லா உலகங்களினும் நிறைந்து உள்ள இயங்குதிணை இயங்காத்திணைகள் (சரம் அசரம்) ஆகிய இருசார் பொருள் களினும் கலந்து இருத்தலால் பலவடி வன் எனவும் சொல்லப்படும் சிவபெருமான் உடைய திரு அடிகள் வாழ்க என்க.

*குறிப்புரை :* அடி 1. வாஅழ்க: அகரம் அளபெடை, ககரம் வியங்கோள் விகுதி. அஃது இவண் வேண்டுதல் பொருளைச் சுட்டி நின்றது. இப்பகுதியில் 'வாழ்க' என வரும் ஏனைய ஐந்து இடங் களிலும் அம் மொழிக்கு 'வாழ்தல் வேண்டும்' எனவே விரித்துப் பொழிப்பு உரைக்க. நாதன்: மந்திர ஒலியை மேனியாக உடை வன், சிவபெருமான். (உரை இடத்தில் மறை: மந்திரம்)

அடி 2. என் நெஞ்சின் நீங்காதான் என்றதன் கருத்து அடி கள்தம்மால் மறக்கப்படாதவன் என்பது.

---

* மூன்பாடம், இறைவன் அடி வாழ்க.

"என் சிந்தை நீங்கா இறைவா போற்றி" (அப்-கைலா)
"நீங்காது என் உள்ளத்துள் இருப்பாய் போற்றி" (அப்-கைலா)
"எப்பொழுதும் என் நெஞ்சத்து உள்ளார் தாமே" (அப்-பழ)
"நெஞ்சில் வஞ்சம் கெடப் பேராது நின்ற
பெருங்கருணைப் பேர் ஆறே" (சிவபுரா-அடி-65, 66)
"தன் அடியார்தம் நெஞ்சம் பிரியா நிமலன்" (11-ந்திரு-நற்கீ)
"பிறப்பில் பெருமானைப் பின்தாழ் சடையானை
மறப்பிலார் கண்டீர் மையல் தீர்வாரே" (சம்-கோயி)

"என் நெஞ்சின் நீங்காதான்" என்பதற்குத் திரு. மறைமலை அடிகள், தம் திருவாசக விரி உரையுள் "அன்பால் உருகும் அடியாரது நெஞ்சத் தாமரையில் இறையவன் என்றும் விளங்கி இருத்தலின் இங்ஙனம் அருளிச் செய்தார்" என ஒரு குறிப்பும், அதனைப் பொருத்தி வைப்பான் "தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனாரும் 'மலர் மிசை ஏகினான் மாண் அடி சேர்ந்தார், நிலமிசை நீடு வாழ்வார்' என்று அருளினமை காண்க" எனத் திருக்குறளின் பாவைக் காட்டாகக் காட்டி ஒரு குறிப்பும் எழுதினார். அவரால் எழுதப் பட்ட குறிப்பும், காட்டும் பொருத்தம் அற்றன. என்னை? நெஞ்சத்தாமரை என உருவகப் படுத்திக் குறிப்பு உரைத்தது ஒரு தவறு. திருவாதவூர் அடிகள் நெஞ்சத்தாமரை என உருவகப் படுத்தி உரையாமையாலும், நெஞ்சத் தாமரை என உருவகப் படுத்தாமல் இயல்பாகவே நெஞ்சின் நின்றும் நீங்காதவன் என எழுதுதலினால்- சொல்லுதலினால் குற்றம் ஒன்றும் உண்டாகாது ஆதலாலும். இற்க, "மலர் மிசை ஏகினான்" என்ற திருக்குறளின் பாவைக் காட்டாகக் கொண்டது மற்றும் ஒரு தவறு. என்னை? நெஞ்ச மலர் - மனமலர் என அப்பாவின் ஆசிரியரால் அப்பா உருவகப்படுத்தி எழுதப்படாமையாலும், திருக்குறளின் ஆசிரியர் சமண் சமயத்தவர் ஆதலால், அவர், தம் இறையவரின் இயல்பைச் சுட்டி எழுதிய ஒரு பாவைக் காட்டாகக் கொண்டு சைவ சமயத்தவர் இறையவரின் இயல்பை விளக்குதல் பொருத்தம் ஆகாது ஆதலாலும். நிற்க,

நூற்களுக்கு உரை எழுதுபவர், சொல் அல்லது சொற்றொடருக்கு ஆகு பெயராலும், அன்மொழித் தொகைப் பெயராலும் பொருள் கொள்ளுதற்குத்தான் இலக்கண நூற்களுள் விதி உண்டு. நூலாசிரியர்கள் ஒரு வகையாலும் உருவகப்படுத்தாத இடங்களில் உரையாசிரியர்கள் உருவகப் படுத்தி உரை எழுதுதற்கு இன்று உள்ள இலக்கண நூற்களுள் விதி இல்லை. திரு. மறைமலை அடிகள்

உருவகப் படுத்திக் கூறியது வழக்கற்ற ஒரு புதியமுறை. அவர், தாம் கொண்ட புதிய முறைக்கு இலக்கண விதி என்னை என வினவுவார்க்கு யாது விடை விடுப்பரோ? பண்டு தோன்றிய கடல் கோளால் இறந்து பட்ட தமிழ் மொழியால் ஆய மறைகளுடன் தம்புதிய முறைக்கு ஆம் இலக்கண நூலும் இறந்து பட்டு இருத்தல் கூடும் என்பர் போலும். தமிழ்மொழியால் ஆய மறைகள் கடல் கோளால் இறந்து பட்டன என்பது அவர்தம் வழக்கு ஆதலால். திருக்குறளின் உரையுள் "மலர்" என்பது "உள்ளக்கமலம்" என உருவகப் படுத்தப்பட்டதே எனின், அந்நூலின் பொழிப்புரையுள் உருவகப் படுத்தி எழுதாமையாலும், சிறப்புரையின் இடையே, 'ஏகின்' என்றதற்கு இலக்கணம் கூறினாற்போல "உள்ளக்கமலம்" என உருவகப் படுத்தியதற்கு இலக்கணம் கூறாமையாலும், அவ் உருவகம் இடைச் செருகலே எனக்கொள்ளுக. அவ் இடைச்செருகல், சமண் சமய சார்பான - பிறசமய சார்பான நூலைத் தம் சமய சார்பான நூல்எனக் கள்ளும் இழி செயலாளரும், இலக்கண விதியை அறியாதவரும் ஆகிய ஒருவரால் செருகப் பட்டதெனக் கொள்ளுக. அவ்வுருவகம், கவிக்கருத்தன்று. அது கவிக்கருத்தாயின் "மலர்மிசை" என்பது "மனமலர்" என இருக்கும். என்க.

பிற சமயத்தவர் எழுதிய நூற்களின் நின்றும் காட்டுக்களைக் கொள்ளுதல் ஆகாதோ? ஆகாது. என்னை? யாவருக்கும் பொதுவான, மொழிக்கு உரிய இலக்கண வரம்புகட்கு ஆம் காட்டுக்களை மட்டும் எம்மதத்தவரால் எழுதப்பட்ட நூலாக இருப்பினும் அந் நூலின் நின்றும் எம்மதத்தினரும் காட்டாகக் கொள்ளல் ஆம். திருவாசகம், சைவ சமயத்தவர் நூல் ஆதலால், இருக்கு முதலான வேதங்களை ஒப்புக் கொண்ட சிறப்பான சைவ சமய நூற்களின் நின்றும் காட்டுக்களைக் காட்டாமல் (இருக்காதி வேத, உபநிடத, ஆகம, புராணங்களை ஒப்புக் கொள்ளாமையால்) அயல் மதத்தார் ஆகிய பௌத்த சமண சமயத்தவர், தம் இறையவரின் இயல்பைச் சுட்டி எழுதிய பாக்களைக் காட்டாக எடுத்துக் காட்டிச் சைவ சமயத்தவர், தம் இறையவரின் இயல்பினை விளக்குதல் பொருத்தம் ஆகாது ஆதலால்.

நன்று! திருக்குறளின் ஆசிரியர் சமண் சமயத்தவர் ஆவர் என்றதன் ஏது என்னை? அதன் ஏதுவினை இந்நூலின் இறுதியில் உள்ள "திருக்குறளின் ஆசிரியர்தம் மதம் சமணமே" என்ற கட்டுரையைக் கண்டு தெளிக.

*அடி 3. கோகழி: திருக்காழி. குருமணி, சிவபெருமான். கோகழி என்பதற்குப் பலர் திரு ஆவடுதுறை என்று சொல்லப்படும் திருப்பதி என்பர்.* திரு. மறைமலை அடிகள் *என்பார் (முதல் நான்கு நெடும்பாக்கட்கு மட்டும்) தம்மால் எழுதப்பட்ட* "திருவாசக விரிவுரை" *என்ற நூலகத்தே* "கோகழி" *என்பது* "திருப்பெருந்துறை" *என்று சொல்லப்படும் திருப்பதி எனப் பொருள் உரைத்தார். அவ்விரு சாராராலும் உரைக்கப்பட்ட பொருள்கள் பொருத்தம் உடையன அல்ல. என்னை? இந்நூலின் ஈற்றில் உள்ள* "கோகழி என்பது திருக்காழித் திருப்பதியே" *என்ற கட்டுரையைக்காண்க.*

*அடி 4. அண்ணிப்பான்: தித்திப்பான், இனிப்பான், இன்பத்தை ஊட்டுவான், சிவபெருமான்.* திரு. மறைமலை அடிகள், *தம்* விரிவுரையுள் "அண்ணிப்பான்" *என்பதற்கு* "அணுகி அருள்புரிவான்" *(அண்ணித்தல்-அணுகுதல்) எனப் பொருள் உரைத்தார், அவர், உரைத்த பொருளும், அப்பொருளைப் பொருத்தி வைப்பான் கொண்ட ஏதுக்களும் பொருத்தம் உடையன அல்ல. என்னை?*

*"சேயன் அணியன் தித்திக்கும் தீங்கரும்பு-ஆய்*
*அமுதும் ஆகி நின்று* அண்ணிக்கின்றானே" *(திருமந்-2365.)*
*"ஆலைபடு கரும்பின் சாறுபோலே* அண்ணிக்கும்
*அஞ்சு எழுத்தின் நாமத்தான் காண்"* *(அப்-வீழிமி.)*
*"ஆலையின்பாகுபோல* அண்ணித்திட்டு *அடியார்க்கு"* *(அப்-வீழி.)*
*"அணியானை* அண்ணிக்கும் *ஆன்பால் தன்னை"* *(அப்-நாகே)*
*"ஆன அஞ்சு எழுத்தும் ஓதவந்து* அண்ணிக்கும்
*தேனை போலர் திரு நாகேச்சரவரே"* *(அப்-நாகே)*
*"கொத்து அலர் குரங்காடு துறையுறை*
*அத்தன் என்ன* அண்ணித்திட்டு *இருந்ததே"* *(அப்-தென்குரங)*
*"திருப்புத்தூரானைச் சிந்தை செயச் செயக்*
*கருப்புச் சாற்றிலும்* அண்ணிக்கும் *காண்மினே"* *(அப்-அரிசில்)*
*"எண்ணித் தம்மை நினைந்து இருந்தேனுக்கு*
அண்ணித்திட்டு *அமுது ஊறும் என் நாவுக்கே"* *(அப்-வெண்ணி)*
*"உள்ளம் குளிர அமுது ஊறி* அண்ணிப்பாநுப்" *(அப்-வெண்ணி)*
*"ஆர் அமுதாய்* அண்ணிக்கும் *ஐயாற்றான் காண்"* *(அப்-ஆதிரை)*
*"நாத்தான் உன் திறமே திறம்பாது நண்ணி*
அண்ணித்து *அமுதம் பொதிந்து ஊறும்"* *(சுந்தரர்-வலிவ.)*

*எனத் திருமுறைகளில் குறிக்கப்பட்ட உவமைச் சுட்டுக்களால்* "அண்ணித்தல்" *என்பதற்குத்* "தித்தித்தல்" *இனித்தல் எனப் பொருள்கூறுதலே பொருத்தமும் கவிக்கருத்தும் ஆகும் ஆதலால்.*

"நண்ணித் தென்குருகூர் நம்பி என்றக்கால்
அண்ணிக்கும் அமுது ஊறும் என் நாவிற்கே" (நாலா-கண்ணி)

என வைணவ சமய ஆசிரியர்களும் "அண்ணிக்கும்" எனும் மொழியைத் "தித்திக்கும்" இனிக்கும் எனும் பொருள் கொண்டு ஆண்டு இருத்தலை இவண் நினைக்க.

அடி 5. ஏகன்: (வடமொழி) ஒருவன், சிவபெருமான். சிவ் பெருமான், சருவ சங்கார காலத்தில் தனித்து நிற்றலால் அப்பெருமானை ஏகன் என்றார் என்க.

"இறந்து பிறந்து உழல் உயிர்கள் இளைப்பாற இறைவன்
இலயம் செய்து உலகு அனைத்தும் ஏகன் என நின்றே"
(சிவநெறிப்பிரகாசம், 71.)

"ஒரு காலத்து ஒன்றாகி நின்ற அடி" (அப்-அதிகைவீ)

சிவபெருமான், தன்னை ஒப்பார் ஒருவர் இல்லாப் பெருமையான். ஆதலால், அப்பெருமானை ஏகன் என்றார் எனலும் ஆம்.

"மற்று ஆரும் தன்னொப்பார் இல்லாதானை" (அப்-கோயில்)
"தான் அல்லால் துணையும் இல்லை" (அப்-ஐயாறு)
"குலத்தானைத் துணை இல்லை" (அப்-பொதுத்தா)
"ஒப்பு அரிய குணத்தானை இணை இலியை" (சுந்தரர்-ஆரூர்)
"தன் நேர் பிறர் இல்லானை" (சம்-மீயச்சூர்)
"ஒப்பு உனக்கு இல்லா ஒருவனே" (திருவாச-பிடித்த)

அநேகன்: (வடமொழி) பலவடிவன், சிவபெருமான். ஐம்பெரும் பூதங்கள் இருசுடர்கள் இயமான் ஆகிய எட்டுப் பொருள்களும், ஆக்கல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் ஆகிய ஐந்து வகைத் தொழில்கட்கும் ஐந்து வகைத் தலைவர்களும் ஆயினான் சிவபெருமானே. ஆதலால், அப் பெருமானை அநேகன் என்றார் எனலும் ஆம்.

"ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப" (திருமுருகு-254) என்ற தொடருக்கு ஆசிரியர் நச்சினார்க்கு இனியரால் எழுதப்பட்ட பொருளையும் குறிப்பையும் இவண் நினைக்க. அன்றி,

"ஏகனும் ஆகி அநேகனும் ஆனவன்
நாதனும் ஆனான் என்று உந்தீபற
நம்மையே ஆண்டான் என்று உந்தீபற" (திருஉந்தி-5)

"எண்ணுறும் ஐம்பூதம் முதல் எட்டுருவாய் நின்றானும்
பெண்ணுற நின்று ஆடும் பிரான்" (திருக்களி-83)

என்ற சைவ சித்தாந்த திரு முறைகளின் கருத்துக்களும் இவண் நினைத்தற்கு உரிய ஆம். இறைவன், சிவபெருமான்.

*இவ்வாழ்த்துப்பகுதி முற்றும் "தாள் வாழ்க, தாள் வாழ்க" என இருத்தலால் இந்த ஒரு அடியில் மட்டும் "அடி வாழ்க" என்று இருத்தல் சிறப்பில்லை. ஆதலால், "அடிவாழ்க" என்ற பாடம் "தாள் வாழ்க" எனத் திருத்தப்பட்டது. இத்திருத்தத்திற்கு ஏற்பத் தளை தட்டாமைப் பொருட்டு "இறைவன்" என்ற பாடம் "இறைவன் தன்" எனத் திருத்தப்பட்டது. தன், அசை.*

6. [1]வேகம் கெடுத்து ஆண்ட "வேந்துகழல்"* வெல்க!
[2]பிறப்பு அறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க!
[3]புறத்தார்க்குச் சேயோன்தன் பூங்கழல்கள் வெல்க!
[4]கரம் குவிவார் "கண்மகிழும்"† கோன்கழல்கள் வெல்க!
10. [5]"சிரம் கவிவார்"‡ ஓங்குவிக்கும் சீரோன்கழல் வெல்க!

பொழிப்புரை: *[1]விருப்பின் பொருட்டும் வெறுப்பின் பொருட்டும் விரைந்து செல்லும் என்னுடைய ஆர்வத்தினைத் தன் திரு அருளாலே தடுத்து அதனைத் தன்னுடைய திரு அடிகளின் கீழ் நிறுத்தி என்னை அடிமையாகக் கொண்ட சிவபெருமான் உடைய திரு அடிகள் என்றும் எவ்விடத்தும் வெற்றியினைப் பெறுதல் வேண்டும். [2]துன்ப நுகர்ச்சிக்கு ஏதுவான பிறப்புக்களில் உயிர்களைச் செலுத்தும் தீய வினைகளைத் தன் திரு அருளால், தன் இடத்து அன்பு வைத்து ஒழுகும் அடியார்கள் உடைய உயிர்களைப் பற்றுதபடி தடுத்து, அவ்வுயிர்கட்கு என்றும் அழியாத இயல்பினது ஆகிய இன்ப நுகர்ச்சிக்கு ஏதுவான வீட்டினைத் தந்து அருளும், சிவபெருமான் உடைய திரு அடிகள் வெல்க. [3]தன்னிடத்தில் அன்பையும் பணிவையும் வையாமல் புத்தர், அருகர் முதல் ஆயினோரையும் முழுமுதல் தேவர்கள் என எண்ணி அவர்கள் இடத்தில் அன்பையும் பணிவையும் வைத்து ஒழுகுவார்க்கு அருள் செய்யாமல் அவர்களுக்கு நெடுமையில் நிற்பவன் ஆகிய சிவபெருமான் உடைய பொலிவு பெற்ற திரு அடிகள் வெல்க. தன்னை நினைத்துக் கைகளைக் கூப்பி வணங்கும் அடியார்தம் மனத்தின் கண்ணே மகிழ்ச்சியை உடையவனுய் வீற்று இருக்கும்*

---

*முன்பாடம், "வேந்தன் அடி"*. "உள்மகிழும்."† "சிரம் குவிவார்."‡*

*சிவபெருமான் உடைய திரு அடிகள் வெல்க. [5]தன்னை நினைத்துத் தலையைக் கவிழ்த்து வணங்கும் அடியார்களைச் சிறப்பு உறச் செய்விக்கும் சிவபெருமான் உடைய திரு அடிகள் வெல்க என்க.*

*குறிப்புரை: அடி 6. வேகம்: (ஆகு பெயர்) வேட்கை, ஆர்வம்.*

"வெய்ய வேட்கை வேர் அரிந்து" (சீவக சிந்-1534.)
"வேட்கை வேர் வீழ்த்து" என்றார் பிறரும். (சீவக சிந்-389.)

**வேந்தன்** *என்ற மொழி,* **விதிதன்** *என்ற சொல்லின் மரூஉ. (வீரசோழி-தாதுப்-5-உரை.) அம் மொழி, ஈறு திரிந்து* வேந்து *என நின்றது.* வேந்து, *சிவபெருமான். சிவபெருமான், திருமறைகளாகிய நூற்களுள்ளே இதனைச் செய்க, இதனைச் செய்யற்க என்பன ஆகிய விதிகளை விதித்தார் ஆதலால், வேந்தன் என்பதும் அப்பெருமானுக்கு ஒருபெயர் எனக் கொள்ளுக. "வெல்க" எனும் இப்பகுதி முற்றும் "கழல் வெல்க, கழல்வெல்க" என இருத்தலால், இவ் அடியில் மட்டும் "அடிவெல்க" என்று இருத்தல் சிறப்பில்லை. ஆதலால், சிறப்புற "அடிவெல்க" என்ற பாடம் "கழல் வெல்க" எனத் திருத்தப்பட்டது. இத்திருத்தத்திற்கு ஏற்பத் தளைதட்டாமைப் பொருட்டு "வேந்தன்" என்ற பாடம் "வேந்து" எனத் திருத்தப் பட்டது. வெல்க: ககரம், வியங்கோள் விகுதி, அஃது, இவண் வேண்டுதல் பொருளைச் சுட்டிநின்றது. இப்பகுதியில் "வெல்க" என வரும் ஏனைய நான்கு இடங்களிலும் அம்மொழிக்கு வெற்றியைப் பெறுதல் வேண்டும் எனவே விரித்துப் பொழிப்பு உரைக்க.*

*அடி 7. பிறப்பு: (ஆகுபெயர்) தீயவினை.*

"வினைவேர் அறப்பறித்த மெய்கண்ட தேவே" (சித்தாந்-இருபா)
"பிறவி அறுக்கும் பிரானூர் பெரும் புலியூர் பிரியாரே" (சம்பந்தர்)
"மறவாதார் பிறப்பு அறுக்க வல்லார் போலும்" (அப்-வீழிமி)
"பிறவி அறுக்கும் பிரானே போற்றி" (அப்-கைலா)
"கழல் தொழுவார் பிறப்பு அறுக்கும் காபாலிகாண்" (அப்-ஆரூர்)
"என் பிறவியை வேர் அறுப்பவனே" (திருவா-அடை)
"என் பிறவித் தூழைப் பறித்தவா" (திருவா-தோணோ)
"பிறப்பு அறுத்து ஆண்டு கொண்ட கூத்தனே" (திருவா-பொற்சு)

*பிஞ்ஞகன்: சிவபெருமான். பிக்ஷு என்ற வடமொழி, நூற்கள் இடையே, பிச்சு, பிச்சன், பிச்சகன் எனத் திரிபு உற்று இருத்தல் போல "பிக்ஷு என்ற மொழியே "பிஞ்ஞகன்" எனத் திரிபுற்று*

நின்றது எனக் கொள்ளுக. "பிஞ்ஞகன்" என்பதன் பொருள் பிச்சை ஏற்பவன் என்பது. நூற்களில் "வித்தை" என்ற வடமொழி விச்சை, விஞ்சை, விஞ்ஞை எனத் திரிபுற்று இருத்தலை நினைக்க.

"பிஞ்ஞகனும் வேடத்தான் காண்" (அப்-ஏகம்)
"உலகங்கள் தோறும் பிச்சைநுகர் இச்சையர்" (சம்-வேதவ)

அன்றிப், "பின் நகன்" என்ற இரு சொற்கள் கூடிப் "பிஞ்ஞகன்" எனத் திரிபு உற்று ஒரு சொல் நீர்மைத்தாய் நின்றன எனலும் ஆம். என்னை? அன்னை-அஞ்ஞை எனவும், (சிலப்-9-24) ஈர்ஐந்நாள்-ஈரைஞ்ஞாள் எனவும், (சூளா-சுய-213) கிந்நரம்-கிஞ்ஞரம் எனவும், (சூளா-துற-60.) நகரம், ஞகரம் ஆகத் திரிபு உற்று இருத்தல் போல இவண் "பின் நகன்" என்ற இரு மொழிகள் கூடிப் "பிஞ்ஞகன்" எனத் திரிபு உற்று ஒரு சொல் நீர்மைத்தாய் நின்றன எனக் கொள்ளுக. அப்படிக் கொள்ளுங்கால் அப் பின்-நகன் "பிஞ்ஞகன்" என்ற பெயரின் பொருள் பின் புறத்தில் ஒளியை உடையவன் என்பது எனக் கொள்ளுக. (பிஞ்ஞகன்) பின்நகன்: பின், புறம். நகன்: ஒளியை உடையவன். நகுதல்: ஒளிறுதல், ஒளிர்தல்.

"நாகத்தால் விழுங்கப் பட்ட நகை மதிக் கடவுள்" (சீவகசிந்-2610)
"நிலவு நக்கு வரும் கண்ணி சூடி வந்தார்" (பதி3ஓ-கபி)

சிவபெருமான் முன்புறத்தில் (மார்பில்) திரு நீற்றுத் துகள்களையும், அரவுகளையும், ஆமை ஓட்டினையும், பன்றிக் கொம்பினையும், தலைகளையும், எலும்புகளையும், ஆபரணம் என அணிந்து இருத்தலால், அப்பெருமான் உடைய முன் புறத்திலும் பின் புறமே மிக்க ஒளியை உடையது எனக்கொள்ளுக.

"ஏனஎயிறு அரவொடு என்பு வரிஆமை இவைபூண்டு" (சம்-மயிலை)

பெய்கழல்: (ஆகு பெயர்) திரு அடி. "புனைகழல்" (புறம்-76) "ஒலிக்கழல்" (சீவகசிந் - 266) "மொய்கழல்" (சம்ப-ஆனைக்) புனைதல், ஒலித்தல், மொய்த்தல் என்ற சொற்கள் கழலைச் சிறப்பித்தல் போலப் பெய்தல் என்ற சொல்லும் கழலைச் சிறப்பிக்கும் அடை மொழி எனக் கொள்ளுக. அம்மொழி, அடியைச் சிறப்பிக்கும் அடை மொழி அன்று. கழல் என்பது பொன்னால் செய்யப்பட்டதும், அதனுள் முத்து முதலிய மணிகளைப் பரலாகப் பெய்யப்பட்டதும், கழற்சிக்காய் போன்றதும் ஆகிய மணிகள் பலவற்றைத் தொடுத்துப் பிணிக்கப்பட்டதும், அசையுந்தோறும் ஒலிப்பதும் காலின்கண் அணிதற்கு ஆவதும் ஆகிய ஒருவகை அணி.

"பொன் அணிந்து இலங்குகின்ற ஒலிக்கழல்" (சீவகசிந்-266.)

திரு. மறைமலை அடிகள் தம் விரிவுரையுள் "பெய் கழல்" என்பது திரு அடிக்கு வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழிப் பெயர் என்று உரை எழுதினர். அன்றிப் "பெய்கழல்" என்ற தொடரைச் "செறிக்கப்பட்ட வீரகண்டை எனச் செயப்பாட்டு" வினை வாய்பாடாக விரித்தும் எழுதினார் அவர்கொண்ட பொருளும் செயலும் பொருத்தம் உடையன அல்ல. என்னை?

வினைத் தொகைப் புறத்து அன் மொழிப் பெயர் கொள்ளுங்கால். வினை, தற்கிழமைப் பொருளை ஏற்று நிற்கும்படி வினைத் தொகைத் தொடரைச் செய்வினை வாய்பாடாகவே விரித்து உரைத்தல் ஆன்றோர் தம் வழக்கு. ("தாழ் குழல்" என்பதில் வினை, தற்கிழமைப் பொருளை ஏற்று நிற்றலை நினைக்க.) "தாழ் குழல்" என்பதனைத் ("தாழ்ந்த குழல்" எனச் செய் வினை வாய்பாடாக விரித்து உரைத்தல் அன்றித்) "தாழ்த்தப்பட்ட குழல்" எனச் செயப் பாட்டு வினை வாய்பாடாக விரித்து உரைத்தல் ஆன்றோர் தம் வழக்கு அன்று. உரை ஆசிரியர்கள் யாவரும் வினைத் தொகைப் புறத்து அன் மொழிப் பெயர் கொள்ளுங்கால் வினைத் தொகைத் தொடரைச் (செயப்பாட்டு வினை வாய்பாடாக விரித்துப் பொருள் கொள்ளாமல்) செய்வினை வாய்பாடாகவே விரித்துப் பொருள் கொண்ட வழக்கையும் நினைக்க. ஒரு தொடரைச் செயப்பாட்டு வினை வாய்பாடாக விரித்து அன்மொழிப் பெயர் கொள்ளின் அப்பெயர், வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன் மொழிப் பெயர் ஆகும் அன்றி, வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன் மொழிப்பெயர் ஆகாது. இந்த ஏதுக்களால் "பெய்கழல்" என்பது இவண் ஆகு பெயரே, அன் மொழிப் பெயர் அன்று. நிற்க,

கழல் எனும் சினைக்கு ஏற்ற முதலின் பெயர் தொகாமல் "பிஞ்ஞகன்" என்ற பெயர் வெளிப்பட்டு (விரிந்து) இருத்தலால் இவண் அன்மொழிப் பெயர் கொள்ளுதல் பொருத்தம் அன்று. என்னை ? அன்மொழிப் பெயர் கொள்ளுதற்கு முதலின் பெயர் தொக்கு இருத்தல் வேண்டும் ஆதலால். அடியை முதலின் பெயர் ஆகக் கொள்ளல் ஆகாதோ ? ஆகாது. என்னை ? "பொன் தாலி" என்ற தொடரை விரித்து அன் மொழிப்பெயர் கொள்ளுங்கால் பொன்னால் ஆய தாலியை அணிந்து உள்ள "சினை ஆகிய" கழுத்தைக் கொள்ளாமல் "முதல் ஆகிய" மகளையே கொள்ளுதல் வழக்கு ஆதலால். இவ் ஏதுக்களால் திரு. மறைமலை அடிகள் கொண்ட பொருளும் செயலும் தவறுடையவேஆம். என்க.

அடி 8. புறத்தார்: சிவ பெருமானை முழுமுதல் கடவுள் என நம்பி அப் பெருமான் இடத்தில் அன்பு வைத்துப் பணி செய்யாமல் புத்தர் சமணர் முதலிய பலரையும் முழுமுதல் கடவுளர் என நம்பி அவர்களிடத்தில் அன்பு வைத்துப் பணி செய்து ஒழுகுபவரும், உலகமக்களை வஞ்சித்தல் பொருட்டுச் சிவபெருமான் இடத்தில் உண்மையாக அன்பு வைத்து ஒழுகும் அடியார்களைப்போல நடிப்பவரும் ஆவர். சேய்: (சேண்மைவிகாரம்) நெடுமை. சேயோன்: நெடுமையில் நிற்பவன். சேய், செம்மை விகாரம் அன்று. ஆதலால், இவண் செம்மை நிறம் உடையவன் என்பது பொருள் அன்று. பூங்கழல்: பொலிவு பெற்றகழல், (பூங்கழல் காலினானும், சீவகசிந்—1265) கழல்: (ஆகுபெயர்) அடி.

"நினையாத பாவிகளை நீங்கக் கொண்டார்" (அப்-தனித்தா)
"மனம் உருகி நினையாதார்க்கு வஞ்சகன்காண்" (அப்-காஞ்சி)
"வஞ்சனையால் அஞ்சு எழுத்தும்
வழுத்துவார்க்குச் சேயானை" (அப்-வீழி)
"பணியாய் மட நெஞ்சே பல் சடையான் பாதம்
பணியாத பத்தர்க்குச் சேயன்" (11-ந் திரு-கபி-சிவ)
"பணி செய்வார்க்கு இரங்கும் பசுபதீ" (திருவிசை-மூகத்)

அடி 9. கரம்: (வடமொழி) கை. குவிவார், குவிப்பார் திரிபு. கண்: (இடப்பொருள் உணர்த்தும் உருபு வாக்கியம் ஆதலால்)—மனம். " உள் " என்ற பாடம் மோனைத் தொடையால் முரண் ஆகின்றது. ஆதலால், மோனைத் தொடை முரண் ஆகாமைப் பொருட்டு அப்பாடம் " கண் " எனத் திருத்தப்பட்டது. அக்கண், இவண் ஆகுபெயரால் மனத்தை உணர்த்தி நின்றது எனக்கொள்ளுக. மனக்கண் விகாரம் எனினும் ஆம். மனத்திற்கு " நோக்கு அல் நோக்கம்" என்பதும் ஒரு பெயர் ஆதலால்.

" கோன் " என்ற பாடத்தை க்"கான்" எனத் திருத்திப் பூப் போலும் அடி எனப் பொருள் கொள்ளல் ஆம். கான் : மணம், மலர், பூ (சீவகசிந். 2415.) ஆயினும், அடி எனும் சினைக்கு ஏற்ப முன் அடிகளில் வேந்து (வேந்தன்) பிஞ்ஞகன், சேயோன், எனவும், பின் அடியில் சீரோன் எனவும் முதலின் பெயர்களைக் கூறி இருத்தலால் இவ்வடியில் மட்டும் முதலின் பெயரைச் சுட்டும் சொல் இல்லாமல் வாளா "அடி" எனக் கூறி இருப்பர் ஆசிரியர் எனக் கொள்ளுதல் பொருத்தம் அன்று என்க.

---

16-பக்கங்கள் மதறாஸ், ஹாடன் & கோ. அச்சிடப்பட்டது.

திரு. மறைமலை அடிகள், தம் விரிவுரையுள் "மகிழும்" என்ற எச்சத்தின் முதல் நிலையாகிய "மகிழ்தல்" எனும் தொழிலை அடியார்தம் தொழில் எனக் கொண்டு 'கை கூப்பி வணங்கும் அன்பர்கள் அகத்தே நினைந்து நினைந்து மகிழ்தற்கு ஏதுவான இறையவன் உடைய திரு அடிகள் சிறப்பன ஆக' என்று பொருளை உரைத்தார். அன்றி, அப் பொருளைப் பொருத்திவைப்பான் சில ஏதுக்களையும் எழுதினார். அவர் கொண்ட பொருளும், ஏதுக்களும் ஏற்பு உடையன அல்ல. என்னை? முன் அடியில் சிவபெருமான், தன் மாட்டு அன்புவையாத மனத்தாரைத் தன்னின் புறத்தார் ஆகக் கொண்டு அவர்கட்கு அருள் செய்யாமல் ('சேயோனாக') சேய்மையில் நிற்பவன் என்று இயம்பினார் ஆசிரியர். ஆதலால், இவ்வடியில் அவ் ஆசிரியர், சிவபெருமான், தன்மாட்டு அன்பு வைத்துக் கைகளைக் கூப்பி வணங்கும் மனத்தாரை-அடியாரைத் தன்னின் அகத்தாராகக் கொண்டு அவர்தம் மனத்தின் கண்ணே தானே அணியனாகி அவன் மகிழ்ச்சியை உடையனாய் வீற்று இருப்பான் என இயம்பினர் என்று பொருள் கூறுதலே பொருத்தமும் கவிக்கருத்தும் ஆகும் அதலால்.

'கும்பிடுவார் தமக்கு அன்பு செய்வார்' (சம்-ஆரூர்)

"எந்தை இவன் என்று இரவிமுதலா இறைஞ்சுவார்
சிந்தை உள்ளே கோயிலாகத் திகழ்வானை" (சம்-முதுகு)

"முகம் எலாம் கண்ணீர் மல்க முன் பணிந்து ஏத்தும் தொண்டர்
அகம் அலால் கோயில் இல்லை ஐயன் ஐஆறனுக்கே'(அப்பர்-தேவா)

'நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன் ' (அப்-கோயில்)

'உள்குவார் உள்ளத்தானை' (அப்பர்-தேவா)

'நினைப்பவர் மனம் நீங்ககில்லானை' (சுந்த-நன்)

' மரியான் * மரிபபார் மனத்தான்' (உமா-நெஞ்சு-12.)

'நினைப்பவர் நெஞ்சத்து உள்ளானை' (11ந்திரு-நற்கீ)

---

*மரிப்பார்: (வடமொழி திரிபு) தியானிப்பார். நினைப்பார். வைணவ மதத்தின் மீதுகொண்ட செற்றத்தால், 'மரிப்பார்' என்றதற்கு இறக்கும் பிரம்ம விஷ்ணுக்கள் என உரை எழுதினார் திரு. பூவை. கலியாண சுந்தர முதலியார் என்பார். அவ்வுரை போலி உரையே.

இவ் ஏதுக்களினுல் 'மகிழ்தல்' தொழிலே அடியார்தம் தொழிலாகக் கொள்ளாமல் சிவ பெருமானுடைய தொழிலாகக் கொள்ளுதலே சிறப்பாகும். அதுவே கவிக்கருத்து ஆதும் ஆதலால்.

அடி 10. சிரம்: (வடமொழி) தலே. கவிழ்த்தல்: சாய்த்தல். கவிவார்: (கவிழ்ப்பார் விகாரம்) சாய்ப்பார். வளேதல், வணங்குதல், பணிதல், இறைஞ்சுதல், சாய்தல் என்பன ஒரு பொருள் சுட்டும் பெயர்கள். (சீவகசிந். 53,975,-1212.)

இறையவனேத் தொழுபவர், தம் கைகளேக் கூப்பிக் கும்பிடுதலும், தலேயைச் சாய்த்து-கவிழ்த்து வணங்குதலும் முறைமை அம்முறைமைப் படியே முன் அடியில் "கரம் குவிவார்" எனக் கைகளேக் கூப்பிக் கும்பிடுதலேயும், இவ்வடியில் "சிரம் கவிவார்" எனத் தலையைச் சாய்த்து வணங்குதலேயும் கூறினுர் ஆசிரியர் எனக் கொள்ளுதலே கவிக்கருத்து ஆகும். ஆதலால், "சிரம் குவிவார்" என்ற பாடம், தொல்லே மரபு முறைமைக்கு ஏற்பச் "சிரம் கவிவார்" எனத் திருத்தப்பட்டது.

அக் "குவிவார்" என்ற பாடம் ஏட்டில் எழுதியவர் எவராலோ செறிக்கப்பட்ட பிழை பாடம் ஆகும். அன்றித், திருவாசகத்தினே முதன் முறை அச்சிட்டவர், அச்சுப் பிழைகளே திருத்திய காலத்தில் அவரின் தவருக விடுபட்டு இருத்தலும் கூடும். விடுபடுதலும் வழக்கே.* நிற்க,

கைகளேக் கூப்பிக் கும்பிடுதலும், தலேயைக் கவிழ்த்து-சாய்த்து வணங்குதலும் முறைமை-மரபு என்பதை மறந்தபடியால் திரு. மறைமலே அடிகள், தம் விரிவுரையுள் 'சிரம் குவிவார்' என்ற பிழையுற்ற பாடத்திற்கு ஏற்றபடி "தலேமேல் கைகூப்பும் அன்பர்" எனப் பொருள் உரைத்தார், அவர் உரைத்த பொருள் பொருத்தம் அற்றதாகும். என்னே? முன்னர்க் கூறப்பட்ட நூல் வழக்கினுக்கும், உலக வழக்கினுக்கும் மாருக உரைத்தார் ஆதலால்.

---

* பின்னர் பிழைகள் எனக்காட்டப்படும் இடங்கள் தோறும் அப்பிழைகள் பண்டு ஏட்டில் எழுதியவரால் அல்லது முதன்முறை அச்சிடுவித்தவரால் செறிக்கப்பட்டன எனக் கொள்ளுக.

கைகளைக் கூப்பிக் கும்பிடுதலும், தலையைக் கவிழ்த்து-சாய்த்து வணங்குதலுமே முறைமை என்றதனை மேல் காட்டப்படும் நூற்களின் கருத்துக்களால் அறிக.

"ஒருங்குகை உச்சிக் கூப்பிக
களிற்றுஎதிர் இறைஞ்சி நின்றாள்" (சீவகசிந்-975)

"உச்சிக் கூப்பிய கையினர்" (திருமுருகு-185)

"செய்ம்முக நீல மலர்த் தில்லைச் சிற்றம்பலத்து அரற்குக்
கைம்முகம் கூம்பக் கழல் பணியாரின்" (திருக்கோ-356)

"விரை எடுத்த பூந்தார் விறல் வேந்தர் அஞ்சிப்..........................
பொன் முடிகள் சாய்த்தார்" (குளா-அர-390)

'தில்லை அம்பலத்தான் கழல் தலைவைத்துக்
கைப் போதுகள் கூப்பக் கல்லாதவர்' (திருக்கோ-206)

"முடிசாய்த்து இமையோர் வளையா வருத்தாவரு
திருச்சிற்றம்பலத்து மன்னன்" (திருக்கோ-294)

'அம்பலம் முடிதாழ்த்து உன்னாதவர் வினைபோல்' (திருக்கோ-356)

"கையால் தொழுது தலை சாய்த்து உள்ளம் கசிவார்கள்
மெய்யார் குறையும் துயரும் தீர்க்கும் விமலனார்" (சம்-பாசூர்)

"தாழ்ந்து தம் முடிசாய நின்றார்க்கு இடம் என்பரால்" (சம்-கேதா)

"முடிகள் சாய்த்து அடிபேண வல்லார் தம்மேல்
மொய்த்து எழு வினை போமே" (சம்-கேதீ)

"அமரர் கணம் முடிவணங்க ஆடுகின்றானை" (அப்-கோயில்)

'கைப் போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்
முப்போதும் முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை' (அப்-காஞ்சி)

"முன்னர் இருகை முகிழ்த்து இறைஞ்சி" (மது-சொக்-உலா)

"சிலை வணக்கி மான் மறிய எய்தான் தன்னைத்
தில்லை நகர்த் திருச்சித்திர கூடம் தன்னுள்
தலை வணங்கிக் கை கூப்பி ஏத்தவல்லார்
திரிதலால் தவம் உடைத்துத் தரணிதானே" (நாலா-பெருமாள்)

"வாழ்த்துகவாய் காண்ககண் கேட்க செவிமகுடம்
தாழ்த்து வணங்குமின்கள் தண்மலரால்— சூழ்த்த

தொழாய் மன்னு நீள்முடி என் தொல்லை மால் தன்னை
வழா வண்கை கூப்பி மதித்து." (நாலா-நான்மு)

'நின் தலையைத் தாழ்த்தி
இருகை கூப்பு என்றால் கூப்பாத" (நாலா-பெரியஅ)

"காளை வடிவு ஒழிந்து கையுறவோடு ஐயுறவாய்
நாளும் அணுகி நலியாமுன்—பாளை
அவிழ் கமுகம் பூஞ்சோலை ஆரூரர்க்கு ஆளாய்க்
கவிழ்க முகம் கூம்புக என்கை" (11-ந்திரு-ஐயடிகள்)

11. [1]ஈசன் அடி போற்றி! எந்தை அடி போற்றி!
[2]தேசன் அடி போற்றி! சிவன் சேவடி போற்றி!
[3]நேயத்தே நின்ற நிமலன் அடி போற்றி!
[4]மாயப் பிறப்பு அறுக்கும் மன்னன் அடி போற்றி!
[5]சீரார் "பெருந்துறைத் தேவன்" அடி போற்றி!
16 [6]ஆராத இன்பம் "அருளி அடி" போற்றி!

*முன்பாடம்: அடி 15. "பெருந்துறைநம் தேவன்" 16 "அருளுமலை"*

பொழிப்புரை: [1]எல்லாப் பொருள்களையும் ஆளுபவனாகிய சிவ பெருமான் உடைய திரு அடிகள் என்னைப் பாதுகாத்தல் வேண்டும். யாவருக்கும் இறைபவன் ஆகிய சிவபெருமான் உடைய திரு அடிகள் போற்றி. [2]ஒளி வடிவனாகிய சிவபெருமான் உடைய திரு அடிகள் போற்றி. மங்களம் என்னும் பொருளாக உள்ள சிவபெருமான் உடைய திரு அடிகள் போற்றி. [3]தன்னிடத்தில் அன்பு வைத்து ஒழுகும் அடியாரின் மனத்தின்கண் தங்கியவனும் இயல்பாகவே மலங்களின் நீங்கியவனும் ஆகிய சிவபெருமான் உடைய திரு அடிகள் போற்றி. [4]துன்ப நுகர்ச்சிக்குக் காரணமாகும் மிக்க ஆர்வத்தினை வளர்க்கும் மாயா மலத்தால் ஆம் பிறப்புக்களைக்கெடுக்கும் பெருமை பொருந்திய சிவபெருமான் உடைய திரு அடிகள் போற்றி. [5]மிக்க புகழினை உடைய திருப் பெருந்துறை என்னும் திருப்பதியில் வீற்றிருக்கும் சிவபெருமான் உடைய

திரு அடிகள் போற்றி. தேன் அடியார்கட்கு அளவில்லாதபடி செல்வத்தினை அளிக்கும் சிவபெருமான் உடைய திரு அடிகள் போற்றி என்க.

குறிப்பு உரை: அடி 11. ஈசன், சிவபெருமான். போற்றி, போற்றிய என்னும் வியங்கோள் ஈறு திரிந்து நின்றது. போற்றிய, போற்று பகுதி. இகரம் சாரியை. யகரம் வியங்கோள் விகுதி. பரஞ்சோதி-திருவிளையாடல்-பாயிரம், "வென்றுளே' என்ற 3-வது பாவின் உரையையும், குறிப்பையும் பார்க்க. உரை ஆசிரியர், திரு. ஈக்காடு இரத்தினவேலு முதலியார் அவர்கள்.

'கய ஒடு ரவ்வொற்று ஈற்ற வியங்கோள்
இயலும் இடம் பால் எங்கும் என்ப' (நன்-வினை)

போற்றி, இகர ஈற்று வியங்கோள் என்பது உரை ஆசிரியர்கள் கருத்து. சிலப்பதிகாரத்துள் (13-92) மாதவியால் கோவலனுக்கு எழுதப்பட்ட ஓலையுள் அடங்கிய வாசகத்தில் "போற்றி" என்பதற்குப் "போற்றுவாயாக" என ஆசிரியர் அடியார்க்கு நல்லார் எழுதிய பொருளும், அவ்வோலையின் வாசகத்தையே தன் தந்தைக்குச் செலுத்துதற்கு ஆம் வாசகம் எனக் கோவலன் கொண்ட கொள்கைக்கு ஏற்பக் "குரவர்க்குக் காப்புகளைக் குறித்துப் போற்றி என்றல் மரபு" (சில்ப்-13-97 உரைக்குறிப்பு)என்று அவ் உரை ஆசிரியரால் எழுதப்பட்ட குறிப்பும், 'பொருளாட்சி போற்ருதார்க்கு இல்லை' என்ற தொடரில் (குறள்-252ல்) 'போற்ருதார்' என்றதற்குப் 'பாதுகாவாதார்' என்று ஆசிரியர் பரிமேல் அழகர் எழுதிய பொருளும், "புலி போற்றி வாழ்" என்ற தொடருக்குப் "புலியால் வரும் ஏதத்தினைப் பாதுகாத்துவாழ்" எனப் பொருள்கொண்ட (இலக்கண நூற்கட்கு உரை எழுதிய) ஆசிரியர் பலர் உடைய கருத்துக்களும் பேராசிரியர் பிரம்மஸ்ரீ உத்தமதானபதி (ஐயர்) அவர்கள் சிலப்பதிகாரத்தில் தம்மால் எழுதப்பட்ட அடியார்க்கு நல்லார் வரலாற்றுப் பகுதியில், 'ஒருதலையாகப் பொருள் கொள்ளாது பலரும் தத்தமக்குத் தோற்றியவாறே பொருள் கொள்ளக் கிடந்த 'போற்றி' என்பதை இவர், இகரஈற்று வியங்கோளாகக் கொண்டு 'போற்றுவாயாக' வென்று பொருள் செய்து இருக்கிருர்' (பக்-311-

வரி 19 ) என்றும், "நச்சினார்க்கு இனி யாரும் 'காட்டி' என்பதனை இகர ஈற்று வியங்கோளாகக் கொண்டார் (சிந்தாமணி கோவி 58) என்றும் எழுதி இருத்தலும், 'தாம் தம் பொன்னடி போற்றி' (சீவக-1880ல்) என்ற தொடரின் உரையும் இவண் நினைத்தற்பால ஆம்,

போற்றி, இவண் வேண்டுதல் பொருளைச் சுட்டி நின்றது. போற்றி என இப்பகுதியில் வரும் ஏனைய ஆறு இடங்களிலும் அப் "போற்றி" என்னும் மொழிக்குப் 'பாதுகாத்தல் வேண்டும்' எனவே விரித்துப் பொழிப்பு உரைக்க. திரு. மறைமலை அடிகள், தம் விரி உரையுள் "போற்றி" என்பதற்கு "வணக்கம்" எனப்பொருள் உரைத்தார். அப்பொருள் இவண் பொருத்தம் அன்று. என்னை? முன் னர்க் காட்டப்பட்ட ஆன்றோர் தம் வழக்கினுக்கு மாறாக உரைத்தார் ஆதலால்.

எந்தை: இறையவன். அம்மொழி, சுவாமி, கடவுள், தலைவன், இறையவன் என்பன ஆகிய பல பொருள் குறிக்கும் ஒரு தனி மொழி. முறைமைப் பொருள் சுட்டும் எம்—தந்தை என்ற இருமொழியால் ஆய மரூஉ மொழி அன்று. திரு. மறைமலை அடிகள், தம் விரிவுரையுள் "எந்தை" என்ற மொழியை முறைப்பொருள் சுட்டும் மரூஉ மொழி யாகக் கொண்டு அதனை "எம் தந்தை" எனப் பிரித்துப் பொருள் எழுதினார். அவர் எழுதிய பொருள் இவண் பொருத்தம் அன்று. என்னை? திருவாதவூர் அடிகள், போற்றித் திரு அகவல் உள் "ஈங்கு சோய் மலை எம் எந்தாய் போற்றி" என்றார்கள் ஆதலால். அடிகள் "எந்தை" என்னும் மொழியை, "எம் தந்தை" என்னும் முறைப் பொருள் சுட்டும் இருமொழியால் ஆய மரூஉ மொழி ஆகக் கொண்டு ஆண்டு இருப்பின் அம்மொழியின் முன்னர் "எம்" எனும் ஒரு மொழி யைக் கூட்டி "எம் எந்தை" என இயம்பி இரார் "எந்தை" என்ற மொழியே "எம் தந்தை" எனப் பிரித்துப் பொருள் கோடற்கு விதி இருத்தலால். திரு ஞான சம்பந்தப் பெருமானும், திரு நாவுக்கு அரசு பெருமானும் "எந்தை" என்ற மொழியை இறையவன், சுவாமி என்ற பொருள் கொண்டே ஆண்டார்கள். என்னை?

"வாழி எம்மான் எனக்கு எந்தை மேய
வலஞ்சுழி மாநகர் மேல்" (சம்ப.தேவா.)

"இயல்பாய ஈசனை எந்தை தந்தை
என் சிந்தை மேவி உறைகின்றானை" (அப்பர் தேவா.)

இவ் வேதாவிஞானும் விரிவுரைகாரர், இவ்விடத்திலும், போற்றித் திரு அகவல் உள்ளும் "எந்தை" என்ற மொழிக்கு "எம் தந்தை" என முறைப்பொருள் கொண்டு உரைத்த உரை பொருத்தம் அன்று.

அடி 12. தேசன்: ஒளியை மேனியாக உடையவன். அப்பெயர், தேஜ் என்னும் வடமொழி திரிபு. சேவடி: செம்மை அடி மரூஉ. (சிவகசிந்-கடவு-உரை.)

அடி 13. நேயம்: (ஆகுபெயர்) மனம். நிமலன், இயல்பாகவே ஆணவாதி மலங்கள் இல்லாதவன்.
'நேசனை நினைப்பவர் நெஞ்சத்து உள்ளானை' (11-ந் திரு. நக்கீ)
'நேயத்தே நின்றிடும் நிமலன்' (திருமந்-2053.)

அடி 14. மாய: (மாயா எனும் வடமொழி திரிபு) மாயா மலம். அது, மும்மலங்களுள் ஒன்று. மன்: பெருமை மன்னன், பெருமையை உடையவன், சிவபெருமான்.

அடி 15. சீர்: (உரிச் சொல்) மிகுபுகழ்.

தேவன்: மேலானவன், சிவபெருமான் 'பெருந்துறை நந்தேவன்' என்ற பாடம் மோனைத்தொடையால் முரண் ஆகின்றது.

ஆதலால். மோனைத்தொடை முரண் ஆகாமைப் பொருட்டுப் 'பெருந்துறைத் தேவன்' எனத் திருத்தப்பட்டது. பெருந்துறைநந்-தேவன்' என வகையுளிப்படுத்தினால் தளை தட்டாவிடினும் விட்டு இசைத்து இன்ப ஓசை இறத்தலை எண்ணுக.

அடி 16. ஆர்தல்: நிறைதல், முடிதல், வரைதல், எல்லை. அளவு. ஆராத: நிறைதல் இல்லாத, முடிதல் இல்லாத, வரைதல் இல்லாத, எல்லை இல்லாத, அளவு இல்லாத. இன்பம்: (ஆகு பெயர்) செல்வம். முன்னர் ஐந்து அடிகளிலும் 'அடி' எனும் சினைக்கு ஏற்ப ஈசன், எந்தை

தேசன், சிவன், நிமலன், மன்னன், தேவன், என்ற பெயர்களைக் கொண்டு முதலைக்கூறிய ஆசிரியர், இவ் ஒரு அடியில் மட்டும் முதலைச் சுட்டும் ஒரு பெயரைக் கூறாமல் விட்டு, இருப்பர் எனலும், முன்னர் ஐந்து அடிகளிலும் 'அடிபோற்றி, அடிபோற்றி' என்று கூறிய ஆசிரியர், இந்த ஒரு அடியில் மட்டும் இயைபு இல்லாத நெறியில் 'மலை போற்றி அல்லது அலைபோற்றி' என உருவகப் படுத்திக்கூறினர் எனலும் பொருத்தம் அன்று. ஆதலால், பொருத்தம் உற 'மலை போற்றி' என்ற பாடம் 'அடிபோற்றி' எனத் திருத்தப்பட்டது. திருத்தப்பட்ட 'அடி' எனும் சினைக்கு ஏற்ப ஒரு முதல் வேண்டி 'அருளும்' என்ற எச்ச மொழி 'அருளி' என முன்னிலை வினைப் பெயர் ஆகத் திருத்தப்பட்டது. அருளி: (அண்மை விளி) அருளுதலை உடையாய்.

திரு. மறைமலை அடிகள் தம் விரிவுரையுள் 'ஆராத இன்பம்' என்றதற்கு 'நுகர்ந்து நிரம்பாத இன்பம்' எனப் பொருள் எழுதினர். அப்பொருள் பொருத்தம் அன்று. என்னை? உண்டவர், உண்டும் வயிறு நிரம்பாத உணவே தந்தார் எனத் தந்தாரைக் குறை கூறுதல் போல நின்று மயங்க வைத்தலால்.

சிவபெருமான், 'அவன் அருளாலே' தன் இடத்தில் வந்து தனக்கு அருளிய திரு அருளைத் தன் மனத்துள் நினைத்து நினைந்து மகிழாநின்ற நாட்களுள் ஒருநாள் தாம், அப்பெருமானிடம் வைத்த அன்பின் பெருக்கால் அப்பெருமானை வாழ்த்துவான் எண்ணிய திருவாதவூர் அடிகள், என்றும் அழிதல் இல்லாதவனும் எல்லாம் வல்லவனும் ஆகிய அச்சிவபெருமானுக்குப் பல்லாண்டு கூறிய பண்டையோர் வழக்குப்படியே, தாமும், அப்பெருமான் வாழ்தல் வேண்டும் என ஒரு அடி முதல் ஐந்து அடிகள் வரையிலும் 'வாழ்க, வாழ்க' எனவும் வாகை வடிவன் ஆன அப்பெருமான் வெற்றி பெறுதல் வேண்டும் என ஆறுவது அடி முதல் பத்தாவது அடி வரையிலும் 'வெல்க, வெல்க' எனவும், பொறை எனும் பொருளாக உள்ள அப் பொன் மேனியானை நோக்கி, மக்கள் பிறப்பினர் சிற்றறிவினர் ஆதலால், பிழை செய்தல் இயல்பே. யான் எப்பிழை செய்யினும் அப்பிழையைப் பொறுத்தருளி என்னைப்பாது

கொத்து அருள் வேண்டும் எனப் பதினோராவது அடி முதல் பதினொ ன்றாவது அடிவரையிலும் 'போற்றி, போற்றி' எனவும், சிவபெரு மானுக்குப் பல்லாண்டும், வெற்றித்திறமும், தனக்குப் பாது காப்பும் வேண்டிக்கூறினார் என், ஒருஅடிமுதல் பதினொன்றாவது அடிவரை ஒருவினை முடிக்க.

தாழ்ந்தார், தம்முடைய தலைவர் மாட்டுத் தம், குறையைக் கூறிக்கொள்ளுங்கால் முன்னர் அவர்க்கு வாழ்த்துக் கூறிப் பின்னர் வெற்றித் திறம் விளம்பி அதன் பின்னர்த் தம் குறையைக் கூறிக்கொண்ட முந்தையோர் முறைமைப்படியே அடிகள் தாமும், யாவருக்கும் தலைவராகிய சிவபெருமான் இடம் தனக்குப் பாதுகாப்பு வேண்டுங்கால் முன்னர் வாழ்த்துக்கூறிப் பின்னர் வெற்றித் திறம் விளம்பி அதன்பின்னர்த் தமக்குப் பாதுகாப்பை வேண்டினார். அம்முறைமையைச் சிலப்பதிகாரத்துள் பல இடங் களில் காணலாம்.

17. [1]சிவன் அவன் என் சிந்தை உள் நின்ற அதனால்
[2]அவன் அருளாலே அவன் தாள் வணங்கிச்
[3]சிந்தை மகிழச் சிவ புராணம் தன்னை
20. [4]'உந்தை' வினை முழுதும் ஓய உரைப்பன் யான்.

முன்பாடம், அடி 20ல் 'முந்தை'

பொருள் கோள்: 'சிவன் அவன் அவன் அருளாலே' எனமொழி மாற்றுக.

பொழிப்புரை: [1]சிவபெருமான் தன் பேர் அருளால் என்னுடைய மனத்து அகத்தே நின்றான் அதனால் [2]யான் அப்பெருமான் உடைய திரு அடிகளை வணங்கித் [3]தானே தன் அருளால் என் மனத்தின்கண் மகிழ்ந்து வீற்று இருக் கும் அந்தச் சிவபெருமான் ஆகிய பழமையோன் முன்னர் [4]என்னுடைய பண்டைய பாவங்கள் முற்றும் கெடும் பொரு ட்டு யான் என் துன்பத்தினை எடுத்து உரைப்பன்என்க.

இந்நான்கு அடிகளின் கருத்து: திருவாதவூர் அடிகள், முதல் அடிதொட்டுப் பதினொன்றாவது அடிவரைக் கூறியபடி தம்மைப் பாது காக்கும்படி விண்ணப்பிக்குங்கால், அவர் தம், மனத்தின்கண் எழுந்த எண்ணம் எனக்கொள்ளுக. வெள்ளிடை விளம்பல்அன்று. மன் எழுச்சி, மன எழுச்சியை உட்கோள் என்றார் ஆசிரியர் அடியார்க்கு நல்லார் (சிலப்-16-126. உரைக்குறிப்பில்.)

குறிப்புரை: அடி 17. சிவன் அவன்: (இரு பெயர் ஒட்டு) சிவபெருமான்.

அடி 18. அவன் அருளாலே, ஏகாரம், அசை நிலை.

"நானே பிறந்து பயன் படைத்தேன் அயன் நாரணன் எம்
கோனே எனத் தில்லை அம்பலத்தே நின்று கூத்து உகந்த
தேனே திரு உள்ளம் ஆகி என் தீமை எல்லாம் அறுத்துத்
தானே புகுந்து அடியேன் மனத்தே வந்து சந்திக்கவே"

(11-ந் திருமு. பட்டின-கோயில்)

'நானேயோ தவம் செய்தேன் சிவாய நம எனப் பெற்றேன்
தேனாய் இன் அமுதமும் ஆய்த் தித்திக்கும் சிவபெருமான்
தானே வந்து என் உள்ளம் புகுந்து............அருள் செய்தான்'

(திருவாச. எசறவு.)

அடி 19. மகிழ: அகரம், சுட்டு. (அது, செய என் எச்சவிகுதி அன்று.) அச்சிவபிரான் எனக் கூட்டுக. அச்சுட்டு, அவன் அருளாலே நின்ற சிறப்பை உணர்த்தி நின்றது. அழகு எனும் பண்புப் பொருள் ஏற்று நின்றது எனலும் ஆம். பண்புப் பொருள் கொள்ளுங்கால் அழகிய சிவபெருமான் எனக் கொள்ளுக. அன்றி, அசை நிலை எனலும் ஆம். இவ் வகை அன்றி, மகிழ என்ற சொல்லைச் செய என் எச்சச் சொல்லெனக் கொண்டு 'சிவபெருமான் மகிழும்படி' நான் உரைப்பன் என அடிகள் கூறினார் என உரை எழுதினார் திரு. மறைமலை அடிகள் தம் விரிவுரையுள். அவ்வுரை பொருத்தம் அன்று. என்னை? மகிழ் அச்சிவபெருமான் என் வினைத்தொகைத் தொடராகக் கொண்டு பொருள் கொள்ளுதலே சிறப்பாகும் ஆதலால். முன்னர் ஒன்பதாவது அடியில் 'கரம் குவிவார் கண் மகிழும் கோன் கழல்கள் வெல்க' என்ற தொடரில் மகிழும் என்ற எச்ச மொழியின் மகிழ்தல் தொழிலைச் சிவபெருமானது ஆக்கிச் சிவபெருமான், தன்னால் மகிழ்ந்தான் என உரைத்தாற் போல ஈண்டும் மகிழ் என்ற எச்சத்தின் மகிழ்தல் தொழிலைச் சிவபெருமானது ஆக்கித் 'தன்னாலே மகிழ்ந்து என் சிந்தையுள் வீற்று இருக்கும் சிவபெருமான்' என வினை முடித்தலே சிறப்பு. கவிக்கருத்து ஆம் ஆதலால். புராணம்: (வடமொழி) பழைமை. புராணம்: (ஆகுபெயர்) பழைமையோன். சிவபுராணம்: (இருபெயர் ஒட்டு) சிவனாகிய பழைமை யோன். புராணம் என்ற பாடத்தைப் புராணன் எனத் திருத்திக்கொள்ளலும் ஆம்:

'தாணவர் மால் பிரமன் அறியாத தகைமையினன்
ஆனவன் 'ஆதி புராணன்' (அப்-தேவா.)
'பொதியின் மேய 'புராணனை' (அப்பர்-தேவா-தாண்ட)
'புனைகடுக்கை மாலைப் 'புராணன்' (11-ந் திருமு-கபில-சிவ.)

அடி 20. உந்தை : (முந்தை விகாரம்) பண்டு. உந்தை வினை: பண்டைய வினை.

'பண்டு நாம் செய்த பாவங்கள் பற்றற'. (சம்ப-மாகா.)

'முந்தை' என்ற பாடம் மோனைத் தொடையால் முரண் ஆகின்றது. ஆதலால், அம் 'முந்தை' என்ற பாடம் 'உந்தை' எனத் திருத்தப்பட்டது. 'முந்தை' என்ற மொழியே மொழி முதல் மெய் திரிபுற்று 'உந்தை' என நின்றது எனக் கொள்ளுக. 'உந்தை' இயல் சொல் அன்று. அது திரிசொல்லே. மற்றும்.

'உந்தை உற்றதோர் சாபம் உண்மையால்' (கம்பரா-மாரா-108.)
'நூலியற்கையு நுங்குலத்து உந்தையர்' (கம்பரா-வாலி-89.)
'உந்தை மறையோர்தம்' (பெரியபு-சம்பந் 541.)
'உந்தைய உரையின் கொண்ட' (பெரியபு-சம்பந்-634.) என்ற தொடர்களுள், மோனைத் தொடை முரண் ஆகாமைப் பொருட்டு 'முந்தை' என்ற மொழி, மொழி முதல்மெய் திரிபுற்று 'உந்தை' என நின்று 'பண்டு' எனும் பொருள்சுட்டலை அறிக. நிற்க,

மற்றும், மூன்று எனும் பொருள் சுட்டும் 1மும்மை: உம்மை எனவும், பண்டு எனும் பொருள் சுட்டும் (முதுமை விகாரம்) 2மும்மை: உம்மை எனவும், யாடு, 3மேழம்: ஏழம் எனவும், தேவகணிகையருள் ஒருத்தி, 4மேனகை: ஏனகை எனவும், செறிதல், (உரிச்சொல்) 5 நள்: அள் எனவும், பாது காப்பு, 6பேண்: ஏண் எனவும், கயிறு-கட்டுதல், 7சிமிழ்த்தல்: இமிழ்த்தல் எனவும், நல்வினை, 8திருவினை: இருவினை எனவும், தீவினை, 9கருவினை: அருவினை எனவும், மயிர்க்கூர்ச் செறிவு, 10சிலிர்த்தல்: இலிர்த்தல் எனவும். அழகு, 11மணி: அணி எனவும், வாழ்க்கைப் படுத்தல், 12திருமணம்: இருமணம் எனவும், நெருங்குதல், 13கிட்டி: இட்டி எனவும், ஒரு திருப்பதியின் பெயர், 14காழி: ஆழி எனவும், உருளுதல், உலவுதல், செல்லுதல், 15திரிதல்; இரிதல் எனவும், ஒலித்தல்-முழங்கல், முழக்கல்: 16முழக்கு மறை: உழக்குமறை எனவும், மிகை-மிக்க, 17கழி: அழி எனவும், நம் முந்தைய ஆசிரியர்கள், மோனைத் தொடை முரண் ஆகாமைப் பொருட்டும், செப்பல் ஓசை சிதையாமைப்

பொருட்டும் மொழிகளை மொழிமுதல் மெய்யைக் கெடுத்து ஆண்டுள்ள முறைமையை அறிக.

அம்முறைமையை மறந்தபடியால் *ஒருவர், 'மூந்தை' என்ற பாடமே நேரியது. அப்பாடத்திற்கு 'மோய' என்ற மொழியே மோனை. (ஒய என்பது பிழைபாடம்) அம் 'மோய' என்ற மொழி 'மூய' என்ற மொழியின் திரிபாகும் எனவும், அத்திரிபிற்குப் பதிற்றுப்பத்தின்-22, 42-வது பாக்களே காட்டாகும் எனவும், ஒரு கட்டுரை எழுதி என்னால் திருத்தப்பட்ட 'உந்தை' என்ற பாடத்தினை மறுத்தார். அக்கட்டுரை பொருத்தம் அற்றதாக இருத்தலால் அதனைப் பொருள் படுத்தி அதற்கு ஒரு எதிர் உரை இயம்புதலை யான் எண்ணிலேன். அக்கட்டுரை பொருத்தம் அற்றதோ? ஆம். என்னை? 'மூந்தை' என்ற மொழிக்கு 'மூய' என்ற மொழியே மோனைத் தொடைக்கு அமையும். மோனையாகாது. ஆதலால், அம் 'மூய' என்ற 'மொழி மோய' எனத் திரிந்தது என்றதற்கு ஆம் ஏது வினை எடுத்துக் காட்டி விளக்காமையாலும், 'மூய' என்ற மொழியே 'மோய' எனத் திரிபுற்றது என்றதற்குப் பதிற்றுப் பத்தின் 22, 42-வது பாக்களைக் காட்டாகக் கொண்டமையாலும்.

அப்பாக்களைக் காட்டாகக் கொண்டதால் ஆம் குற்றம் என்னை? அப்பாக்களில் ஆளப்பட்ட 'மூய' என்ற மொழி அவண், 'நிரம்ப' எனும் பொருள் சுட்டி நிற்கின்றது. இவண், 'அழிய-கெட' என்ற பொருள் சுட்டும் மொழி வேண்டும். அவண், 'நிரம்ப' எனும் பொருள் சுட்டி நின்ற அம் 'மூய' என்ற மொழியை 'அழிய-கெட' என்னும் பொருள் சுட்டும் மொழி வேண்டிய இவண், காட்டாகக் காட்டுதல் பொருத்தம் அன்று ஆதலால். நிற்க, அவரால் பாராட்டி எழுதப்பட்ட பாணர் என்ற நூலும் இவ்வாய்வீற்குப் பொருத்தம் அற்றதாகும். என்னை? அந்நூலைப் பார்க்க.

[1 'உம்மை உலகத்து ஒளிபடும்' சூளாமணி-துறவு 164. 2'உம்மையில் வீதியாம் தண்டம்' கந்தபு-யாகசங்-170. 3'எழுகத் தகரும்' சிலப்பதி-10, 5; 'எழுகத் தகரொடு' பட்டினப்பாலை-141. 4'எனைக் திலோத்தமை முதல்' கம்பரா-சடாயு உயிர்-44; யுத்த கா-பிரா-களம்-31. 5'அள்எரி' கம்பரா-மாயா சீதை-52; சீவகசிந். 614, 1274, 2109. 6'எணிலா உடல்' கம்பரா-பிரா-களம். 31. 7'இமிழின் பூட்டி' சீவகசிந்-1091; 'வேட்டுவன் புள் சிமிழ்த்

*ஒருவர்: ஆரணி, 'வித்வான்-முத்து-சு. மாணிக்கவாசகன்' என்பார். மூந்தை, தமிழ்ப்பொழில்-துணர்-13-மலர்-3ல்.

தற்று' குறள்-274. 8'இருவினை சென்று தேய்ந்தால்' சீவகசிந்-2316. 9'அருவினை கழிய நின்ற' சீவகசிந்-375, 10' இவிர்த்த மெய்ம்மயிர்' சீவகசிந்-3009. 11' நெஞ்சத்துக் கோடாமை சான்றோர்க்கு அணி' திருக்குறள்-115; 'மணியாழ் மழலை' சீவக சிந் 2018. ' அணித் தோட்டுத் திருமுகம்' 'மணித் தோட்டுத் திருமுகம்' சிலப்-8-111, 112. 12'இலங்கு பாவை இரு மணம் சேர்த்துவார்' சீவகசிந்-1319. 13'ஆகாறுஇட்டிது ஆயினும்' குறள்-478.- 14'ஆழி அப்பா' திருவாச. அடைக்க-6; 'ஆழியூர் அண' சுந்தரர்-நாட்டுத்-7; 'ஆழி எந்தை' சம்ப-சிரபுரம்6. 15'மணவிரி அல்குல்—மணவு இரி அல்குல்' சீவகசிந்-446; யசோதர காவியம்-சருக் 2-செய்-5; ' நீர் இரி புன்சடை' சம்ப-குட மூக்கு; 'கழை துகர் தரு கரி இரிதரு' சம்ப. மறைக்-3. (விண்இரியும் திரிபுரங்கள் எரிய வைத்தார் அப்-நல்.) 16'உழக்கு மறை' கம்பரா-அகத்தி-41. 17'அழி மதம்' சூளாமணி-கலியா-86; 'அற்றார் அழிபசி தீர்த்தல்' குறள்-226; 'அழிபசிப் பேயைப் பாராய்' தக்கயாக-787, 789.]

முன்னர்க் காட்டப்பட்ட சம்பந்தர் புராணத்தின் 541-ம் செய்யுளில் 'உய்ந்தமறை' என்பது பழைய பாடம். அப்பாடம் பிழைபாடம். மற்றும், அவர்தம் புராணத்தில் செய்யுள் 443ல், 'சாக்கியர்' என்ற பாடம் 'சாத்தியர்'* எனவும், 602ல் 'மேனி செறியு மூக்குடையுமாகி என்ற பாடம் 'மேனிசெறி யுழக்குடை பாகி'† எனவும், 637ல் 'ஏர்கொள் மூக்குடையும் தாழும்' என்ற பாடம். 'ஏர் கொள் முக்குடையர் தாழும்'†† எனவும் இருத்தல் பாலவாம். அன்றி 638ல் 'குரத்தி' என்றதற்குக் 'குருபன்னி-குருபத்தினி' என்பது பொருள் அன்று. 'குரத்தி' என்பது விலங்கு இனத்தில் ஒருவகை நரி $. அது பெரும்பாலும் கழுதை போன்று இருக்கும். அதனால் அதனைக் கழுதைக் குரத்தி எனவும் சொல்லுவர் மக்களாவார். 'நாணார் அமணர் நல்லது அறியார் நாளும் குரத்திகள்' என்ற (சம். குடந்தைக்கா) தொடரில் 'குரத்தி' என்பது குரைத்தி என இருத்தற்பாலது. அதன் கருத்துப், பொருளற்ற தற்கப்பேச்சுப் பேசுபவர் என்பது. மற்றும், பெரியபுராணத்துள் மூர்த்திநாயனார் புராணத்தில் 39—வது பாவின்

'முந்தைச் செயலாம் அமண்போய் முதற் சைவம் ஓங்கில்

$சமண் சமயத்தவர் (துறவிகள்) தம் மனைவியரை உடன் வைத்துக் கொண்டு தவம் செய்தல் வழக்கு இல்லை. அவர், கோவணமும் பற்று ஆம் என்பவர் ஆதலால்.

இந்தப்புவி தாங்கி இங்கு இன் அரசு ஆள்வன் என்றார்' என்ற
பின் இரண்டு அடிகளின் பொருள்: தத்தம் முற்பிறப்புக்
களில் உயிர்களால் செய்யப்பட்ட நல்வினை தீவினைகள் ஆகிய இரு
வினைகளின் பயன்கள், தாமே உயிர்களின் பின் பிறப்புகளில்
அவ்வவ் உயிர்களுக்கு ஆக்கத்தையும் கேட்டையும் (இன்ப துன்பங்
களை) ஆக்கும். அவ்வினைகளின் பயன்களை உயிர்கட்கு ஊட்டுதற்கு
முதன்மையான (ஒரு கர்த்தா) ஒரு கடவுள் வேறே (இல்லை)
வேண்டாவாம் என்று நாஸ்திகம் சொல்லுகின்ற சமண் சமயம்
அழிதலும், ஆக்கத்தையும் கேட்டையும் (இன்ப துன்பங்களை)
ஆக்கும் நல்வினை தீவினைகளின் பயன்களை உயிர்கட்கு ஊட்டு
தற்கு முதன்மையான(ஒரு கர்த்தா)ஒரு கடவுள்(உண்டு)வேண்டும்
என்று ஆஸ்திகம் சொல்லுகின்ற சைவ சமயம் வளர்தலும் கூடும்
ஆயின், அதன் பொருட்டு யான், இந்த அரசினை ஏற்றுக்கொண்டு
இவ்வாழ்க்கையின் தங்கி இனிதாக அரசு ஆளுவன் என்றார்
மூர்த்தி நாயனார்என்பது. அதே கவிக்கருத்தாம். என்னை? சமணர்
களைக் கடவுள் இல்லை எனக் கூறுபவர் (நாஸ்திகர்) எனச் சுட்டிய
படியாம் ஆதலால்.

அப்பெரிய புராணத்திற்கு உரை கண்ட ஆசிரியருள் பலர்,
சமண் சமயத்தவர் கொள்கையை மறந்தமையால், நூலாசிரியர்,
அப்பாவில் சமண் சமயத்தவர்தம் நாஸ்திகக் கொள்கையைச்
சுருக்கமாக அமைத்து இருத்தலைப் புறக்கணித்து நூலாசிரியர்
கருத்துக்கு மாறாக (அவ்விரண்டு அடிகட்கும்) தத்தம் மனப்
போக்கின்படி பொருத்தம் அற்ற பொருள் உரைத்தார்கள்.
அவர்கள் உரைத்த பொருள் மேல்வருமாறு:

'இதற்கு முன்னே கொடிய செயலில் இருந்த சமண் மதம்
அழிந்து முதன்மை யாகிய சைவசமயம் விருத்தியானால் இந்த
ராச்சியத்தைக் கொள்ளுவேன்' என்று மூர்த்தி நாயனார் மொழிந்
தார் என்பது, தமிழ்ப்பண்டிதர். திரு. கூ. சுப்பராயநாயகர்
அவர்கள் உரை. 'இதற்கு முன் கொடிய செயலிலிருந்த சமணர்
கள் மதம் அழிந்து முதன்மையாகிய சைவ மதம் விருத்தியானால்
இந்த பூமியை வகித்து இவ்விடத்து இனிய அரசாட்சியைச்
செய்வன்' என்றார் என்பது, ஸ்ரீ. ஆறுமுகத்தம்பிரான் சுவாமிகள்
உரை. 'முன் செயலாகிய சமணம் போய், முழுமுதற் சைவம்
ஓங்குவதானால் இந்த உலகம் தாங்கி இனிய அரசாட்சியைச்
செய்வேன் என்றார்' என்பது, கோவை, வழக்கறிஞர் திரு. சி. கே.
சுப்பிரமணிய முதலியார். B. A., அவர்கள்உரை.

அத்தகையபொருத்தம் அற்ற பொருள்உரைக்கவல்ல ஆசிரி
யர்கள் பெருகா நிற்கும் இந்நாளில் சம்பந்தர் புராணம் 641ல்

'உந்தைமறை' என இருக்கத்தக்க பாடம், 'உய்ந்தமறை' எனவும், 443லும், 602லும், 637லும், 638லும் மேல் காட்டப் பட்ட பிழைகள் பொருந்தி இருத்தலும் இயல்பே அன்றோ? சம-புரா-443ல்

*சாத்தியர், ஸ்யாத்வாதியர் மரூஉ. சமண் சமயத்தவர், எப்பொருளின் தன்மையை விளக்கினும், அப்பொருளின் கிரியை யும் அழிவையும் ஏதுவாகக்கொண்டு 1ஸ்யாத் அஸ்தி-ஒரு வகை யால் உண்டு, 2ஸ்யாத் நாஸ்தி ஒருவகையால் இல்லை, 3ஸ்யாத் அஸ்தி நாஸ்தி-ஒருவகையால் உண்டு இல்லை, 4ஸ்யாத் அவக்த் தவ்யம்-ஒருவகையால் சொல்லொணாது, 5ஸ்யாத் அஸ்தி அவக்த் தவ்யம்-ஒருவகையால் உண்டு சொல்லொணாது, 6ஸ்யாத் நாஸ்தி அவக்த் தவ்யம்-ஒருவகையால் இல்லை சொல்லொணாது, 7ஸ்யாத் அஸ்தி நாஸ்தி அவக்த் தவ்யம்-ஒரு வகையால் உண்டு இல்லை சொல்லொணாது, என ஏழு வகையாக வாதித்தல் (விளக்குதல்) வழக்கு. அவ்வாதிப்பை (விளக்குதலை) அவர்கள் 'சப்தபங்கி நியாயம்' ||என்பார்கள். ஆதலால், அவர்களைச் 'சாத்தியர்-ஸ்யாத் வாதியர்' என்பர் ஆன்றோர். இவ்வேதுவினால் 'சாக்கியர்' என்ற பாடம் பிழைபாடம ஆம் எனவும், அப்பாடம் 'சாத்தியர்' என்று இருப்பின் நேரிய பாடம் ஆம் எனவும் கொள்ளுக.

||'உண்மை நல்லின்மை உண்மை இன்மை உரைக் கொணாமை உண்மை நல்லின்மை உண்மை இன்மையோடு உரைக் கொணாமை நண்ணிய மூன்றுமாக நயபங்கம் ஏழு' என்பது மேருமந்-704 அறிக

திருஞான சம்பந்த சுவாமிகள், 'புத்தர் சாக்கியர் என்று உடல் பொதிந்து திரிவார் தாம்' எனத் திருவையாற்றுத் தேவா ரத்திலும், 'சீவரத்தசாக்கியர்' எனச்செங்காட்டங்குடித் தேவாரத் திலும், சீவரப் போர்வைச் 'சாக்கியர்' எனத் தெங்கூர்த் தேவா ரத்திலும் பௌத்தரைச் 'சாக்கியர்' எனக் குறித்திருத்தலைக் காண்க. அவருடைய புகலூர் தேவாரத்தில் 'செய் தவத்தர் மிகுதேரர்கள் 'சாக்கியர்' செப்பில், என்ற தொடரில் 'சாக்கியர்' என்ற பாடம் தவறு. அது, 'சாத்தியர்' என இருத்தல்வேண்டும்.

மற்றும், அவருடைய கோளிலி தேவாரத்தில் 'தமேக்கமரும் சமணரொடு தர்க்க சாத்திரத்தவர்' என்ற தொடரில் 'சாத்தி ரத்தவர்' என்ற பாடம் 'சாத்தியரவர்' என்று இருத்தல் வேண்டும். தர்க்கம் என்ற சொல்லைச் சமணருக்கும் கூட்டுக. 'தர்க்கச் சமண ரும் சாக்கியப் பேய்களும் என்றோர் திருவரங்கத் தமுதனாரும்.

மஹாமஹோபாத்தியாயர், பிரம்மஸ்ரீ ஊத்தம தானபதி ஐயர் அவர்கள், தமிழ் விடுதூது எனும் நூலுள் 'சாக்கியர்' என்பது

சமணர்க்கும் பெயராகும் என்றால் எனின், அவர்கள் கருத்துத் தவறே. அவண் அன்றி, அவர்கள், திருவாலவாய்-திருவிளையாடல் புராணத்துள் சமணரைக் கழுவேற்றின படலத்தில் 50ம் பாவில் 'நீறணிவான் பாக்கியமில் சாத்தியர்' என்பதனை நீறணிவான் பாக்கியமில் சாக்கியர்' எனப் பாடம் கொண்டதும் தவறே. 'சாக்கியர்' என்பது 'சமணர்க்கும்' பெயராகும் எனத் தாம் கொண்ட தவறான் கொள்கையை நிலைநிறுத்துவான், (சம்ப—ஆலவாய்) காட்டுமாவது என்ற பதிகத்தில் 'மண்ணகத்திலும்' என்ற பாவில்) 'சாக்கியப் பேய் அமண் தெண்ணர்' என்ற தொடரை உம்மைத் தொகைத் தொடராகக்கொண்டு 'சாக்கியப் பேயரும், அமண் தெண்ணரும்' எனப் பொருள் கொள்ளாமல், பண்புத் தொகைத் தொடராகக் கொண்டு அத்தொடரைக் காட்டாகக் கொண்டதும் தவறே ஆகும். 'சாக்கியர்' என்ற பெயர், என்றும், சமணரைச் சாராது. அது, பௌத்தரையே சாரும். அப்புத்தர்; 'சாக்கியர்' எனும் குடியில் பிறந்தார் ஆதலால்.

மற்றும், ஸ்ரீ ஐயர் அவர்கள் மதுரைச் சொக்கநாதர் உலாவில்-கண்ணி-110-111ல் 'பதி இலாக்கின்னரர் தம் கன்னியரும்' என்ற தொடரில் 'பதி: கணவன்' எனக் குறிப்பு எழுதினார்கள். அக்குறிப்பும் பொருத்தம் அன்று. என்னை?

'கிளரும் சூழொளிக் கின்னர தேவர், தம்
வளரும் பூண் முலையாரொடு வைகலால்' (சூளா-இரத-5.)

என்ற தொடர்களால் அறிக-'பதியிலா' எனபதன் பொருள்: தங்கட்கு என ஒரு இடம் இல்லாத என்பது. என்னை?

'கின்னரர்கள் முதலாய வியந்தரரைக் கிளந்து உரைப்பின்
இன்னவர் உலகத்துள் எவ்வழியும் உளராகி'(சூளா-துற-204.)
'நிலத்து எங்கணும் உறைவர்' மேருமந்-1308. என்பவற்றால்அறிக.

அந்நூல்கள் சமண் சமயத்தவர் நூல்ஆமே எனின், அவ் உலா ஆசிரியரும் சமண் சமயத்தவர் கொள்கையைக் கொண்டே 'பதியிலாக்கின்னரர்' என்றார். என்னை? வைதிக சமய நூல்களில் 'கின்னரரைப்பற்றிய குறிப்புக்கள் தமிழ் நூல்களில் விளக்கம் ஆக இல்லாமையால். இவ்வேதுக்களால் 'பதி' என்பதற்குக் 'கணவன்' என்பது பொருள் அன்று. 'இடம்' என்பதே பொருள் எனக் கொள்க. அன்றித் தேவர்கட்கு இந்திரன் தலைவனாக இருத்தல் போலக் கிந்நரர்கள், தங்கட்கு ஒரு தலைவன் இல்லாதவர்கள் எனவும் ஆம்.

ஸ்ரீ ஐயர் அவர்கள், 'குடமுழ நந்தீசனை வாசகனாக் கொண்டார்' (அப்-தனித்தா) என்ற தொடருக்குச் 'சிவபெருமான், குட-

மூழாவை வாசிக்கும் திருநந்தி தேவரை ஸ்ரீ மாணிக்க வாசகராக அவதரிக்கும்படி திருவுள்ளத்திற் கொண்டருளினார் என்பது பொருள்' என்றதும் பொருத்தம் அன்று. மற்று என்னை? 'வாசகன் என்பதில் 'ச' கரம் 'ய' கரத்தின் போலி. வாயகன்: வாய், (திருக்கோயிலின்) நுழைபுழை, வழி. அகம், இடம். அகன், இடத்தில் காப்பாளனாக இருப்பவன். சிவபெருமான், தன் கூத்திற்கு ஏற்றபடி குடமுழவு என்னும் தோற்கருவியைக் கொட்டும் நந்தி யீசனைத் தன் திருக்கோயிலின் வழியைக் (வாயிலைக்) காப்பவனாகக் கொண்டார் என்பது பொருள். அப்பொருள், புராணவரலாறு ஆதலால்.

மற்றும் அவர்கள், 'நரியைக் குதிரை செய்வானும், நரகரைத் தேவு செய்வானும்' என்ற தொடரில் நரி என்றதனை ஒருவகை விலங்கு என்றே பொருள் கொண்டார் போலும். அப்பொருளும் பொருத்தம் அற்றதே. என்னை? அத் தொடரில் 'நரியை' என்ற பாடம், பிழைபாடம். அப்பாடம் 'நரரை' என இருத்தல் வேண்டும் ஆதலால் என்னை? அப்பாவின்எதுகையைப்பார்க்க. அத்தொடரின் பொருள்: உயர்திணை மக்களை இழிதிணை விலங்குகளாகவும், ஆயுள் முற்றும் (இன்பம் என்பது கலப்பு இன்றித்) துன்பமே நுகரும் நரகரை, ஆயுள் முற்றும் (துன்பம் என்பது கலப்புஇன்றி) இன்பமே நுகரும்தேவராகவும் செய்ய வல்லவனும் என்பது. அப் பொருளால் சிவபெருமான் உடைய எல்லாம்வல்ல ஆற்றலை அறிவித்தபடி.

'எரியினார் இறையார் இடுகாட்டிடை
நரியினார் பரியா மகிழ்கின்ற தோர், 'பெரியனார்' (அப்-வீழி)

என்ற பாவின் பொருள்: மக்களால் வெறுக்கப்படும் இழிதிணை விலங்காகிய நரிகளை, மக்களால் விரும்பப்படும் உயர் திணை விலங்காகியகுதிரைகளாகக் கொண்டு அந்நரிகளினிடையேமனமகிழ்ச்சியை உடையனாய் வாழும் பெற்றியனார் என்பது. இவ்விரு பாக்களின் பொருள்களும், அப்பரின் முற்பட்டகாலத்தினர் மாணிக்கவாசகர் என்பார் கொள்கையைக் கோடியாமையை அறிக.

(சம்-புரா-607ல்)†(வைணவ சமயத்தவர் தம்மேனியில் 'சங்கு சக்கரங்கள்' வடிவான (இலச்சினையை) முத்திரையை வைத்துக் கொள்ளுதல் போல) சமண்சமயத் துறவிகள், தம்மேனியில் முக்குடை வடிவான (இலச்சினையை) முத்திரையை வைத்துக்கொள்ளுதல் வழக்கு இல்லை. என்னை? அவர்களுடைய ஆகமங்களுள் விதி இன்மையால். ஆதலால், 'மேனி செறியு முக்குடையு மாகி' என்ற பாடம் பிழையாம். அப்பாடம் 'மேனி செறி யழுக்கு டையராகி' என்று இருப்பின் நேரிய பாடம் ஆகும். சமண சமயத்துறவிகள் நீரில் படிந்தேனும் நீரை முகந்தேனும் குளி

யார்கள். ஆதலால் அவர்கள் உடம்பு அழுக்குடன் இருக்கும். அவ் வழுக்கு மேனியைக் குறித்த படியாம் 'மாசு அடைந்த மேனி யாரும்' 'மாசேறியஉடலார் அமண்குழுக்கள்' 'மாசு மெய்யர்' 'மாசார் உடம்பர்' என்ற சம்பந்தர் கருத்தையும், 'காருடல் சமண் குழாம்' என்ற (தக்க-373) தொடரில், 'காருடல் என்றது குளி யாதார் என்றவாறு'. என எழுதப்பட்ட உரையையும் நோக்க.

(சம்-புரா-637ல்) ‡முக்குடை, சமண் சமயத்தவர் தம், கடவுள் ஆகிய அருக தீர்த்தகாருக்கே உரித்தானது. அது, அச்சமய துறவி கட்கு அல்லது, வேறு தேவர்கட்கு உரித்தன்று. அம்முக்குடை அத்தீர்த்தகாருக்குத் தேவஇந்திரர்களால் அமைக்கப்பட்ட சிறப்புக் களுள் ஒன்று. அத்தீர்த்தகரர் எப்பொருளையும் பற்றாதவர் என் பது சமண் சமயத்தவர் கொள்கை. ஆதலால், 'முக்குடையும் தாமும்' என்ற பாடம், பிழைபாடம். அப்பாடம் 'முக்குடையர்-தாமும்' என்று இருப்பின், சேரிய பாடம் ஆகும். துறவிகள், தாங்கள் கனவில் கண்ட காட்சியை உரைத்தார்கள் ஆதலால்.

தம் கடவுளர் ஆகிய அருகதீர்த்தகரர்கள் வேண்டுதல் வேண் டாமை இல்லாதவர்கள் என்னும் கொள்கையை உடையவர்கள் சமண் சமயத்தவர் என்பதனை மறந்தபடியால் ஆசிரியர் அடியார்க்கு நல்லார், சிலப்பதிகாரம், நாடுகாண் காதை அடி-21ல் 'பொலம் பூம் பிண்டி, என்றதற்கு 'அருகன் ஆணையால் எப்பொழுதும் பொற்பூவைப் பூக்கும் பிண்டி என்க, எனக் குறிப்பு உரைத்தார். அக்குறிப்பும் பொருத்தம் அற்றதே. அருக தீர்த்தகரர் ஆவார்' எதனையும் விரும்பார், வெகுளலும் செய்யார் ஆதலால்.

ஆசிரியர் கம்பரும் 'கொல்லா விரதத்தர்தம் கடவுள் கூட் டம் ஒத்தார்' என்று (கம்ப—யுத்த-இந்திர-வதை) கூறிய உவமை அடியாகச் சமணர்கள் பற்றில்லாதவர்கள் (கோவணமும் கொள்ளா தவர்கள்) என்பதனைக் குறித்தபடியாம். என்னை? இவ்வடியில் 'கொள்ளாத' என்பது எதுகைநோக்கிக், 'கொல்லாத'என 'ள' காரம் 'ல' காரம் ஆகத் திரிபுற்றது என்க. இவ்வகை அன்றிச் சமணர்கள் கொல்லாதவர்-கொலைசெய்யாதவர் என்றால் பிற வைதிக சமய இருடிகள்-துறவிகள், கொலைத்தொழில் செய்து கொடியபாபத் துக்கு ஆளாகுபவர் என்பது பொருள் ஆம் அன்றோ? அவ்விழி செயலைத் தம்மீது ஏற்றிக்கொள்ள உடன்படார்கம்பர் ஆதலால்.

விரதத்தர் தம்: தம், அசை, கடவுள், கோவணமும் கொள் ளாத துறவிகள்.

மற்று அவர், சமணர்கள்கொள்கையை, நாஸ்திகக்கொள்கை என்று குறிப்பின் இகழ்ந்திருத்தலையும் நோக்குக. என்னை? 'ஊழ் கொண்ட சமயத்தன்றோன் உருவு கண்டாரை ஒத்தார்' என்றார்

(கம்ப—உலாவி—19.) ஆதலால். அத்தொடரின் பொருள்: உயிர்கட்கு ஆக்கத்தையும் கேட்டையும், அவ்வவ் உயிர்களின் நல்வினை தீவினைகளின் பயன்களே, ஆக்கும். உயிர்கட்கு ஆக்கத்தையும் கேட்டையும் ஊட்டுதற்கு ஒருகடவுள் இல்லை என்றும், ஒவ்வொரு உயிரும் கடவுள் ஆம் என்றும் கூறிய (ஊழே கடவுள் எனக் கொண்ட) அருகதீர்த்தகரர் உடைய உருவைக்கொண்ட (நிர்க்கந்த-கோவணமும் கொள்ளாத) தவவேடத்தைக்கொண்ட சமண சமய துறவிகளைப்போல் இராமபிரானைக் கண்டவர்கள் அப்பிரானைக் கண்ட மனக்களிப்பால் கருத்தும், கலையும், கையுறவும், அற்றவராய்த் தூண்கள்போலே நின்றார்கள் என்பது சமணத்துறவிகள் தியானிக்கும் நிலைமையில் செயலற்றவராய்த் தூண்கள்போல நிற்பவர் என்று அவர்கள் நிற்கும் வடிவை இகழ்ந்தபடி என்க. 'ஊழ்கொண்ட சமயத்தன்' என்றதனால் கடவுள் உண்டு என்பதனைக்கொள்ளாமல், நாஸ்திகம் கொண்டவன் என்றார் ஆயிற்று. சமயத்தன் ஆன்: அன், ஆண்பால் விகுதி. ஆன், அசை.

21. [1]கண்நுதலான்! 'தண்கருணைக்' கண்காட்ட வந்து எய்தி!
[2]எண்ணுதற்கு எட்டா எழிலார் கழல் இறைஞ்சி
[3]விண்நிறைந்தும் மண்நிறைந்தும் மிக்காய் விளங்குஒளியாய்!
[4]எண் இறந்து எல்லை இலாதானே! நின் பெரும் சீர்
25. [5]பொல்லா வினையேன் புகழும் ஆறு ஒன்று அறியேன்.

முன்பாடம் அடி 21ல் 'தன் கருணைக்'

பொழிப்பு உரை: [1]கண்ணை நெற்றியில் உடையானே! நின்னுடைய தண்ணிய அருளாகிய பெருமையை நின் அடியார்கட்குக் காட்டும் பொருட்டு அவர்கள் இருக்கும் இடத்தை நீயே தேடிச்சென்று அவர்கள் முன்னர் நிற்றலை உடையாய்! [2]இத்தனை அழகினை உடையன என நினைத்தற்கும் இயலாதபடி மிக்க அழகு பொருந்திய நின்னுடைய திரு அடிகளை வணங்கி; [3]விண் இடம் முற்றும் நிறைந்தும், மண் இடம் முற்றும் நிறைந்தும், அவற்றின் மிகுதியும் ஆகித் திகழ்கின்ற பெரிய ஒளியாய் இருப்பவனே! [4]இத்தனை நிலத்தின் பரப்பைக் காட்டினும் பரந்த வடிவன் என உவமை சொல்லி உரைத்தற்கு இயலாதபடி மனத்தின் மதிப்பைக்கடந்து மிகப்பரந்த வடிவை உடையவனே! நின்னுடைய பெருமைபொருந்திய மிக்கபுகழினை எடுத்துச் சொல்லிப்

புகழ்தற்கு ஆம் வழியினைச் சிறிதும் அறியாதவன் ஆவேன். ஆயின தீயவினையை உடையேன் ஆகிய யான் என்க.

அடி (21) கண்ணுதலான்! எந்தை! (22) கழல் இறைஞ்சி (24) நின் பெரும் சீர் (25) புகழும் ஆறு அறியேன் (ஆயின) பொல்லாவினையேன் என வினை முடிக்க.

புகழும் ஆறு அறியாதவன் ஆதலால் யான் நினக்குச் செய்யும் தொண்டில் குறைகள் இருத்தல் இயல்பே. இருப்பினும் அக்குறைகளைப் பொறுத்து என் விண்ணப்பத்தினைக் கேட்டு என்னை அருளவேண்டும் என்பது குறிப்பு எச்சம்.

அவர் தம் விண்ணப்பம் ஆவது: (21) கண்ணுதலான்! (25) புகழும் ஆறு அறியேன் ஆகிய பொல்லாவினையேன் (31) எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன். (ஆதலால் மேலும்) (84) விடக்கு உடம்பின் உள் கிடப்ப (85) ஆற்றேன் (91) என் அல்லல் பிறவி அறுப்பாய் என்பது. 21-வது அடி முதல் 91-வது அடிவரை ஒரு தொடர் எனக் கொள்க:

குறிப்புரை அடி 21. எந்தை: (முன்னிலை வினைப்பெயர்)எந்து தலை உடையவன். அம்மொழி இவண் அண்மை விளி சுட்டி நின்றது. அது, எச்சமொழி அன்று. 'தன் கருணை' என்ற பாடம், பிழைபாடம். அப்பாடம் பொருள் பொருத்தம் உற 'தண் கருணை' எனத் திருத்தப்பட்டது. 'தன் கருணை' எனும் பாடத்தையே வேண்டுபவர் 'தன்' என்பதனை 'நின் தன்' விகாரம் எனக் கொள்க-'கண்ணடியை' 'ஆடி' என்பது போல. அம்மொழி முன்மொழி கெட்ட பின்மொழி நிலையல.

அடி 24. இத்தனைச் சூரியனின் ஒளியைக் காட்டினும் மிக்க ஒளிபொருந்திய மேனியன் என உவமைசொல்லி உரைதற்கு இயலாதபடி மிகப்பாந்த ஒளியை உடைய மேனியனே எனலும் ஆம்.

'இனைத்து என எண் வரம்பு அறியா யாக்கையை
நின்னைப் புரை நினைப்பின் நீ அலது உணர்தியோ' என்ற (பரிபா-3-45-46.) ஆசிரியர் கருத்துக்கும் 'இனைத்து என எண்ணும் எண்ணிற்கு எல்லை அறியப்படாத வடிவினை உடையாய்; நின்னை உயர்வு கூறக் கருதின் அது நீயே உணரின் அல்லது பிறரால் உணரப் படுதியோ?' என்ற, அதன் உரையாசிரியர் தம் கருத்துக்கும் ஏற்ப, இத்தனை ஆற்றின்கண் உள்ள மணல்களை உரை இட்டுக் கண்ட எண்ணல் அளவை உடைய வடிவன் என அலகு இட்டுச் சொல்ல இயலாதபடி மனத்தின் மதிப்பைக் கடந்த பலவகை வடிவை உடையவனே எனலும் ஆம். எண் இறந்து, மனத்தின் மதிப்பைக் கடந்து. எண்: (ஆகுபெயர்) மனம். இறந்து: கடந்து. சீர்: (உரிச்சொல்) மிகு புகழ்.

26. [1]புல் ஆகிப் பூடு ஆய்ப் புழு ஆய் மரம் ஆகிப்
[2]பல் விருகம் ஆகிப் பறவை ஆய்ப் பாம்பு ஆகிக்
[3]'கல்லா' மனிதர் ஆய்ப் பேயாய்க் கணங்கள் ஆய்
[4]வல் அசுரர் ஆகி 'வநசரம் ஆய்த்' தேவர் ஆய்ச்
[5]செல்லாஅ நின்ற இத்தாவர 'செங்கமத்துள்'
31. [6]எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன். எம்பெருமான்!

*முன்பாடம் அடி 28ல் 'கல்லாய்' 29ல் 'முனிவர் ஆய்த்' 30ல் 'சங்கமத்துள்.'*

பொழிப்பு உரை: *என்னை ஆட் கொண்ட பெருமானே! [1]பலவகைப் புல்லுகள் ஆகவும், பூடுகள் ஆகவும், புழுக்கள் ஆகவும், மரங்கள் ஆகவும், [2]விலங்குகள் ஆகவும், பறவைகள் ஆகவும், பாம்புகள் ஆகவும், [3](வேத ஆகமங்களைக் கற்று நின் திரு அடிகளைப் புகழ்தற்கு இயலாத) கல்லாத மனிதர்கள் ஆகவும், பேய்கள் ஆகவும், கணங்கள் ஆகவும், [4]வலிய செயலினை உடைய அசுரர்கள் ஆகவும், நீருள் வாழ்வன ஆகவும், தேவர்கள் ஆகவும், [5]நடை பெறுகின்ற இயங்காத்திணை இயங்கு திணைகள் ஆகிய இரண்டன் உள்ளும் உயிர்கள் பிறக்கும் [6]எல்லாப் பிறப்பிலும் யான்பிறந்துபிறந்து வருந்தினேன் என்க.*

*மேலும் பிறந்து பிறந்து வருந்துதற்கு யான் அஞ்சுகின்றேன் என்பது குறிப்பு எச்சம்.*

*குறிப்புரை: அடி 27. பல் எனும் சொல்லை எல்லாப்பெயர்கள் முன்னும் கூட்டுக. விருகம்: (வடமொழி) மிருகம.*

*அடி 28. பலவகை மனிதர் ஆவார், எண்வகை உடல் குற்றம் உடையாரும் பலவகை மதங்களில் சென்று உழல்வாரும், வேத ஆகமங்களைக் கல்லாதவரும் வேத ஆகம புராணங்களை நன்றாகக் கல்லாமலே அவற்றைத் தூற்றியும் அவற்றிற்குத் தீயபொருள்கள் உரைப்பவரும் ஆவார். எண் வகை உடல் குற்றங்கள் என்பன;*

*'சிறப்பில் சிதடும், உறுப்பில் பிண்டமும்,*
*கூனும், குறளும், ஊமும், செவிடும,*
*மாவும், மருளும், உளப்படவாழ்நர்க்கு*
*எண்பேர் எச்சம்' (புறம். 28.) என்ற இவை.*

*'கற்றார் இடும்பை களைவாய் போற்றி'. (அப்பர்-வீரட்)*
*'கல்லாத வன் மூடர்க்கு அல்லாதானை' (அப்-ஆல) என்றதனல்*

கல்லாமனிதர் (கல்லாதமனிதர்)என்ற பாடத்தின் சிறப்பை அறிக.

இவ் வேதுக்களினால் வேத ஆகமங்களைப் பயிலுதற்கு ஏதுவாகிய 'கல்வியைக் கற்றமக்கள் சிவபெருமானைச் சிந்திக்கும் கல்வியைக் கற்றவர் ஆவார்'. அவர், சிவபெருமானைச் சிந்திக்கும் பயனால், அழியாத இயல்பினை உடைய நுகர நுகரக் குறைவுபடாத இன்பத்தினைத் தரும் வீட்டினை அடைவார். வேத ஆகமங்களைக்கல்லாதவர், சிவபெருமானைத் தம் நெஞ்சின் நினையார். நினையாதவர், வீட்டினை அடையார். ஆதலால், 'கல்லாத மனிதப்பிறப்புப் பலகள்', பயன் இன்றிக் கழிந்தன என்றார் எனக் கொள்ளுதலே பொருத்தம் ஆகும். ஆதலால், 'கல்லாமனிதர் ஆய்' என்ற ஒருவகைப் பொருள் சுட்டும் பாடமே கவிக்கருத்தாகும் எனவும், கல்லாய், மனிதராய், என்ற இருவகைப்பொருள் சுட்டும் பாடம் பிழை பாடம் எனவும் கொள்ளுக. நிற்க,

'கல்வகை மனத்தேன் பட்ட கட்டமே' (திருவாச-சத)
'கல்போலும் நெஞ்சம் கசிந்து உருக' (திருவாச-தோள்.4.)

என்றார் ஆதலால், 'கல்லா 'ம்' மனிதராய்' எனப் பாடங்கொண்டு 'கல்போன்றவலிய நெஞ்சினை உடைய மனிதராய்' எனப் பொருள் கொள்ளுதலும் ஆம். கல்லாம், மகர ஈறு அழிவு. நிற்க,

முன்னர்க் காட்டப்பட்ட நூல்வழக்கினை மறந்தபடியால் திரு. மறைமலை அடிகள் 'கல்லாய்' என்ற பிழையுற்ற பாடத்திற்கு ஏற்பக் 'கற்பாறைகளின் உள்ளாகியும்' எனப் பொருள்உரைத்தார். அப்பொருள் பொருத்தம் அற்றது ஆகும். என்னை? 'கல்லில் உயிர் உண்டு' என்பதனை எம்மதத்தினரும் ஏற்றுக்கொள்ளார். ஆதலால், அவ்வுரை நூல்வழக்கிற்கு மாறாக உரைக்கப்பட்டதாகும். நிற்க,

உயிர்கள், உடம்பு எடுத்தற்குமுன் மண்ணிலும், நீரிலும், நெருப்பிலும், காற்றிலும் கிடக்கும் (பிருதிவி காயிக ஜீவன், அப்பு காயிக ஜீவன், தேயு காயிக ஜீவன், வாயுகாயிக ஜீவன்) என்று சொல்லுகின்ற சமண்சமயத் தவர்களும் (சிலாகாயிகஜீவன் எனக்) கல்லிலும் உயிர் உண்டு என உரையாமையால், திருவாதவூர் அடிகள், தாம் 'கற்பாறைகளின் உள் (கிடந்தேன்) ஆனேன் என்றார் எனல் கவிக்கருத்தாகாது. அது, விரி உரைகாரர் கருத்தே ஆகும். மற்றும், கல்லின் உள் இருந்தேன் என்ற உரை தவறுதல் அன்றிக் 'கல் என்பது உயிர்கள் உடம்பு எடுத்தற்குமுன் புலப்படாதுகிடத்தற்கு இடமாக இருத்தல்பற்றி அதனையும் ஒருபிறவிபோல் வைத்துக் கூறினார்' என்று எழுதப்பட்ட அவ்வுரை காரர்தம் குறிப்பும் பொருத்தம் அற்றதே. என்னை? உயிர்கள், உடம்பு எடுத்துப்பிறத்தற்கு முன் நிற்கும் நிலைமையை இவண்ஆசிரியர் கூறவில்லை. அவர், உயிர்கள் மாறிமாறிப்பிறக்கும் எழுவகைப் பிறப்புக்களிலும், யான்

மாறிமாறிப்பிறந்தேன் எனக் கூறினார் என்க. அதுவே கவிக்கருத்து. ஆதலால், நூலாசிரியரால் கூறப்படாத ஒன்றனை அவ்வாசிரியர் கூறினார் என உரைகாரர் ஒருவர், ஏறிட்டுக்கூறுதல் நேர்மையன்று. அன்றி, உயிர்கள் உடம்பு எடுத்தற்கு முன் கல்லில் புலப்படாது கிடக்கும் என்பதனை எம்மதத்தினரும் ஏற்கார் ஆதலால்.

தாம் உரைத்த பொருத்தம் அற்ற பொருளைப் பொருத்தி வைப்பான் 'ஆறு அறிவு உடையமனிதர், அசுரர்களாயும், ஆறு அறிவின்மேற்பட்ட அறிவு உடைய முனிவர் பேய்கணங்கள் தேவர்களாயும், பிறவி எடுக்கும் என்பது உணர்த்தினார் ஆயிற்று' என அவரால் எழுதப்பட்ட மற்றொருகுறிப்பும் கொள்ளத்தக்கது அன்று. என்னை? ஆறு அறிவின் மிக்க அறிவு உடைய பிறப்பு ஒன்று உண்டு என்பது, எம்மதத்தினர்க்கும் உடன்பாடு இன்று ஆதலால். பௌத்தசமயத்தவர் ஆகிய ஆசிரியர் தொல்காப்பியனாரும் உயிர்கட்கு ஆறுவகை அறிவேகூறினார்.

அவரால் கற்பிக்கப்பட்ட ஆறுஅறிவின் மிக்கஅறிவு என்பது யாது?-யாவை? எத்தனை? என்று எழும் வினாக்கட்கு விடையாக அவ்வறிவு இது, இவை, இத்தனை என விளக்கிக்கூறாமல் விட்ட செயலும் செவ்வியது அன்று என்க. அவர் விளக்கிக் கூறாமல் விட்டதன் ஏது என்னை? எம்மதத் தவர்க்கும் உயிர்கட்கு ஆறு அறிவின்மிக்க அறிவு உண்டு என்பது உடன்பாடு இன்று. ஆதலால் எந்நூல் அகத்தும் விளக்குதற்கு ஆம் ஏது ஒன்றும் இல்லை. இல்லாமையால். அவர் கண்டதும், கேட்டதும் இல்லை. இல்லை ஆகவே விளக்கினர் அல்லர் போலும்.

> 'கரும்பிறப்பும் கருநீலப் பிறப்பும்
> பசும் பிறப்பும் செம்பிறப்பும்
> பொன்பிறப்பும் வெண்பிறப்பும்
> பண்புறு வரிசையிற் பாற்பட்டுப் பிறந்தோர்
> கழிவெண் பிறப்பிற் கலந்து வீடணைகுவர்' என்றதால் (மணி)

கழிவெண்பிறப்பின் என்றது ஆறு அறிவின்மிக்க அறிவைச் சுட்டாதோ? சுட்டாது. என்னை? அப்பகுதி ஆசீவக மதக்குறிப்பு. (சமண் சமயத்தவர் வழக்கே மேல்காட்டப்பட்டது) ஆசீவகமதத்தவர்க்கும் உயிர்கள், ஆறு அறிவின்மிக்க அறிவுகளை உடையன என்பது உடன்பாடு அன்று. அவர்க்கு உடன்பாடு ஆம் என அந்நூல் ஆசிரியர் கருதி இருப்பின், அவ்வாசிரியர் அம் மிக்க அறிவு இது, இவை, இத்தனை என விளக்கம் ஆக உரைத்து இருப்பார் திரு. மறைமலை அடிகள் போல அம்மிக்க அறிவு இது, இவை, இத்தனை என விளக்காமல் விட்டிரார் ஆதலால். மற்று என்னை?

அவ்வாசிரியர், அப்பாவில் 'வெண்பிறப்பு' என்றது (உயிர்களின் உணர்தல் ஆகிய தொழில் வகைகளைக் கூறவில்லை.) உயிர்

களின் நுண்ணிய (சூக்கும) உடம்புகளின் வண்ணங்களையே (உயிர்களின் தனி ஞானங்களையே) கூறினர். ஆசீவக, சமண சமயத்தவர்கள் உயிர்களின் நுண்ணிய உடம்புகளின் வண்ணங்களை (தனி ஞானவகைகளை) 'லேசியை' என்பார்கள். அவர்கள், அந்தலேசியை என்பது கிருஷ்ணலேசியை, நீலலேசியை, கபோதலேசியை, (புறவின்கழுத்தில் உள்ள பசியவண்ணணம்) பீத லேசியை, பத்மலேசியை, சுக்கிலலேசியை, என ஆறுவகைப்படும் என்பர்.

அவற்றுள் முதலாகக் கூறப்பட்ட மூன்று லேசியைகளும் தீக்குணத்தால் ஆவன ஆதலால், அவை அசுபலேசியைகள் ஆம் எனவும், பின்னர்க்கூறப்பட்ட மூன்றுலேசியைகளும் நற்குணத்தால் ஆவன ஆதலால் அவை சுபலேசியைகள் ஆம் எனவும் இயம்புவர். நீலகேசி- பக்- 480ல் விசேஷக் குறிப்பைப் பார்க்க. நீலகேசியில் வடமொழியால் கூறப்பட்ட ஆறுவகை லேசியைகளே மணிமேகலையுள் (சமய.) தமிழ்மொழியால் கூறப்பட்ட ஆறுவகைப் பிறப்புக்கள் ஆம். எனக் கொள்ளுக. அன்றி,

'மணியுயிர் பொன்னுயிர் மாண்ட '*வெள்ளியின்'
அணியுயிர், செம்புயிர் * 'இரும்பு போலவாம்'
பிணியுயிர், இறுதியாய்ப் பேசினேன் இனித்
துணிமினம் எனத் தொழுதிறைஞ்சி வாழ்த்தினர், என்ற(சீவக சிந்-3111.) இப்பாவிலும் ஆறுவகை லேசியைகளே உயிர் எனக் குறிக்கப்பட்டன.

இப்பாவில் '*வெள்ளியின்' என்ற பாடம், 'வெள்ளுயிர்' எனவும், *'இரும்பு போலவாம்' என்றபாடம், 'இரும்புயிர் நீலுயிர்' எனவும் இருத்தல் வேண்டும். என்னை? முன்னர்க் கூறப்பட்ட மூன்று உயிர்களும் (லேசியைகளும்) நற்குணத்தால் ஆவன. ஆதலால் அவற்றை, அணி உயிர் எனப்புகழ்ந்தும்-பிரித்தும், பின்னர்க் கூறப்பட்ட மூன்று உயிர்களும் (லேசியைகளும்) தீக்குணத்தால் ஆவன. ஆதலால் அவற்றைப், பிணிஉயிர் என இகழ்ந்தும்-பிரித்தும் கூறினர் எனக் கொள்ளுதலே கவிக்கருத்தாகும். அக்கருத்தே, அம்மதத்தவர்க்கு உடன்பாடு ஆதலால்,

மணிமேகலையுள் (சமயக்) கூறப்பட்ட ஆசீவகர் கொள்கையைச் செவ்விதின் உணராமையால், சிவஞான சித்தியார் என்ற நூலைப் பதிப்பித்தவர், அல்லது அந்நூலை ஏட்டில் எழுதியவர். 'வெண்மை, நன்பொன்மை, செம்மை, நீலம், கருமை, பச்சை' என்ற அடியில் 'நீலம், கருமை' என்ற இரு சொற்களை (நீல் சுழி வெண்மை' எனமாற்றிப் பிழை ஆக்கினர்கள் போலும். என்னை? அவ்வடியின் சீரையும், அவ்வடியில் கூறப்பட்ட ஆறுவகைப் பொருள்களையும் அலகிட்டு அறிக.

## வே. மு. ஸ்ரீநிவாச முதலியார் உரையும்.

சிவஞான சித்தியாருள் 'கழி வெண்மை ஒங்கு வீட்டின் வண்மையதாய்ச் சேரும்' என்றது, உயிர் அவ் வாறுவகைப் பிறப்புக்களில் எத்தனை முறை மாறி மாறிப் பிறப்பினும் கடையில் அப்பிறப்புக்களின் நீங்கி (கழிந்து) வெண் பிறப்பிலேயே வீட்டினைச் சேரும் என்பது கருத்து. ஆறு அறிவின் மிக்க ஒருஅறிவில் வீடு அடையும் என்பது கருத்தன்று. கழி: கழிந்து, நீங்கி.

'ஆடுங் கூத்தர்போல் ஆருயிர் ஒருவழிக்
கூடிய காலத்து ஒருங்கு நின்று இயலாது
செய்வினை வழித்தாய் உயிர்செலும் என்பது
பொய்யில் காட்சியோர் பொருளுரை' (சிலப்-28-165, 168.)

என்றார் ஆதலால், உயிர் பல உடம்புகளில் மாறி மாறிப் பிறக்கும் எனக் கொள்ளுக. அம்மாற்றங்களை;

'விண்ணோர் உருவின் எய்திய நல்லுயிர்,
மண்ணோர் உருவின் மறிக்கினும் மறிக்கும்;
மக்கள் யாக்கை பூண்ட மன்னுயிர்,
(மிக்கோய்) விலங்கின் எய்தினும் எய்தும்;
விலங்கின் யாக்கை விலங்கிய இன்னுயிர்,
கலங்கஞர் நரகரைக் காணினும் காணும்' (சிலப்-28-159,)

என்பவற்றைப் பலவாறு விகற்பித்துக் காண்க.

சிவஞான சித்தியாரின் பதிப்பு ஆசிரியரும், அந்நூலின் உரை ஆசிரியரும் சமண்மத, ஆசீவகமதத்தவர் கொள்கைகளை மறந்தவர்கள் போலும். என்னை? அவர்கள் அந்நூலுள் ஆசீவக மதத்தவர்க்கு உடன்பாடு இல்லாத (அவர்களால் சொல்லப் படாத) சொற்களை அவர்கள் மீது தாமே ஏறிட்டுச் சொல்லி மறுத்தார்கள் ஆதலால். அவற்றை இவண் விரித்தல் மற்றொன்று உரைத்தல் ஆம். அம்மதத்தவர் நூலை அறிந்தாரை அணுகி அறிக.

சமண் சமயத்தவர்க்கு உயிர்கள் ஆறுவகை அறிவை உடையன என்பது உடன்பாடு இல்லை என்பதையும், பௌத்த சமயத்தவர்க்கே உயிர்கள் ஆறுவகை அறிவை உடையன என்பது உடன்பாடு என்பதையும், சமண் சமயத்தவர் ஆகிய ஆசிரியர் பவணநந்தி முனிவரால் அருளப்பட்ட நன்னூல் உள் அவர் ஐவகை அறிவுகளையே கூறினார் ஆதலாலும், பௌத்த சமயத்தவர் ஆகிய ஆசிரியர் தொல்காப்பியனாரால் அருளப்பட்ட தொல்காப்பியத்துள் அவர், ஆறுவகை அறிவுகளையே கூறினார் ஆதலாலும் அறிதல் ஆகும். மற்றும், சமண் சமய சார்பான, நீலகேசி என்னும் நூலுள் புத்தவாதச் சருக்கத்தாலும், மேருமந்தர புராணத்தாலும் அறிதல் ஆம்.

'ஐந்து, இந்தியம் பசு, நரர், நரகர், தேவராம்' (மேரும-723)
'வானவர் மக்கள் நாகர் விலங்குபுள்
ஆதி செவியறிவோடு ஐயறிவுயிரே' (நன்-உரி-8.)

D

என்றதனால் தேவர்கட்கும் ஐந்தின் மிக்க அறிவு இல்லை என்பது சமண்சமயத்தவர் கொள்கை என அறிக.

சிந்தாமணியுள் (செய்-3111ல்) உயிர்கள் எனவும், மணிமேகலையுள்ளும் (சமயக்-ஆசீவக) சிவஞான சித்தியார் உள்ளும் (ஆசீவக) பிறப்புக்கள் எனவும், நீல கேசியுள்-(டக்-480ல்) லேசியைகள் எனவும் கூறப்பட்ட பொருள்கள் உயிர்களின் சூக்கும (நுண்ணிய) உடம்புகளின் வண்ணங்களை எனவும், நன்னூல் உள்ளும் தொல்காப்பியத்தின் உள்ளும் ஐஅறிவுகள் ஆறு அறிவுகள் எனக் கூறப்பட்ட பொருள்கள் ஞானத்தின் (பொறிவாயிலாக உணரும் உணர்தல் தொழிலை) உணர்ச்சியை எனவும் பிரித்து அறிக. அவ்விருவகை வேற்றுமைகளையும் அறிந்தாரைஅணுகிஅறிக,

கல் என்பது மண்ணின் விகற்பமே. அஃது, ஒரு தனித்த பொருள் அன்று. அன்றி, உயிருடன் பிறத்தல் உடைய பொருளும் அன்று. ஆதலால், அது எழுவகைப் பிறப்புக்களுள் ஒன்று அன்று. என்னை? உயிர்கள் ஒரு அறிவு முதல் ஆறு அறிவுவரை உடைய எனக் கூறிய பௌத்த சமயத்தவராகிய ஆசிரியர் தொல் காப்பியனாரும், உயிர்கள் ஒரு அறிவு முதல் ஐயறிவு வரை உடைய எனக் கூறிய சமண் சமயத்தவர் ஆகியஆசிரியர் பவணநந்தி முனிவரும், தம் தம் நூற்களுள் கல்லை, உயிரை (அறிவை) உடைய பிறவிகளுள் சேர்த்துக்கூறாமையாலும்; பிருதிவி காயிக ஜீவன், அப்புகாயிக ஜீவன் தேஜஃகாயிகஜீவன், வாயுகாயிக ஜீவன், வனஸ்பதி ஜீவன், திரஸஜீவன் என உயிர்கட்கு ஆறுவகை உடம்புகளைக்கூறிய வினைய சமண் சமய நூல்களுள்ளும் சிலாகாயிகஜீவன் (கல்லை உடம்பாக உடைய உயிர்) உண்டு, எனக் கூறவில்லை ஆதலாலும், சமண பௌத்தர்கட்கும் கல்லுக்கு உயிர் உண்டுஎன்பது உடன்பாடுஅன்று எனக் கொள்ளுக.

'அலர் கொய்யத் தாழ்ந்த மரம் உயிர் இல்லை என்பார்
பித்து அலர் ஆயின் பேய்கஎன்று அலால் பேசலாமோ'

(சீவகசிந்-1907.) என்று (ஓர் அறிவுயிர் உடையது எனத் தங்களால் சொல்லப்படும்) மரத்திற்கு உயிர் இல்லை என்பாரைக் காட்டு முகத்தான் மறுத்து உரைத்தாற் போலக் கல்லிற்கு உயிர் இல்லை என்பாரை யாண்டும் மறுத்திலர் சமண் சமயத்தவர். அவர்கள் மறுத்து உரையாமையின் ஏது என்னை? கல்லிற்கு உயிர் உண்டு என்பது அவர்கட்கு உடன்பாடு இன்று ஆதலால் மறுத்து உரைத்திலர். இக்குறிப்பு மறத்தற் பாலது அன்று.

'நீள் அருவிக் கண்ணீர்வீழ்த்து அலறி வண்ணம்கரிந்து உருகிக்
'கோள் உழுவை அன்றைக்குக் குன்றமும் நின்று அழுதன'.

(சீவகசிந்-1226.) என்ற தொடரில், குன்றம் உயிர் இல்லாப் பொருள்ஆதலால் அதற்கு அழுகை உண்டாதல் இல்லை. ஆகவே ஆசிரியர் அக்குன்றின் நின்றுஒழுகும் அருவி நீரைக் கண்ணின்நீராக உருவகப்படுத்தினர். இவ் வேது வினாலும் சமண் சமயத்தவர்க்குக் கல்லிற்கு உயிர் உண்டு என்ற கொள்கை இல்லை என அறிக.

உயிர்க்குப் பிறப்பு வழியைக் கூறிய ஆசிரியர் எவரும், கல்லை எழுவகைப் பிறப்புக்களுள் ஒன்றன் பால் சார்த்திக் கூறவில்லை. ஆதலால், 'கல்லாய்' என்றபாடம் பொருத்தம் அற்றதே. அற்றதால் அக் 'கல்லாய்' என்ற பாடம், பொருள் பொருத்தம் உற 'மனிதர்' என்றபெயருக்கு அடையாய்க் கல்லாத மனிதர், என்று பொருள் சுட்டும்படி 'கல்லா' எனத்திருத்தப்பட்டது. நிற்க,

எழுவகைப் பிறப்புக்கள் மேல்வருமாறு:

'தேவும் மாவும் தாபரமும் பறவையும்
மேவிய மக்கள் ஊர்வ நீரனவும்
பேசில் எழுவகைப் பிறப்பு என மொழிப' (பிங்க. ஐயர்-101)

'மக்கள் விலங்கு பறவை ஊர்வன
நீருள் திரிவன 'பருப்பதம்'* பாதவம்
என இவை எழு பிறப்பு ஆகும்' (சீவகசிந்-307-உரை.)

* பருப்பதம்: (ஆகுபெயர்) தேவ பிறப்பு. தேவருள் ஒரு சாரார் ஆகிய (கல்பவாசி) தேவர்கள், கருவில் தங்கிப் பிறவாதவர்கள் என்பது சமண் சமயத்தவர் கொள்கை ஆதலால், பருப்பதம்: பெருமை பொருந்திய பதம்; (தேவர் பிறப்பு என்பதற்கு) ஆகு பெயர். ஆதலால் ஆசிரிய அடிகள், கல்லினை முன்னர்க்காட்டப் பட்ட எழுவகை பிறப்புக்களில் ஒன்றாகக் கூறினர் அல்லர் என்க. பருப்பதம், பர்வதம் என்ற வடசொல்லின் திரிபு. அது, கல்லிற்குப் பிறப்புக் கூறியபடி எனல் பொருத்தம் அன்று. என்னை? கல் என்பது குட்டி இட்டு அல்லது முட்டை இட்டுப் பிறக்கும் பிறப்புடைய பொருள்களுள் ஒன்று அன்று ஆதலால். கல்லினுள் தேரையும், மண்ணினுள் பலவகை ஊர்வனவும் இருத்தலால், ஆகுபெயரால் தேரையைக் கல் என்றார் எனலும் பொருத்தம் அன்று. அது ஊர்வன வகையுள் அடங்கும் ஆதலால்.

'கணங்களாய்' என்றதற்குத்தேவகண பிறப்புவகை பதினெட்டனுள் ~~'பேயாய்' எனப்~~ பேய்பிறப்பு விதந்து கூறப்பட்~~டதால்~~ அப்பிறப்பை நீக்கி விதந்து கூறப்படாத ஏனைய ~~பதினெழுவகை~~ தேவகண பிறப்புக்களையும் கொள்க.

பதினெண்வகை கணங்கள் ஆவார்: தேவரும், அசுரரும், முனிவரும், கிந்நரரும், கிம்புருடரும், கருடரும், இயக்கரும், இராக்கதரும், கந்தருவரும், சித்தரும், சாரணரும், வித்தியாதரரும், நாகமும், பூதமும், வேதாளமும், தாராகணமும், ஆகாசவாசிகளும்,

போக பூமியரும் என இவர்.» (புற-1-உரை.) இவர், திவாகரத்துள்ளும், பிங்கலத்துள்ளும், சூடாமணி நிகண்டுள்ளும் வேறுவகையாகவும் கூறப்படுவார்.

அடி 29. 'முனிவராய்' என்றபாடம் மோனைத் தொடையால் முரண் ஆதல் அன்றி, உயிர்கள் பிறக்கும், வழிகள் ஏழனையும் எஞ்சாமல் கூறவில்லை என்னும் இழுக்கையும் ஏற்கின்றது. அன்றி, முன்னர்க் (அடி-28ல்) 'கணங்களாய்' என்றதனால் பதினெண்வகை பிறப்புக்களுள் முனிவர் பிறப்பும் அடங்கும். பின்னரும் (இவ்வடியில்) 'முனிவராய்' எனக் கூறின் கூறியது கூறல் எனும் குற்றமும் ஆம். ஆதலால், மோனைதொடை முரண் ஆகாமைப் பொருட்டும், உயிர்கள் பிறக்கும் வழிகள் ஏழும் எஞ்சாது கூறப்பட்டன எனல் பொருட்டும் 'முனிவராய்' என்ற பாடம், 'வாசரம் ஆய்' எனத் திருத்தப்பட்டது. வாசரம்: (வடமொழி) நீருள் திரிவன. அவை, மீன்வகை முதலைவகை முதலியன. வாம்: நீர். சரம்: திரிதல், வாழ்தல். நிசிசரர் என்பது போலக்கொள்ளுக.

அடி30. செல்லாஅ: அகரம், அளபெடை, ஆநின்ற, இடைச்சொல். செல்லாஅ நின்ற: நடைபெறுகின்ற. இத்தாவரம்: (வடமொழி, ஸ்தாவரம் விகாரம்) இயங்காத்திணை. அம்மொழியின் முதலில் நின்ற இகரம் சுட்டன்று. அது, ஸ்தாவரம் என்ற மொழியின் முதலில் நின்ற ஸகர மெய்திரிபு. ஹ்ர்தயம்: இருதயம், இதயம் எனவும்; ர்ருக்கு, இருக்கு எனவும்; டாகினி, இடாகினி எனவும்; ஸ்வாமி, சுவாமி எனவும்; ப்ரதாபம், பிரதாபம் எனவும்; வடமொழிகள் மொழிமுதல் திரிபுற்றுத் தமிழ் மொழியிடையே கலந்திருத்தல்போல, ஸ்தாவரம் என்ற மொழியும் வடமொழி ஆதலால் இத்தாவரம் என மொழிமுதல் திரிபுற்று நின்றது எனக் கொள்ளுக.

வடமொழிஜங்கமம் திரிபு செங்கமம்: இயங்குதிணை. 'சங்கமத்துள்' என்றபாடம், மோனைத்தொடையால் முரண் ஆகின்றது. ஆதலால். அப்பாடம், மோனை முரண் ஆகாமைப் பொருட்டுப் பண்டைய ஆசிரியர் வழக்குப்படியே 'செங்கமத்துள்' எனத் திருத்தப்பட்டது. அவ்வாசிரியர் வழக்கை;

1கந்தம், கெந்தம் எனவும்; 2கங்கை, கெங்கை எனவும்; 3கதி, கெதி எனவும்; 4கலுழன், கெலுழன் எனவும்; 5கர்வம், கெர்வம் எனவும்; 6கறுவம், கெறுவம் எனவும்; கருடன், கெருடன் எனவும்; 7தக்கணம், தெக்கணம் எனவும்; 8சகதலம், செகதலம் எனவும்; 9சண்பகம், செண்பகம் எனவும்; சயம், செயம் எனவும் வடமொழிகளின் மொழிமுதல் மெய்யின் நின்ற அகரம் எகரமாகத் திரிபுற்றிருத்தலால் அறிக. சங்கமம் என்ற வடமொழியும் மொழி முதல் மெய்யில் நின்ற அகரம், எகரம் ஆகத் திரிபுற்றுச் செங்கமம் என நின்றது எனக்கொள்ளுக.

[1அப்பர்-கேதாரம். 2அப்பர்-அதிகை. 3சுந்தரர்-கேதா. 4சீவகசிந்-1926. 5தக்கயாக-11-உரை. 6தக்கயாக-537; 630-உரை. 7சிலப்-14-81; தக்கயாக-203, 773. 8கம்ப- யுத்த-விடை- 36. 9சிலப்ப-13,150; சீவகசிந். 1487; சுந்தரர்-கலய-6.]

அடி 31. 'எல்லாப் பிறப்பும்' என்றது முன்னர்க் காட்டப் பட்டஎழுவகைப் பிறப்புக்களையும் என்க.

32. [1]மெய்யே! உன் பொன்அடிகள் கண்டுஇன்று வீடுஉற்றேன்.
[2]உய்ய என் உள்ளத்துள் ஓங்காரம் ஆய் நின்ற
[3]மெய்யா! விமலா! விடைப்பாகா! வேதங்கள்
[4]ஐயா என, ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே!

36. [5]வெய்யாய்! தணியாய்! 'இயமான்! விமலாஅ!'
முன்பாடம் 36ல் 'இயமான-னும் விமலா'

பொழிப்புரை: [1]என்றும் அழிதல் இல்லாத நித்தி யனே! உன்னுடைய பொன்போன்ற திரு அடிகளை இப் பிறப்பில் யான் கண்டேன் ஆதலால், மேல் பிறத்தல் ஆகிய துன்பத்தின் நின்றும் நீங்கியவன் ஆயினேன். [2]நீயே நின் அருளால் யான் உய்யும் பொருட்டு என் மனத்தின் கண்ணே நின்ற ஓங்காரம் ஆய [3]வடிவனே! இயல்பாகவே மலங்கள் இல்லாத தூயோனே! ஆன் ஏற்றினை ஊர்தியாகச் செலுத்து பவனே! வேதங்களைக் கசடு அறக்கற்ற விழுமியோர், [4]ஆசி ரியனே என ஏற்றிப் புகழ்ந்து நின்னைக் காண முயலினும், அவர்களால் நின்னைக்காணப்படாதபடி விண்ணின் உயர்ந்தும், ஆழியின் ஆழ்ந்தும், பாரின் பரந்தும் அணுவின் நுணுகி யும் நின்றவனே! [5]நெருப்பின்கண் வெம்மைத் தன்மையாய் இருப்பவனே! நீரின்கண் தண்ணிய தன்மையாய் இருப்ப வனே! உலகங்களில் எல்லாம் உள்ள உயிர்கள் ஆகவும் இருப் பவனே! தூய்மை எனும் பொருளாக இருப்பவனே! என்க.

குறிப்புரை: அடி 32. திருவாதவூர் அடிகள், தாம் திருப் பெருந்துறையில் சிவபெருமானைக் குருவடியில் கண்ட காட்சியைக் குறித்தபடியாம். மெய்: (ஆகுபெயர்) அழிதல் இல்லாதவன், சிவபெருமான்.

'மாமுனிகள் தொழுது எழு பொற்கழலான் கண்டாய்' (அப்பர். தே. வலஞ்-கொட்டை.) கண்டு, கண்டதால், எனத் திரிக்க. இன்று: (ஆகுபெயர்) இப்பிறப்பு. வீடு: (விடுதல் விகாரம்), நீங்குதல். வீடுஉற்றேன், நீங்கியவன் ஆயினேன்.

'நின் கண்டு, ஆயினேன், துறக்கம் பெற்றேன்' (சீவகசிந். 1581)

என்ற தொடருக்கு ஆசிரியர் நச்சினார்க்கு இனியர் எழுதிய பொருளைப்பார்க்க.

அடி 33. 'ஓங்காரத்து ஒருவன் ஆகும்' (அப்-அதிகை)
'ஓங்காரத்து ஒருவன்காண்' (அப்-வலிவ
'ஓங்காரத்து உருவாகி நின்றானை' (சுந்த-வலிவ)

அடி 34. மெய்: உரு, வடிவு. வேதங்கள்: (ஆகுபெயர்) வேதங்களைக் கற்ற விழுமியோர்.

அடி 35. வேதங்களைக் கற்றாராலும் அறியப்படாவண்ணம் மறைந்து நுணுகி நின்றவன் என்றதனால், கற்றாராலும் காணப்படாதவனாய் நிற்கும் நீ கல்லாதவனாகிய என்னின் முன்னர் யான் எளிதாகக் காணும்படி நின்றதும் நின் அருளே எனச் சிவபெருமான் திருப்பெருந்துறையில் தனக்கு அருளிய அருளைப் புகழ்ந்த படியாம்.

'வேதங்கள், ஐயா என ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே' என்ற தொடருக்குத் திரு. மறைமலை அடிகள், 'ஆரிய மறைகள் தலைவோனே என்று அழைப்பவும் மேல் உயர்ந்தும் கீழ் ஆழ்ந்தும் அவற்றிற்கு எட்டாமல் அகன்றும் நுண்ணியனாய் இருப்பவனே' என்று பொழிப்பும், 'ஆரியமறைகளால் இறையவன் இயல்பு முற்ற அறியப்படாமையின் இங்ஙனம் அருளிச் செய்தார்' என்றும் 'தூயர் ஆயினார்க்கு அல்லது ஆரிய நான்மறைகளாலும் அறியப் படாதவன்' என்றும் ஒரு குறிப்பும் எழுதினார். அவரால் எழுதப் பட்ட பொழிப்பும், குறிப்பும் பொருத்தம் உடையன அல்ல. என்னை?

அவர், 'தூயர் ஆயினார்க்கு அல்லது ஆரிய நான் மறைகளாலும் அறியப்படாதவன்' என்றதனால் உயர்திணை இனத்தர் ஆகிய தூயர் (தேவ, மனிதர்) ஆயினாரால் அறியப்படாத கடவுளை அஃறிணை இனத்தவாகிய ஆரிய வேதங்களாலும் அறியப்படாதவன் என்பதனால் யாதுசிறப்பு-இழிவு உள்ளது? (அஃறிணை இனத்தவாகிய) தமிழ் மறைகளால் அல்லாமல் (அஃறிணை இனத்தவாகிய) ஆரியமறைகளால் அறியப்படாதவன எனஎழுதி இருப்பின் ஒருவகையால் சிறப்பு-இழிவு தோன்றி நிற்கும். ஆதலால், அக்குறிப்புப் பொருத்தம் அற்றதே. அவர் தர்க்க நெறி அறிந்திருப்பின் இப்படி குதர்க்க நெறியில் செப்பி இரார். என்னை? அவர் தர்க்க நெறியினை அறியாதவர் என்பதற்கு அவரால் எழுதப்பட்ட 'மாணிக்கவாசகர் காலமும் வரலாறும்' என்ற நூலே சான்றாகும்.

ஆரியர்களால் எழுதப்பட்ட புராணங்கள் யாவும் பொய்க் கதைகள் எனப் புகலும் ஒருவர், ஒலிக்கூட்டங்களால் ஆயவும் உயிர் இல்லாதனவும் ஆகிய ஆரியர்தம் வேதநூற்கள், பேசும் பண்பினை (உயிரை) உடையன என்பதனை மட்டும் உண்மை என எற்றுக் கொண்டு, ஆரியர்தம் வேதநூற்களால் சிவபெருமான் அறியப்

படாதவன் எனச் சொல்லி, அவ் வேதங்களையும், அவ் வேதங்கட்கு உரியர்கள் என ஆரியப் பார்ப்பனர்களையும் பழித்து மகிழ்வார்தம நிலைமை, நடு நின்று ஆயும் நல்ல அறிஞர் முன்னர் எதனைப் பெறும்? அந்நிலைமையின் இழிவைக் குறிப்பதாகிய அவர்தம நகை யைப் பெறும். அன்றி, அப்பழித்து மகிழும் தகையார், 'உலகத்தார் உண்டு என்பது இல் என்பான் வையத்து, அலகையா வைக்கப் படும்' என்ற திருவாக்கினுக்கு இலக்கியரும் ஆவர். நிற்க,

திருமறைமலை அடிகள், 'ஆரிய மறைகளால் இறையவன் இயல்பு முற்ற அறியப்படாமையின்' என்றார் ஆதலால், வேறு எம்மறையால் இறையவன் இயல்பு முற்றும் அறியப்பட்டது? தமிழ் மறையால் எனின், இருக்கு முதலிய ஆரிய வேதங்கட்கு ஒப்பு அல்லது உயர்வினை உடையதாய்ப் பண்டு தமிழ் மொழியால் மறை (வேதம்) என நூல் இருந்ததா? இருந்தது ஆயின் அதன் பெயர் யாது? அதற்கு உயிர் உண்டா? உண்டாயின் அத் தமிழ்மறை, சிவபிரானை நேரில் கண்டு களித்தது உண்டா? உண்டாயின், அத்தமிழ் மறை, எந்தக்காலத்தில் எவ்விடத் தில் எதன்பொருட்டுச் சிவபிரானைக் கண்டு களித்தது? அப் பிரானை நேரில் அழைத்துப் பார்த்துப் பேசிற்று? அந்தத் தமிழ் மறையை எடுத்து, எந்த எந்த முந்தையஆசிரியர்கள் எந்தஎந்த நூற் களுள் பழஞ்சொல்-ஆசிரியவசனம் அல்லது காட்டு-உதாரணம் ஆக ஆண்டு இது தமிழ் மறை இது தமிழ் மறை எனச் சுட்டிச் சிறப் பித்துக் காட்டினார்கள்? எவரும் ஆண்டிலர், காட்டிலர். என்னை? முற்காலத்தில் தமிழ் மொழியால் ஆய மறைநூல் (வேதநூல்) என ஒன்று இருந்து இருப்பின் ஆண்டிருப்பர். இல்லை ஆதலால், எவரும் எந்நூலகத்தும ஆண்டிலர். எக்காலத்தும் தமிழ் மொழி யால் மறை (வேதம்) என நூற்கள் இருந்தது இல்லை என்பதனை விளக்குதற்கு ஆம ஏனைய ஏதுக்கள் பலகள். விளக் களாக என்னால் எழுதப்பட்ட 'திருஞான சம்பந்தர்-திரு ஒத்தூர்த் தேவாரத்தின் 'சிற்றுரை' எனும் நூலுள் ஒன்பதாம் பாவின் சிறப் புரைப்பகுதியில்' எழுதப்பட்டுள. அந்நூலுள் அவற்றைப் பார்க்க.

திருமறைக்காடு என்னும் திருப்பதியில் உள்ள கோயிலின் கண் வீற்று இருக்கும சிவபெருமான் ஆரிய வேதங்களால் பூசிக்கப் பட்டார் எனவும், பின்னர் அவ்வேதங்களால் அக்கோயில் பூட்டப் பட்டுப் பூசனை இன்றிக் கிடந்தது எனவும் அத்திருப்பதியின் புராணத்துள் கூறப்பட்டுளதே, அப்புராண வரலாறு பொய் ஆமோ? ஆம். அவ்வரலாறு ஒருவகையால் பொய்யே. என்னை? ஆரிய பார்ப்பனரால் பூசை செய்யப்படும் வழக்கில் இருந்த கோயிலை அவ்வாரிய பார்ப்பனர்களை நீக்கித் தமிழ்ப் பார்ப்பனர் ஆகிய 'குருக்கள்' எனும் பூசாரிகளைப் பூசை செய்யும்படி நிய மித்து இருத்தல் கூடும். ஆரிய பார்ப்பனர்களை நீக்கப்பட்டதும்

பூசாரி: பூஜா ஹாரி விவரம்

தமிழ்ப் பார்ப்பனரை நியமிக்கப்பட்டதும் ஆகிய அவ்வரலாற்றினைத்
தான் புராணகாரர்கள் ஆரிய வேதங்கள் பூசித்ததாகவும், அவ்
வேதங்கள் பூட்டிவிட்டுச் சென்றதாகவும், அவ்வேதங்களால் பூட்
டப்பட்ட கதவை அப்பர் திறந்தார்என்வும், சம்பந்தர் பூட்டினார்
எனவும் உருவகப்படுத்தி எழுதினார்கள் போலும். அதனால்
அஃறிணை இனத்தவாகிய உயிர் இல்லாத வேதங்களே சிவபிரா
னைப் பூசித்தன என்பது (ஒருவகையால்) பொய்யே ஆம் எனக்
கொள்ளுக. அன்றிச் சமண பௌத்தர்களுடைய கோயில்களைச்
சைவர்கள் வலிந்து கவர்ந்த வரலாற்றினை உருவகப்படுத்தி எழுதி
இருத்தல் கூடும் எனினும் ஆம்.

புராணகாரர்கள் நடந்த செயலை உருவகப்படுத்தி எழுதி
இருப்பர் என்பதற்கு யாதேனும் சான்று ஒன்று உண்டோ?
உண்டு. அவ்வழக்குப் பண்டே உண்டு, என்னை? கலித் தொகை
யுள் குறிஞ்சிக்கலி இரண்டில்;

'இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்
உமை அமர்ந்து உயர் மலை இருந்தனன் ஆக' என்றதொடருக்கு
அதன் உரை ஆசிரியர் நச்சினார்க்கு இனியர் 'இமயமலை இடத்துப்
பிறந்த மூங்கில் ஆகிய வில்லை வளைத்த கங்கையான் ஈரத்தை
உடைத்தாகிய சடையினை உடைய இறையவன் இறைவியோடே
பொருந்தி உயர்ந்த கயிலைமலையிலே இருந்தானாக' எனப்பொருள்
எழுதினார். அதனால் அவர், இமையவில் என்பதற்கு இமையமலை
யை வில்லாகக் கொள்ளாமல் அம்மலையில் தோன்றிய மூங்கிலையே
(ஆகுபெயரால்) வில்என உரைத்தார் என்பது ஆயிற்று. சிவபெரு
மான் உண்மையில் இமையமலையை வில்லாக வளைத்து இருப்
பின் ஆசிரியர் நச்சினார்க்கு இனியர் அம்மலையை வில்லாகக்கொள்
ளாமல் அம்மலையில் பிறந்த மூங்கில் ஆகிய வில் எனப் பொருள்
எழுதி இருப்பரா? எழுதி இரார். அதனால் அவர், யாதோ நடந்த
ஒருசெயலை உருவகப்படுத்தி எழுதப்பட்ட ஒருபுராண கதையையே
குறித்தார் எனக்கொள்ளுக. இவ்வகையே புராணங்களுள் காணப்
படும் பலவரலாறுகள் உருவகப்படுத்தி எழுதப்பட்டதாகவே கொள்
ளுதல் வேண்டும். அப்படி கொள்ளுதலால் குற்றம் ஒன்றும்
இன்று. உண்மையை உள்ளபடி உணர்ந்த செயலாகும். ஆதலால்,
'வேதங்கள் என்றதற்கு ஆகுபெயரால் வேதங்களைக் கற்ற விழுமி
யோர்-வேதியர்—பார்ப்பனர்எனப் பொருள் கொளுதலே சாலச்
சிறப்பும் பொருத்தமும் ஆதும். அதுவே உண்மை ஆதலால்.
வேதங்கள் ஐயா என அழைத்தும் அவைகளால் அறியப்படாவண்
ணம் அகன்றவன்' எனல் பொருத்தம் அன்று. அது கவிக் கருத்து
அன்று ஆதலால்.

அடி 36. 'தண்ணியான் வெய்யான்' (சம்ப-செங்கா)
'வெய்யாய் தணியாய்' (அப்-கயி)

'இயமான-னும்விமலா' என வகையுளிப்படுத்திக் கொண்ட பாடம் தளை தட்டவில்லை ஆயினும், மோனைத் தொடையால் முரண் ஆகின்றது ஆதலால், மோனைத் தொடை முரண் ஆகாமைப் பொருட்டு 'இயமான்' எனப் பிரித்து அண்மை விளிப் பெயர் ஆகவும் தளை தட்டாமைப் பொருட்டு 'விமலா' என்ற பெயரை 'விமலாஅ' என அளபெடையைக் கூட்டியும் 'இயமான்' 'விமலாஅ' என இரண்டு விளிப் பெயர்கள் ஆக்கிப் பாடம் கொள்ளுதல் பொருத்தம் ஆம். ஆதலால், 'இயமான னும்விமலா' என்ற பாடம் 'இயமான், விமலாஅ' எனத் திருத்தப்பட்டது. இயமான்: உயிர். இறையவன் எனலும் ஆம்.

'மண்ணும் புனல் 'உயிரும்' வருகாற்றும் சுடர் மூன்றும்
விண்ணும் முழுது ஆனான் இடம் வீழி மிழலையே' (சம்ப)

37 [1]பொய் ஆயின எல்லாம் போய் அகல வந்து அருளி
[2]மெய்ஞ் ஞானம் ஆகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே!
[3]எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே!
[4]அஞ்ஞானம் தன்னை அகல் விக்கும் நல் அறிவே!
[5]ஆக்கம் அளவு இறுதி இல்லாய்! அனைத்து உலகும்,
[6]ஆக்குவாய்! காப்பாய்! அழிப்பாய்! அருள்தருவாய்!
[7]போக்குவாய்! 'புன்மைப்' புகுவிப்பாய்! நின்தொழும்பில்
[8]நாற்றத்தின் நேரியாய்! சேயாய்! நணியானே!
[9]மாற்றம் மனம் கழிய நின்ற மறையோனே!
[10]கறந்தபால் கன்னல் ஒடு நெய் கலந்தால் போலச்
[11]சிறந்த அடியார் சிந்தனை உள் தேன் ஊறி நின்று
48 [12]பிறந்த பிறப்பு அறுக்கும் எங்கள் பெருமான்!

மூன்பாடம்: அடி 43ல் 'என்னைப்'

பொழிப்புரை: [1]பொருள் அல்லவற்றைப் பொருள் என உணரச்செய்யும் மாயாமலத்தால் ஆம் மயக்கம் முற்றும் கெடும்படி நீயே நின் அருளினாலே சென்று நின் அடியார்தம் மனத்தின்கண், [2]பொருளின் உண்மைப் பண்பினை ஐயமும் திரிபும் இன்றி உள்ளபடி உணர்த்தும் நல்ல அறிவு வடிவாகித் திகழ்கின்ற அழியாத சுடர்போலும் மேனியனே! [3]பொருளின் உண்மைப் பண்பினை உள்ளபடி உணர்த்தும் நல்ல அறிவு எத்தனையும் இல்லாதவன் ஆகிய என்னிடத்தில் ஆகி

ரிய வேடத்தனாகவந்து எனக்கு உண்மையை உணர்த்தி இன்பத்தினை அருளியபெருமானே! [4]உயிர்கள் நன்னெறியின் நீங்கித் தீநெறியின்செல்லும்படி அவற்றின் நல்லஅறிவை வஞ்சிக்கும் ஆணவ மலத்தினை அழிக்கும் நல்ல அறிவே! [5]பிறக்கையும், இத்தனைப் பிராயத்தன் எனும் கால அளவினையும், இறத்தலையும் இல்லாதவனே! எல்லா உலகங்களையும் [6]படைப்போனே! படைத்து அவற்றைக் காப்போனே! காத்து அவற்றை அழிப்போனே! அழித்து அவற்றிற்கு அருள்செய்வோனே! [7]நின்மாட்டு அன்பு வைத்து ஒழுகாதாரை நின்னைத் தொழுதற்கு ஆம் தூய நெறியின் செல்லாமல் தடுத்துப் புற நெறியின் செலுத்துவோனே! நின் மாட்டு அன்புவைத்து ஒழுகுவாரைப் புறநெறியில் செல்லாமல் தடுத்து நின்னைத் தொழுதற்கு ஆம் தூயநெறியில் செலுத்துவோனே! [8]பூவின் முற்றும தங்கிய மணம்போல எல்லா உலகங்களினும் அவ்வவ்வுலகங்களில் உள்ள எல்லாப் பொருள்களினும் கலந்து இருக்கின்ற பண்பை உடையோனே! நின்னிடத்தில் தம் அன்பை வைத்து ஒழுகாதார்க்கு நெடுமையில் இருப்பவனே! நின்னிடத்தில் தம் அன்பைவைத்து ஒழுகுவார்க்கு அவர்தம் மனத்தில்தங்கி (அண்மையில்) இருப்போனே! இவ்வடிவன் எனச் சொற்களால் சுட்டிச் சொல்லவும் இவ்வண்ணன் என மனத்தால் எண்ணவும் இயலாதபடி மறைந்து நின்ற மறையின் ஒலியைமேனியாக உடையவனே! (மந்திரரூபனே.) நின்னிடத்தில் அன்புவைத்து ஒழுகுதலால் [11]சிறந்தார் ஆகிய நின் அடியார்தம் மனத்தின்கண்ணே நீ தங்கி [10]ஆவின் நின்றும் கறக்கப்பட்ட பாலொடு கரும்பின் சாற்றினால் ஆய கற்கண்டையும் தேன் நெய்யையும் கலந்தால் ஆம் இனிமை அன்ன இனிமை [11]உண்டாகும்படி; [12]பிறந்து பிறந்து துன்பத்தை நுகருதற்கு ஏதுவான அவர் உடைய பண்டைய தீய வினைகளைக் கெடுத்துப் பின்னும் பிறவாமைக்கு ஏதுவான வீட்டினையும் அவர்களுக்கு அருளும் எம்முடைய இறையவனே! என்க.

குறிப்புரை: அடி 37. பொய்: (ஆகு பெயர்) மாயாமலம். பொருள் அல்லதனைப் பொருள் என உணரச்செய்வது. போய் அகல: (ஒரு சொல்) கெடும்படி, கெட்டு நீங்க. வந்து அருளி: (அருளி வந்து) அருளினாலே சென்று. வந்து, சென்று.

அடி 38. மிளிர்தல்: திகழ்தல். மெய்ச்சுடர்: அழியாத சுடர். ஒருகாலத்தில் குறைதலும் ஒருகாலத்தில் கூடுதலும இல்லாமல் என்றும் ஒரு தன்மைத்தாய் விளங்கும் சுடர்.

அடி 40. அஞ்ஞானம்: (வடமொழி. ந + ஞானம் திரிபு. வீரசோழி-சந்திப்ப-11.) நல்ல ஞானம் அல்லது. அது ஆணவ மலத்தால் மறைக்கப்பட்ட ஞானம். நல்லநெறியை விட்டுத் தீயநெறி

யில் ஒழுகுபவனை யோக்கியன் அல்லாதவன் (அயோக்கியன்) என்பது போலப் பொருளின் உண்மைப் பண்பினை உள்ளபடி உணராதபடி ஆணவமலத்தால் மறைக்கப்பட்டதால் இப்பியை வெள்ளிஎனத் திரிபாக உணரும் (ஞானத்தை) அறிவையே நல்ல ஞானம் அல்லது (அஞ்ஞானம்) எனச் சொல்லுவர் ஆசிரியர். நீலமணியைச்சேர்ந்த பாலை நீலப்பால்என்பது போல ஆணவமலத்தைச்சேர்ந்த ஞானத்தை அஞ்ஞானம் என்பர். அந்நீலப்பால் நீலமணியின் நீங்கிய பின் நற்பால் ஆதல்போல அஞ்ஞானம், ஆணவமலத்தின் நீங்கியபின் நன்ஞானம்ஆகும் என்பர். மனிதவர்க்கத்தில் தீயநெறியில் ஒழுகுபவன் அல்லாமல் அயோக்கியன் என வேறாக தனிமனிதன் இல்லாமை போல அறிவு வர்க்கத்திலும் ஆணவமலத்தால் மறைக்கப்பட்டதால் உண்மையை உள்ளபடி உணராத நல்ஞானம் அல்லாமல், அஞ்ஞானம் என வேறே தனிஞானம் இல்லை என்பது சைவசமயநூல் முடிபு. அம் முடிபை மறந்தபடியால், திரு. மறைமலை அடிகள், அஞ்ஞானம் என (நல்ல ஞானத்தின்வேறாக) ஒருஞானம் உள்ளது என்று உரை எழுதினர். அவ்வுரை பொருத்தம் அன்று. என்னை? [அறியாமை ஒரு பொருள் அன்று எனக்கூறுவாரும் உளர். அறியாமை இல் பொருள் ஆயின் அஃது அறிவைமறைக்கும் தன்மையும் செயலும் இல்லாதாதல் வேண்டும்; மற்று அஃது எல்லாஉயிர்களின் அறிவு செயல் வேட்கைகளை மறைக்கும் தன்மையும் தொழிலும் உடையதாதல் கண்கூடாய் அறியக்கிடத்தலின் அஃது ஓர் உள்பொருளே யாமென்று அறிக] என்றார் ஆதலால். ['அஞ்ஞானம், அவித்தை, ஆணவம், அறியாமை என்பன ஒருபொருள் சொற்கள்'] எனவும் உரைஎழுதினர். ஆணவ மலமே அறியாமை என்பது அவர் தம் கருத்துப்போலும். ஆணவமலம் வேறு. அறியாமை-அஞ்ஞானம் என்பதுவேறு இரண்டும் ஒரு பொருள் அன்று. ஆணவமலத்தால் மறைக்கப்பட்ட நன்ஞானம்-நல்லறிவு என்பதன் திரிபே அஞ்ஞானம்-அறியாமை என்பது ஆதலால். ஒருவனை நோக்கி அவனின் அறியாமையைச் சுட்டுங்கால், அறிவு இல்லாதவன் எனச் சொல்லப்படும் வழக்கை இவண் நினைக்க. ஆணவமலம் என்ற பெயர், அஞ்ஞானம் என்னும் பொருளைச் சுட்டுங்கால் அதனை ஆகுபெயர் என்க.

அடி 41. ஆக்கம்: பிறத்தல். அளவு: பிராயம். இறுதி: சாக்காடு.

அடி 42. ஆக்குவாய்: ஆக்குதல், படைத்தல்.

'என்னை' என்றபாடம் பொருள் பொருத்தம் இல்லாமையால் அப்பாடம் 'புன்மை' எனத் திருத்தப்பட்டது. புன்மை: (ஆகுபெயர், சிவநெறி அல்லாத) புறநெறி.

அடி 43. போக்குவாய்: போக்குதல், புறத்தே செலுத்தல். புகுவிப்பாய்: அகத்தே அனுபவித்தல். இவ்வடி, நிரல் நிறை பொருள் கோள்.

'படுவிப்பாய் உனக்கே ஆள் யாரையும் பணியாமே
தொடுவிப்பாய் துகிலொடு பொன்தோடு உடுத்து உழல்வானே' (சுந்த)

அடி 44. நாற்றத்தின் நேரியாய். நாற்றம், மணம. அத்து, சாரியை. இன், உவம உருபு.

'பாலினுள் நெய்யும் பழத்துள் இரசமும்
பூவினுள் நாற்றமும் போல் உளன் எம்இறை' (திருமந்-2639.)

அடி 45. மாற்றம்: சொல். கழிய: நீங்க, இயலாதபடி. மறை: மந்திரம். மறையோனே, மந்திரத்தின் உருவமாய் இருப்பவனே. சிவபெருமான் வாக்குமனங்கட்கு எட்டாதவன் என்னும் வழக்கினை வழங்கியபடியாம்.

'வாக்கும் மனமும் மறைந்த மறைப் பொருள்' (திருமந்-2854)
'உரை அற்றது ஒன்றை உரை செய்யும் மூடர்காள்' (திருமந்2955)

அடி 46. நெய்: தேன்நெய். பாலொடு ஆன் நெய் கலந்து உண்ணல் வழக்கின்று, சுவையும் இன்பமும் தரா ஆகலான்

'பாலொடு தேன் கலந்தற்றே' (குறள்-1121)

அடி 47. சிந்தனை உள்: சிந்தனை (ஆகுபெயர்) மனம். உள், ஏழனுருபு. ஊறி: ஊற, தங்கும்படி நின்று, அசை.

அடி 48. பிறந்த பிறப்பு அறுக்கும் என்றதற்கு; ஒருவர், இழி குலத்தில் பிறந்தார் ஆயினும் அவர், நினக்கு அன்பு உடையராய இருப்பின், இழிகுலத்தார் எனச் சொல்லப்படும் அவருடைய பிறப்பினால் ஆய இழிவைக் கெடுக்கும் எனலும் ஆம். என்னை? பிறப்பினால் ஆய இழிவைக் கெடுத்தல் ஆவது, இழி குலத்தில் பிறந்தவர்கள் எனச் சொல்லப்படும் திருப்பாணனார், திருநந்தனார், திருக்கண்ணப்பனார் முதல் ஆயின அடியார்களை உயர்குலத்தில் பிறந்தாரையும் வணங்கும்படி செய்தமையால்.

'குலம் இலர் ஆகிலும் குலத்துக்கு ஏற்றதோர்
நலம் மிகக் கொடுப்பது நமச்சிவாயவே' (அப்பர்-தேவா)
'ஆவுரித்துத் தின்று உழலும் புலையர் எனும்
அவர் கண்டீர் யாம் வணங்கும் கடவுளாரே' (அப்பர் தேவா.)

49. [1]நிறங்கள் ஓர் ஐந்து உடையாய்! விண்ணோர்கள் ஏத்த
[2]மறைந்து இருந்தாய்! வல்வினையேன் தன்னை
[3]மறைந்திட மூடிய மாய இருளை,
[4]அறம் பாவம் என்னும் அரும் கயிற்றால் கட்டிப்
53. [5]புறம் தோல் போர்த்துப் புழு அழுக்கு மூடி

54. [6]மலம் சோரும் ஒன்பது வாயில் குடிலை,
[7]மலங்கப் புலன் ஐந்தும் வஞ்சனையைச் செய்ய
[8]விலங்கும் மனத்தால் விமலா! உனக்குக்
[9]கலந்த அன்பு ஆகிக் கசிந்து உள் உருகும்
[10]நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
[11]நிலந்தன் மேல் வந்து அருளி, நீள்கழல்கள் காட்டி!
[12]நாயின் கடையாய் 'நடந்த' அடியேற்குத்
61 [13]தாயின் சிறந்த தயா ஆன தத்துவனே!

*முன்பாடம்: அடி 60ல் "கிடந்த"*

*பொழிப்பு உரை: ஐந்து முகங்களும் ஐந்து வகை வண்ணங்களாக இருப்பவனே! தேவர்கள் புகழ்ந்து சொல்லியும் [2]அவர்களால் காணப்படா வண்ணம் காந்து இருந்தவனே! எம்முடைய பெருமானே! வலிய தீய வினையை உடையோன் ஆகிய என்னுடைய அறிவை [3]நின்னைத் தொழுதற்கு ஆம் தூய நெறியில் செல்லாதபடி தடுத்துத் தீயநெறியில் செல்லும்படி செய்த மாயா மலமும் ஆணவமலமும்; [4]புண்ணியம் பாவம் என்ற இரண்டு அவிழ்த்தற்கு அரிய கயிறுகளினாலே கட்டப்பட்டதும் [5]புறத்தே தோலால் மூடப்பட்டதும், உள் இடம் முற்றும் புழுத்தற்கு ஏதுவான நிணம் ஆகிய அழுக்கால் செறிக்கப்பட்டதும, [6]எரு, நீர் முதலிய அழுக்குகளைச் சொரிதற்கு ஆம் ஒன்பது புழைகள் அமைப்பட்டதும், ஆகிய உடம்பினுள் [7]வாழும் புலன்கள் ஐந்தும்; நின்னைத்தொழுதற்கு ஆம் தூய நெறியில் செல்லாமல், தீயநெறியில் சென்று கலங்கும்படி வஞ்சனையைச் செய்தலால், [8]தூயோய்! நின்னைத்தொழுதற்கு ஆம் தூய நெறியின் நீங்கித் தீய நெறியில் செல்லும் மனத்தை யான் உடையவன் ஆயினேன். அதனால் யான், உன் திருஅடிக் கண் [9]பொருந்திய அன்புஉடையன் ஆகி மனம் நெகிழ்ந்து உருகும் [10]நல்வினையைச் செய்தலைக் கொள்ளாமையால கீழ்மையன் ஆயினேன். ஆயின எனக்கு நீயே அருளும் பொருட்டு [11]நின் இருக்கை ஆகிய வெள்ளிய மலையின் நின்றும் நிலத்தின்மீது வந்து, நின்னுடைய பெருமை பொருந்திய திரு அடிகளைக்காட்டிய சுவாமி! [12]அறியாமையால் நினக்குத் தொண்டு செய்யும் தூய நெறியின் நீங்கிப் புறநெறியாகிய தீய நெறியில் சென்று நாயினும் கீழ்மையனாய் ஒழுகிய அடியேன் முன்னர் [13]ஈன்ற தாயினும் சிறந்த அன்புடைய ஆசிரிய வேடத்தனாய் அமர்ந்து அருளிய பண்பினனே! என்க.*

*குறிப்புரை: மாய இருள், புலன் ஐந்தும் வஞ்சனையைச் செய்தலால் விலங்கும் மனத்தை உடையவன் ஆயினேன் என ஒரு*

வினை முடிக்க. பின், அதனால் உனக்கு அன்பனாகி உன் உருநாம் நலம் இலாத சிறியேன் (கீழ்மையன்) ஆயினன் என ஒரு வினை முடிக்க. பின் (ஆயின எனக்கு) நல்கி, கழல் காட்டி, தயாவான தத்துவனே என ஒரு வினை முடிக்க.

அடி 49. நிறங்கள் ஓர்ஐந்து: நிறங்கள், வண்ணங்கள். ஓர், அசை.

"நடுவு கிழக்குத் தெற்கு உத்தரம் மேற்கு
நடுவு படிகம் நற்குங்கும வன்னம்
அடையுள அஞ்சனம் செவ்வரத்தம் பால்
அடியேற்கு அருளிய முகம் இவை அஞ்சே" (திரும-1735)

அடி 50. தன்னை: (ஆகுபெயர்) அறிவு தன்னை.

அடி 51. மாய இருளை: மாய, (மாயாவிகாரம்) மாயாமலம். இருளை: இருள், ஆணவமலம். ஐ, பகுதிப் பொருள் விகுதி. மாய இருள்: (உம்மைத் தொகைத் தொடர்) மாயா மலமும் ஆணவ மலமும்.

திரு. மறைமலை அடிகள், 'மாய இருளை' என்பது 'மாயா மலம்' என ஒரு பொருளாக உரைத்தார். இருளை என்பதன் ஈற்று ஐயைப் பிரித்துக் காட்டாமல் அதனை ஐ யீற்றுச் சொல்லாகவே கொண்டார். அவர் உரைத்த பொருளும் கொண்ட கொள்கையும் பொருத்தம் அற்றன. என்பதனை ஆய்ந்து அறிக. மற்றும் அவர் 'மாய இருளைக் கயிற்றினால்கட்டித் தோல்போர்த்துப் புழு அழுக்கு மூடிச் செய்த குடிலைச் சிறியேற்கு நல்கி என இயைக்க இங்ஙனம் இயைக்குங்கால் செய்த என்னும் ஒரு சொல் வருவிக்கப்படும்.' என ஒரு குறிப்பும் எழுதினார். அக் குறிப்பும் பொருத்தம் அற்றதே. என்னை? மாய இருளை-மாயாமலத்தைப் பாப புண்ணியங்கள் கட்டுதல் வழக்கா? பாப புண்ணியங்களை மாயா மலம் கட்டுதல் வழக்கா? 'குடிலை நல்கி' என்ற முடிபு கவிக்கருத்து ஆமா? என்பவற்றை ஆய்ந்து அறிக. அன்றி, 'ஒருசொல் வருவிக்கப்படும்' என்றார், யாரால்? எதனால்? வினை முற்றுஎப்படி? என்ற வினாக்கள் அடியாக வாக்கியவளன் வழுவிற்று அன்றோ? அவ்வழுக்களை இவண் விளக்கிக்காட்டின் விளக்கம் மிகவிரியும் ஆதலால், விரிவஞ்சி விளக்காமல் விடுத்தேன்.

அடி 52. அறம்: ஆறு+அம், ஆறம் விகாரம். ஆறு: வழி, நெறி, ஒழுக்கம். அம், பகுதிப் பொருள் விகுதி. இல்லறம் இல்லில் வாழ்வார் ஒழுகும் ஒழுக்கம். துறவறம், இல்லின் நீங்கியவர் ஒழுகும் ஒழுக்கம். 'இல்லறம் அல்லது நல்லறம் அன்று' என்பதன் பொருளை நினைக்க. அல் திணை-அஃறிணை என்பது, உயர் திணை என்பதன் பொருளை, உயர்வு அல்லதாகிய ஒழுக்கம். (ஒழுக்கம் அல்லது) என, மறுத்துச்சுட்டுதல் போல மறம் என்பது, அறம்-

ஒழுக்கம் என்பதன் பொருளை, அறம் அல்லது (ஒழுக்கம் அல்லது) என மறுத்துச்சுட்டுவது. மறம்: மாறு + அம், மாறம் விகாரம். மாறு: வேறு, அறத்தின் மாறுயது. அம், பகுதிப் பொருள்விகுதி. அது, அறம் என்பதன் எதிர்மறைப் பெயர்.

திரு. மறை மலை அடிகள், ['அறம், அறு என்னும் முதல் நிலையில் தோன்றி அறியாமையினையும், அது காரணமாகச் செய்யும் தீவினையினையும் அறுப்பது என்னும் பொருட்டாம்.'] என ஒரு குறிப்பு உரைத்தார். அவர் தம் குறிப்புப்பொருத்தம் அற்றதே. என்னை? அவர், தருமம்-அறம் என்பது, ஜைன தருமம், ஜினனால் சொல்லப்பட்ட ஒழுக்கம். பௌத்த தருமம், புத்தரால் சொல்லப்பட்ட ஒழுக்கம் வைணவ தருமம், விஷ்ணுவினால் சொல்லப்பட்ட ஒழுக்கம். சைவ தருமம், சிவபெருமானால் சொல்லப்பட்ட ஒழுக்கம். எனச், சமயங்களின் கொள்கையை-ஒழுக்கத்தைச் சுட்டுதலை மறந்தவராய்த் தீவினையை அறுப்பது என்றார். ஆதலால், அவர் தம் குறிப்புப் பொருத்தம் அற்றது ஆயிற்று.

அடி 51. குடிலை: குடில், கூடு. உடம்பு. ஐ, உருபுமயக்கம்; உடம்பின் உள்.

அடி 58. நல்கி: நல்க, அருளும் பொருட்டு. காட்டி: (பெயர்) காட்டியவனே, காட்டிய சுவாமி.

அடி 59. நிலம் தன்மேல் வந்து என்றது சிவபெருமான் திருப்பெருந் துறையில் குருவடிவில் வந்து தனக்கு அருளிய அருளை அடிகள், புகழ்ந்தபடியாம். வந்து அருளி: (ஒரு சொல்) வந்து.

அடி 60. 'கிடந்த' என்றபாடம், மோனைத் தொடையால் முரண் ஆகின்றது. ஆதலால் அப்பாடம், 'நடந்த' எனத் திருத்தப்பட்டது. நடந்த: ஒழுகிய. அடியேற்கு: (கு, உருபு மயக்கம்) அடியேன் முன்னர்.

அடி 61. தயா: (வடமொழி) அருள்.

"வேயின் கனல்போலே இம்மேனியும்
கோயில் குடி கொண்ட கோன் நந்தி
தாயினும் மும்மலம் மாற்றித் தயாஎன்னும்
தோயமதாய் எழும் சூரியன் ஆமே" (திருமந்-116.)

62. [1]மாசு அற்ற சோதி! மலர்ந்த மலர்ச்சுடரே!
[2]தேசனே! தேன் ஆர் அமுதே! சிவபுரனே!
[3]பாசம் ஆம் பற்று அறுத்துப் பாரிக்கும் ஆரியனே!
[4]நேச! அருள் புரிந்து நெஞ்சில் வஞ்சம் கெடப்
66. [5]பேராது நின்ற பெருங்கருணைப் பேர் ஆறே!

67. [6]ஆரா அமுதே! அளவு இலாப் பெம்மானே!
[7]ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே!
[8]நீராய் உருக்கி! என் ஆர் உயிராய் நின்றானே!
70. [9]இன்பமும் துன்பமும் இல்லானே! உள்ளானே!

*பொழிப்புரை:* [1]குற்றம் அற்ற ஒளியாய் இருப்பவனே! பூத்த பூவின் பொலிவாய் இருப்பவனே! [2]நெருப்பின் வண்ண மாய் இருப்பவனே! தேனின்கண் பொருந்திய இனிமையாக இருப்பவனே! தன்னை அடைந்தாருக்கு இன்பத்தை அளிக்கும் முத்தி நிலையமாய் இருப்பவனே! [3]என் மனை, என் மக்கள், என் மாடு என எண்ணுவித்துத் தீ நெறியில் செலுத்தும் ஆர்வம் ஆகிய கயிற்றினை அறுத்து உயிர்களைப் பாதுகாக்கும் பெருமையை உடையவனே! [4]அன்பு எனும் பொருளாய் இருப்பவனே! நின் அருளால் நீயே நின் அடியார்களது நெஞ்சின்கண் வஞ்சனைகள் சிறிதும் தோன்றாமல் கெடும்படி, [5]அவர்கள் நெஞ்சின் நின்றும் நீங்காமல் வீற்று இருந்து, அவர்களுக்கு அருளும், இன்பம் ஆகிய வெள்ளத்திற்குப் பெருமை பொருந்திய கருணை ஆகிய பெரிய ஆறாக இருப்பவனே! [6]உயிருக்கு உறுதி பயத்தற்குப் பொருத்தம் ஆகும் மருந்தாய் இருப்போனே! குறளன், சிந்தன், அளவன், நெடியன் எனச் சுட்டும் அளவால் எல்லை சொல்ல இயலாதபடி பெருமையை உடையவனே! [7]நின் பெருமையைக் கற்றுக் கேட்டு அறியாதார், நின்னை அறிந்து கொள்ளாதபடி அவர்கள் மனத்து அகத்தே கரந்து நிற்கும் கரவோனே! [8]நின் பெருமையினைக் கற்றுக் கேட்டு அறிந்து நின்மாட்டு அன்பு கொண்டு ஒழுகுபவர் மனத்தினை நீராய் உருக்குபவனே! என் இடத்தில் பொருந்தி உள்ள உயிராய் இருப்பவனே! [9]என்றும் இன்பம் உள்ளானே! என்றும் துன்பம் இல்லானே! என்க.

*குறிப்புரை:* அடி 62. மாசு அற்ற சோதி என்றது, ஞாயிற்றின் ஒளி போலத் தோன்றுதலும் மறைதலும் இன்றியும், திங்களின் ஒளி போலத் தேய்தலும் வளர்தலும் இன்றியும், தீயின் ஒளி போல எழுதலும் தாழ்தலும் இன்றியும், என்றும் ஒரு தன்மைத்தாய் உள்ளது, சிவபெருமான் உடைய திருமேனியின் ஒளி என்றபடி என்க.

அடி 63. சிவபுரம்: முத்தி நிலையம், வீடு.

அடி 64. பாசம்: கயிறு. பற்று: ஆர்வம். பாசம் ஆம் பற்று: (பற்று ஆம் பாசம்) ஆர்வம் ஆகிய கயிறு. ஆசாபாசம் என்ற வடமொழித் தொடரின் பொருளை இவண் நினைக்க. பாரிக்கும்; பரிபாலிக்கும். ஆரியன்: பெருமை உடையவன்.

அடி 66. கருணைப்பேர் ஆறே என்றதற்கு ஏற்ப 'இன்பமாகிய வெள்ளம்' எனத் தந்து உருவகம் உரைக்க.

அடி 68. ஓராதார்: அறியாதார். வேத ஆகமங்களைக் கற்றுக் கேட்டு அறியாதார். ஒளிக்கும்: ஒளிதல், மறைதல். காத்தல். ஒளியான்: காவோன்.

அடி 69. உருக்கி, பெயர். முன் அடியில் ஓராதார்க்கு ஒளிப்பவன் என்றார் ஆதலால், இவ்வடியில் உருக்குதலாகிய செயலுக்கு ஏற்பச் செயப்படுபொருள் 'அறிந்தார் மனத்தினை' என்பது தந்து உரைக்கப்பட்டது. ஆர் உயிர்: பொருந்திய உயிர்.

அடி 70. நிரல் நிறை பொருள் கோள். உம்மைகள், அசை. இவ்வகை அன்றித் திரு. மறைமலைஅடிகள், இன்பமும் துன்பமும் ஆகிய 'இரண்டும் இல்லாதவன்' எனவும், அவை 'இரண்டும் உள்ளவன்' எனவும் உரைத்தார். அவர் உரை பொருத்தம் அன்று. என்னை? இறையவன் 'ஒரு காலத்தில் துன்பம் உடையவன்' என்றும், 'ஒரு காலத்தில் இன்பம் உடையவன்' என்றும் பொருள் தந்து சைவ சித்தாந்த ஆகம நூற்களின் கருத்துக்களோடு முரண் ஆகின்றது ஆதலால்.

'இன்பன்காண் துன்பங்கள் இல்லாதான் காண்' (அப்பர்-நாகே.)

இறையவன் யாவையும் ஆகியும், அவற்றை இயக்குபவன் ஆகியும் இருப்பவன் என்ற அவன் தன் அளவற்ற ஆற்றலின் இயல்பினை; இயம்பியபடியாம். அன்றி, இறையவன் பசுக்களைப்போல இன்பத்தையும் துன்பத்தையும் உடைமைப் பொருளாகக் கொண்டு நுகர் பவன் எனக் கூறினோர் அல்லர் என்க. அதன் ஒட்டினை இதன் அடியில் 'யாவையுமாய் அல்லையுமாய்' என்றதனால் அறிக.

71 [1]அன்பருக்கு அன்பனே! "யாவும் ஆகி! அல்ல ஆகி!"

[2]சோதியனே! துன் இருளே! தோன்றாப் பெருமையனே!

[3]ஆதியனே! அந்தம் நடு ஆகி! அல்லானே!

[4]ஈர்த்து என்னை ஆட்கொண்ட எந்தை! பெருமானே!

[5]கூர்த்த மெய்ஞ்ஞானத்தால் கொண்டுணர்வார்தம் 'கருத்தே!'

76. [6]நோக்கு அரிய நோக்கே! நுணுக்கு அரிய "நுண்மையே!"

முன் பாடம்: அடி 75ல் 'கருத்தின்'

பொழிப்பு உரை: [1]நின்னிடத்தில் அன்பு வைத்து ஒழுகும் நின் அடியார்தம் மனத்தின்கண் அன்புவடிவாய் இருப்பவனே! எல்லாஉலகங்களும், அந்த அந்த உலகங்களில் நிறைந்துள்ள உயிருடைய பொருள்களும், உயிர் அற்ற பொருள்களும் ஆகி இருப்பவனே! அவைகளின் வேறாகியும்

இருப்பவனே! [2]உலகங்கள் யாவற்றினும் உள்ள ஒளியாய் இருப்பவனே! உலகங்கள் யாவற்றினும் செறிந்துள்ள இருளாய் இருப்பவனே! நின் திரு அருளைப் பெறுதார் எவராலும் தம் கண்புலனால் காணப்படாதபடி மறைந்து இருக்கும் பெருமையை உடையவனே! [3]எப் பொருளினும் முதலாகி இருப்பவனே! எப்பொருளினும் நடு ஆகி இருப்பவனே! எப் பொருளினும் ஈறு ஆகி இருப்பவனே! எப்பொருளினும் கலத்தல் இன்றி வேறாகி இருப்பவனே! [4]நீயே நின் திரு அருளால் என்னை வலிந்து ஆட்கொண்ட இறையவனே! எல்லாப் பெருமையையும் உடையவனே! [5]நுண்ணிய நல்ல அறிவைக் கொண்டு அறிவார்தம் நினைவு ஆக இருப்பவனே! [6]எதனையும் பார்க்கவேண்டும் என்னும் எண்ணம் கொள்ளாமலே யாவற்றையும் ஒரே காலத்தில் பார்ப்பவனே! பிறரால் நுணுக்கப்படாமல் நின்னாலே நுணுகி இருப்பவனே! என்க.

குறிப்புரை: அடி 71. ஆய்: ஆகி திரிபு. ஆகி, பெயர். ஈற்றில் 'இருப்பவனே' எனத் தந்து வினைமுடிக்க. அது, சொல் எச்சம்.

அடி 75. மெய்ஞ்ஞானத்தால்: ஆல், உருபு மயக்கம். தம், அசை. 'கருத்தின்' என்ற பாடம் பொருள் சிறவாமையால் அப்பாடம், 'கருத்தே' என விளிப்பெயராகத் திருத்தப்பட்டது.

அடி 76. 'நோக்கரிய திருமேனி உடையாய்' (அப்) என்றதனால் நின் திருஅருள் இன்றித் தாமே நின்னைப் பார்ப்பதற்கு முயலுவார் தம்கண்ணால் காணுதற்கு அரிய பெரிய ஒளியாய் இருப்பவனே! எனலும் ஆம்.

> 'நோக்காமே நோக்கு அருளவல்லாய் நீயே' (அப்.)
> 'நோக்காதே எவ்வளவும் நோக்கினானை
> நுணுகாதே யாதொன்றும் நுணுகினானை' (அப்)

என்ற திருமறைகளை நினையாமல் திரு. மறைமலை அடிகள், 75, 76 ஆகிய இரண்டு அடிகளையும் ஒரு தொடராகக் கொண்டு 'கூரிய மெய்யறிவினால் உளங்கொண்டு உணர்வாருடைய கருத்தினாலும் நோக்குதற்கரிய நோக்கே' என்று பொருள் உரைத்தார். அவர் உரைத்த பொருள் பொருத்தம் அன்று. என்னை? 'கூர்த்த மெய் அறிவினாலும் நோக்குதற்கு அரியன்' என்றதனால் 'பருத்த பொய் அறிவினால் நோக்குதற்கு எளியன்' என்றார் ஆயிற்று அன்றோ? ஆதலால்.

77. [1]போக்கும் வரவும் புணர்வும் இலாப் புண்ணியனே!
[2]காக்கும் எம் காவலனே! காண்பு அரிய பேர் ஒளியே!

[3] ஆற்று இன்ப வெள்ளமே! அத்தா! மிக்காய் நின்ற
[4] தோற்றச் சுடர் ஒளியாய்! சொல்லாத நுண் உணர்வாய்!
[5] *மாற்றம் ஆம் வையகத்தின் வெவ்வேறே 'வந்து அருள்வாய்'*
[6] தேற்றனே! தேற்றத் தெளிவே! என் சிந்தனை உள்
83. [7] ஊற்று ஆன உண் ஆர் அமுதே! உடையானே!

*முன்பாடம்: அடி 81-ல் "வந்து அறிவாம்"*

*பொழிப்பு உரை: [1] இறத்தலும், பிறத்தலும், சுற்றத்தினரோடுகூடி இருத்தலும் ஆகியஇவை, இல்லாதபுண்ணியனே! [2] எம்மைக் காத்தற்குக் காவலனாக இருப்பவனே! நின் திரு அருளைப் பெறுதார், தம் கண்புலனால் நின்னைக் காணுதற்கு இயலாத பெரிய ஒளியாய் இருப்பவனே! [3] நின் அடியார்தம் மனம் ஆகிய ஆற்றின் கண் இன்பம் எனும் வெள்ளம் ஆகி வழிபவனே! யாவருக்கும் மூத்தவனே! நின்பெருமையை அறியாத அரி அயர்கள் முன்னர் தோற்றத்தால் பெரியதாய் நின்ற [4] தழல் போலும் ஒளியானே! இவ்வண்ணம், இவ்வுரு எனச் சொல்லுதற்கு இயலாத நுண்ணிய உணர்வு வடிவு ஆய் இருப்பவனே! [5] பிறப்பாகிய சுழற்சியில் சுழன்று வருந்தும், நின் அடியார்க்கு அருளும் பொருட்டு அவர் அவர் தகுதிக்கு ஏற்ப நீயும் இம் மண் உலகில் வேறு வேறு வடிவன் ஆகிச் சென்று அருளுதலை உடையாய்! [6] தெளிவு எனும் பொருளாய் இருப்பவனே! [7] நின்அடியான் ஆகிய என் மனத்தின் கண் எழும் ஐயம் நீங்குதற்கு ஏதுவான ஐயமும் திரிபும் அற்ற நம்பிக்கை எனும் வடிவாய் இருப்பவனே! [7] ஆறுகள், கேணிகள் முதலியவற்றின் ஊற்றில் ஊறித் தோன்றிய உண்ணும் நீரில் பொருந்திய இனிமையாய் இருப்பவனே! யாவற்றையும், யாவரையும் உடைமைப் பொருளாக உடையவனே! என்க.*

*குறிப்பு உரை: அடி 77. போக்கு: இறத்தல், வரவு: பிறத்தல். புணர்வு: கூடுதல், இருத்தல்.*

*அடி 79. இன்ப வெள்ளம் என்றதற்கு ஏற்ப மனமாகிய ஆறு என 'மனம்' என ஒரு சொல் தந்து, உருவகம் படுத்துக. உருவகம் கொள்ளும் நெறியை மறந்தபடியால் திரு. மறை மலை அடிகள் தம் விரி உரையுள் "ஆற்று இன்ப வெள்ளமே" என்றதற்கு "நல்லாற்றில் பெருகும் இன்பப் பெருக்கே" என உரை எழுதினார். இன்பம்என்பது ஆற்றில்பெருகும்பொருளா? எதுநல்லாறு? எது இன்பம்? என்பதுவிளங்காமையால் அவ்வுரை பொருத்தம்அன்று.*

*அடி 80. 'தெளிகின்ற பொன்னும் மின்னும் அன்ன*
*தோற்றச் செழுஞ்சுடரே'* (*திருவாச. நீத்தல்*)

*அடி 81. மாற்றம்: பிறப்பாகிய சுழற்சி, வையகம்: இவ்வுலகு. அருளி: (முன்னிலை வினைப்பெயர். எச்சமொழிஅன்று) அருளுதலை*

*உடையாய். அறிவாம் என்ற பாடம் பொருள் பொருத்தம் இன்மையால் அப்பாடம், 'அருளி' எனத் திருத்தப்பட்டது.*

*திரு. மறைமலை அடிகள் இவ்வடியை 'வெவ்வேறே வந்து அறிவாம் தேற்றனே' எனப் பின் அடியின் கொண்டு கூட்டி, 'வெவ்வேறாய்வந்து அறிவாய் விளங்கும் தெளிவினனே' எனப் பொழிப்பு உரைத்தார். அவ்வுரை பொருத்தம் அன்று. என்னை? வெவ்வேறாய் வந்து என்றால், எது எதுஆக, எங்கு எங்கு வந்து? அறிவாய் விளங்கியது எது? எதன் பொருட்டு? ''அறிவாய் விளங்கிய தெளிவினன்' என்பதன் பொருள் என்னை? வந்து அறிவாய் விளங்கினான் ஆயின், வாராமுன் அறிவிலனாய் இருந்தனனோ? என்ற வினாக்கட்கு விடை இறுத்தற்கு ஏது இன்றாய் முடிதலால் பயனில் உரை ஆயிற்று.*

*அடி 82. தேற்றம்: தெளிவு. தேற்றனே, தெளிவு எனும் பொருளாய் இருப்பவனே. தேற்றத் தெளிவு: ஐயமும் திரிபும் அற்ற நம்பிக்கை.*

*அடி 83. ஊற்று ஆன: ஊற்றில் தோன்றிய. உண்: உண்ணுதற்கு. ஆர்: பொருந்திய. அமுதே: நீரில் இனிமையாய் இருப்பவனே.*

84. [1]வேற்று விகாரம் விடக்கு உடம்பின் உள் கிடப்ப
[2]ஆற்றேன்; எம் ஐயா, அரனே ஓ என்று என்று
[3]போற்றிப் புகழ்ந்து இருந்து பொய்கெட்டு மெய்யானார்
[4]மீட்டு இங்கு வந்து வினைப்பிறவி 'சாராமல்'
[5]கள்ளப் புலக் குரம்பைக் கட்டு அழிக்க வல்லானே!
[6]நள் இருளில் நட்டம் பயின்று ஆடும் நாதனே!
[7]தில்லை உள் கூத்தனே! தென்பாண்டி நாட்டானே!
91. [8]அல்லல் பிறவி 'அறுப்பாய் என என்.'

*மூன் பாடம்: அடி 87ல் ''சாராமே'' 91ல் 'அறுப்பானே ஓ என்று'*

*பொழிப்புரை: [1]காலம் கழியக்கழியப் பலப்பல வேற்றுமைகள் தோன்றுதற்கு ஏதுவான ஊன் நிறைந்த உடம்பின்கண் மேலும் (பிறத்தற்கு)வாழ்தற்கு [2]வலிமை இல்லாதவன் ஆயினேன் ஆதலால்; எம்மை அடிமையாக உடைய சுவாமி! என்றும், இறையனே! என்றும்சொல்லி நின் திருப்புகழ்களை [3]மறவாதவர்களாய்ப்புகழ்ந்துபௌத்த சமணங்களாகிய பொய்ந் நெறிகளில் செல்லாதவராய் உண்மை நெறியாகிய நின்னால் அருளப்பட்ட ஆகம நெறியில் ஒழுகுபவர்களைப் [4]பின்னும் இந்த உலகி[illegible] வந்து பிறத்தற்கு ஏதுவான தீய வினைகள் பற்றாதபடி அவர்[illegible]ளைக் காத்தல் பொருட்டு, அத்தீயவினைகள் வளர்தற்கு ஏதுவான கொடிய [5]ஆணவமலம் வாழுதற்கு ஏதுவான பிறப்புக்களை உண்டாக்கும் அவர்களுடைய அத் தீயவினை*

களை அழித்து, அவர்களை நின் திருவடிக்கண் சேர்த்துப் பாதுகாக்க வல்லவனே! [6]செறிந்த இருள் காலத்தில் பலகாலும் கூத்தினை ஆடும் தலைவோனே! [7]தில்லைத்திருப்பதியின்கண்ணே திருச்சிற்றம்பலத்தே ஆநந்தக்கூத்து ஆடுபவனே! தமிழ்மொழி வழங்கும் நிலத்திற்கு எல்லையாக உடைய தெற்குத் திக்கில் உள்ள பாண்டி நாட்டை ஆட்சியாக உடையவனே! [8]துன்பத்துக்கு ஏதுவான பிறப்பைத்தரும் என்னுடைய தீய வினைகளைக் கெடுத்து என்னை நின் திருவடிக்கண் சேர்த்துப் பாதுகாப்பாயாக என்க.

குறிப்புரை: அடி 85. ஓ, அசை, என்று என்பதனை, ஐயா என்பதனோடும் கூட்டுக. திரு. மறைமலை அடிகள், ஓ என்பதனை, எடுத்தல் ஓசை வேண்டி, ஒலிக் குறிப்பாகக் கொண்டார் போலும். அவர் கொண்ட பொருள் பொருத்தம் அன்று, என்னை? ஓ, என எடுத்தல் ஓசை இட்டுப் பாடாமல் படுத்தல் ஓசைஇட்டுப் பாடுவாருக்கும் அருளுதலை உடையவன் சிவபெருமான் ஆதலால்.

அடி 86. புகழ்ந்திருந்து, (ஒரு சொல்) புகழ்ந்து. எழுந்திருந்து என்பதுபோலக் கொள்ளுக. பொய் கெட்டு. கெட்டு, கெடுத்து என்பதன்பொருட்டு. பௌத்த சமணங்களாகிய பொய்ந் நெறிகளில் செல்லாமல். மெய்யானார்: மெய், உண்மை. சைவ ஆகம நெறி ஆகிய உண்மை நெறியில் ஒழுகுதலை உடையவர்.

அடி 87. இங்கு, இவ்வுலகு. வினைப்பிறவி: (பிறவி வினை) பிறத்தற்குஏதுவான தீயவினை. சாராமல், பற்றுதபடி. 'சாராமே'' என்ற பாடம், சிறப்பின்மையால் அப்பாடம், 'சாராமல்' எனத் திருத்தப்பட்டது.

அடி 88. கள்ளம்: வஞ்சனை. புலம்: அறிவு. (நுண் மாண் நுழை புலம்-குறள்-407.) கள்ளப்புலம் என்பதனைப், புலம் கள்ளம் என மாற்றுக. நல்ல அறிவை வஞ்சித்து அதற்கு அறியாமை என்னும் பெயரைத் தருதலால், (புலம் கள்ளம், புலத்தை வஞ்சிப்பது என்னும் பொருட்டால்) புலக்களளம் என்பது ஆணவ மலத்துக்கு ஆகுபெயர். அக் கள்ளப்புலம என்பதனை 'வஞ்சிப்பது புலத்தை' என்னும் பொருட்டாலும் ஆகுபெயா என்னல் ஆம். குரம்பை: (ஆகுபெயர்) பிறத்தற்கு ஏதுவான தீயவினை. கட்டு: (கடி என்னும் உரிச்சொல் திரிபு) கொடிய.

அடி 91. அறப்பாய்: (முன்னிலை ஏவல் வினைமுற்று) அறப்பாய் ஆக. என: அகரம், ஆறன் உருபு அது, இவண் ஒருமைசுட்டி நின்றது. என: என்னுடைய. 'என அல்லல் பிறவி அறப்பாய்' எனக்கூட்டுக. என், ஈற்று அசை.

''அல்லல் அடியார்க்கு அறப்பாய் போலும்'' (அப் சாய்க்.)

தாழ்ந்தார், தம் தலைவர் மாட்டுத் தம் குறையைக் கூறிக் கொள்ளுங்கால் முன்னர்த் தம் தலைவர்க்கு வாழ்த்துக் கூறிப் பின்னர் அவர்க்கு வெற்றித்திறம் விளம்பி அதன் பின்னர்த் தம் குறையைக்கூறிக்கொண்ட முந்தையோர் முறைமைப்படியே அடிகளும்யாவருக்கும்தலைவராகியஇறையவரிடம் தம்குறையைக்கூறித் தமக்குப் பாதுகாப்புவேண்டுங்கால், முதல்அடிதொட்டு ஐந்தாவது அடிவரை 'வாழ்க, வாழ்க' எனச் சிவபெருமானுக்கு வாழ்த்தலும், ஆறாவது அடிதொட்டு பதினோராவது அடிவரை 'வெல்க வெல்க' என அப் பெருமானுக்கு வெற்றித் திறம் விளம்பலும், தம் குறையைக்கூறிக்கொள்ளுவான் பன்னிரண்டாவது அடிதொட்டு பதினாறாவது அடிவரைப் "போற்றி போற்றி" எனத் தமக்குப் பாதுகாப்பு வேண்டலும் கூறுநிற்க; அக் காலத்தில் அவர் தம் மனத்தின்கண் எழுந்த எண்ணங்கள், பதினேழாவது அடி தொட்டு இருபதாவது அடிவரைக் கூறப்பட்ட கூற்றுக்கள் எனக் கொள்ளுக. அந் நான்கு அடிகளின் கூற்றுக்கள் வெள்ளிடை விளம்பல் அன்று. அவை, உட்கோள்.

வினை முடிபு: (அடி 21) கண்ணுதலான்! (24) நின்பெரும் சீர் (25) புகழும் ஆறு ஒன்று அறியேன்(31) எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன். (ஆதலால் மேலும்) (84) உடம்பின் உள் கிடப்ப (85) ஆற்றேன் (ஆதலால்) (91) என அல்லல் பிறவி அறுப்பாய் என்க.

கருத்துரை: (அடி 21) கண்ணை நெற்றியில் உடைய சுவாமி! (24) நின் பெருமை பொருந்திய புகழினைப் (25)புகழ்ந்து சொல்லும் வழியைச் சிறிதும் அறியாதவன் ஆகிய யான், (30) இயங்காத் திணை இயங்கு திணை ஆகிய இரு திணைகளையும் சார்ந்த எழுவகைப் பட்ட (31) எல்லாப்பிறப்புக்களிலும் பிறந்துபிறந்து வருந்தினேன் (84) (மேலும்) வேற்று விகார விடக்கு உடம்பின் கண் பிறந்து வருந்த (85) ஆற்றேன் ஆதலால் (91) என் உடைய (துன்பத்துக்கு ஏதுவான பிறப்பை உண்டாக்கும்) தீய வினையை அழிப்பாயாக என்பது. துன்பத்துக்கு ஏதுவாகிய பிறத்தலின் நின்றும் நீக்கி என்னைப் பாதுகாத்தல் வேண்டுமெ என்பது குறிப்பு எச்சம்.

இவ்வளவே திருவாதவூர் அடிகள் அருளிய செந்தமிழ்த் திருமறை ஆகிய திருவாசகத்துள் "சிவபுராணம்" என்னும் பா, இப்பா, அகவல் பா, இப்பாவின் ஈற்றில்உள்ள "சொல்லற்கரியானை .........பணிந்து" என்ற நான்கு அடிகளும், ஒரு தனி வெண்பா. அப்பா, நூல் சிறப்புக் கூறப்பட்ட, தனியன்-பல சுருதி. அது, திருவாதவூர் அடிகளால் பாடப்பட்டது அன்று. அது, பிறர் ஒருவராலே பாடப்பட்டது. அவ்வெண்பாவைப்பத்துப் பாட்டில்ஒவ்வொரு

பாட்டின் ஈற்றில் உள்ள தற் சிறப்புப்பாயிரம் போலவும், பதிற்றுப் பத்தில் ஒவ்வொரு பத்தின் ஈற்றில் உள்ள பதிகம் போலவும், சிறப்புப்பாயிரம் எனக் கொள்க. அன்றித், திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய பதிகங்களின் ஈற்றில் பிறரால் பாடப்பட்டுச் சேர்க்கப் பட்டுள்ள தனியங்களாகிய பலசுருதிப்பாக்கள் போலக்கொள்ளுக.

திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய பதிகங்களின் ஈற்றுப் பாக்கள் அவரால் பாடப்படாதன என்றதன் ஏது என்னை? சுவாமிகள் அருளிய பதிகங்களின் ஈற்றுப்பாக்களில் சுவாமிகள் பெயர் படர்க்கை இடத்தில் வைத்துப் பாடப்பட்டு இருத்தலே ஏதுவாகும். என்னை? முன்னிலைஇடத்துப் பொருளைப் படர்க்கை இடத்தில் வைத்துப் பாடுதல் வழக்கு. அப்பொருளை, வழுவமைதியாகக்கொண்டு முன்னிலைப் படர்க்கைப் பொருள் எனத் தொல் ஆசிரியர்கள் இலக்கணம் கூறினார்கள். அன்றித், தன்மை இடத்துப் பொருளைப் படர்க்கை இடத்து வைத்துப் பாடப்பட்டு அப் பொருளைத் தன்மைப் படர்க்கைப் பொருள் எனத் தொல் ஆசிரியர்கள் இலக்கணம் கூறவில்லை ஆதலால். அவர்தம் பதிகங்களில் ஈற்றுப்பாக்களில் சுவாமிகள் பெயர், படர்க்கை இடத்தில் வைத்துப் பாடப்பட்டு இருத்தல் அன்றி, அவ்வீற்றுப்பாக்களின் ஆசிரியர் கூற்று, (ஈரிடத்து) உளப்பாட்டுத் தன்மைப் பன்மையாக நிற்றலாலும், அப்பாக்களில் சுவாமிகளின் புகழ்ச்சி மிக்கு இருத்தலாலும் அவ்வீற்றுப்பாக்கள் அவரால் பாடப்பட்டன அல்ல எனலாம். மற்றும், அவரால் பாடப்பட்டன அல்ல என்பதற்கு ஆம் ஏனைய குறிப்புகளை மேல் வரும் ஏதுக்களால் அறிக.

'நற்றமிழ் ஞான சம்பந்தன் பாடல் பத்தும்பாட
நம் பாவம் பறையுமே' (குற்றா)

'நங்கள்தம் வினைகெட மொழிய வல்ல
ஞான சம்பந்தன் மொழி மாலை' (திருவாய்)

என்பவற்றுள் சுவாமிகள் பெயர், படர்க்கை இடத்தில் நிற்றலையும், கவிக்கூற்று; நம், நாங்கள் என்பன உளப்பாட்டுத் தன்மைப் பன்மைப் பொருள் சுட்டுதலையும் அறிக,

'அணி காழி நாடு நகர்க்கு இறை ஞான சம்பந்தன்' (மாந்துறை)
'செழுமறை நிறை நாவன் ஞான சம்பந்தன்' (கருக்குடி)
'நல்ல கேள்வித் தமிழ் ஞான சம்பந்தன்' (நாகைக்கா)
'நன்றான புகழால் மிகு ஞான சம்பந்தன்' (வான்மியூர்)
'கைதவம் இல்லாக் கவுணியன் ஞான சம்பந்தன்' (புகலி)

என்பவற்றுள்; இறை, நாவன், கேள்வி, நன்றானபுகழால், கைதவம் இல்லா, என்ற சிறப்புக்கள் தற் புகழ்ச்சி ஆதலை அறிக.

'கருக்குடிமைந்தன் தன் ஒளியான ஞானசம்பந்தன்' (கருக்குடி)

என்ற தொடரில் 'மைந்தன் தன் ஒளியான' என்ற குறிப்பில் 'ஒளி ஆன' என்பது இறந்த காலத்தைச் சுட்டித் திருஞான சம்பந்தர் நீப்பிழம்பில் சேர்ந்த செயலைத் தெரிவிக்கின்றது. அதனால், அப் பாட்டுச் சுவாமிகளின் பிற் காலத்தினரால் பாடப் பட்டது என்பதனையும் அறிக.

இவ்வேதுக்களினால் திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய திருப்பதிகங்களின் ஈற்றில் உள்ள பாக்கள் அவரால் பாடப்பட்டன அல்ல எனவும், அவை பிறர் ஒருவரால் பாடப்பட்ட "தனியன்கள்—பலசுருதிப்" பாக்கள் எனவும் கொள்ளுதலே உண்மைக் கொள்கை யாகும் என்பது என் நம்பிக்கை.

இப்பா, 'என் எனும் ஈற்றுடு முடிந்த நிலை மண்டில ஆசிரி யப்பா' என்க. 'கலிவெண்பா' அன்று. என்னை? பண்டைய ஆசிரியர்களால் எழுதப்பட்ட புராணங்களுள், இப்பா, 'அகவல்பா' எனவே பாராட்டப்பட்டு இருத்தலால். ஏனைய நெடும்பாக்கள் கீர்த்தித் திரு அகவல், போற்றித் திரு அகவல் எனப் பண்டே பெயர் கூறப்பட்டு இருத்தல் போல, இப்பா, 'சிவபுராணத் திரு அகவல்' எனப் பண்டைய ஆசிரியர்களால் பெயர் கூறப்படாமை யாலும், மிக முற்பட்டதான திருவாலவாய்த் திரு விளையாடல் புராணத்துள் 'சிவபுராணம்' என்ற அளவில் பெயர் கூறப்பட்டு இருத்தலாலும், இப்பா, 'கலிவெண்பா' எனப் பெயர் சொல்லப் படுதற்கு உரித்தாம் அன்றோ? அன்று. என்னை? 'திரு அண்டப் பகுதி' என்னும் நெடும்பாட்டு, ஐயம் அற, 'அ க வ ற் பா வா க' இருந்தும், அது பண்டே 'திரு அண்டத் திரு அகவல்' எனப் பெயர் கூறப்படாமையால் அதனைக் 'க லி வெ ண் பா' எனல் பொருத்தம் ஆகுமா? ஆகாது. அதுபோலச் 'சிவபுராணத் திரு அகவல்' என்று ப ண் டே பெ ய ர் கூறப்படாத ஏதுவைக் கொண்டு-கலி வெண்பா எனல் பொருந்தம் ஆகாது. 'சிவபுராணத் திரு அகவல்' என்று பெயர் கூறப்படாமையின் ஏது, சுருங்கச் சொல்லல் பொருட்டுப் போலும்.

திருவாதவூர் அடிகள் புராணத்துள்ளும், பழைய திருப்பெருந் துறைப் புராணத்துள்ளும் இச்சிவபுராணபா 'அகவற்பா' என்றே பெயர் கூறப்பட்டுள்ளது: அந்த இரு புராண ஆசிரியர்களும் யாப்பு இலக்கணம் அறியாமையால் அவர்கள் 'கலி வெண்பாவை' 'அகவல்பா' என மயங்கிப் பாடினார்கள் என்றுசொல்லுதல் நேர்மை அன்று. என்னை? அவ்விரு புராண ஆசிரியர்களின் காலங்களில் 'சொல்லற் கரியானை........பணிந்து' என்ற நான்கு அடிகளால் ஆகிய (தனியன்-பல சுருதி) வெண்பாவைச் 'சிவபுராண அகவல்,

பாவின்' ஈற்றில் கூட்டி ஒரு பாவாகக் கொள்ளாமையால் அவ் வெண்பாவின் ஈற்றுச்சீருக்கு ஏற்ப அந்த அகவற்பா, கலி வெண்பா என்று சொல்லப்படாமல் அகவற்பா என்றே வழங்கப்பட்டது போலும். அவ்விரு புராணகாரர்தம் காலங்களின் பின்னரே தான், 'சொல்லற் கரியானை..........பணிந்து' என்ற நான்கு அடிகளும், (தனியன்-பலசுருதி ஆகிய) தனிவெண்பா என்பதனை மறந்தார் எவரோ ஒருவர் அவ் வெண்பாவை அகவற்பாவின் ஈற்றில் கூட்டி ஒரு பாவாகக்கொண்டு, கூட்டப்பட்ட அந்த வெண் பாவின் ஈற்றுச்சீருக்கு ஏற்ப அவ்வகற்பாவைக் கலிவெண்பா எனக் கொண்டார் என்க. திருவாலவாய் உடையார் திருவிளையாடல் புராண ஆசிரியர் சிவபுராணத் திரு அகவல் என்னுமல் அப்பாவினை 'நமச்சிவாய வாழ்க' என்ற முதற் குறிப்பால் சுட்டிச்சொல்லியது வண்ணத்தின் பொருட்டும் சுருங்கச்சொல்லல் பொருட்டும் ஆம். ஆதலால், அவர், இப்பாவைச் 'சிவபுராணத் திருஅகவல்' என்னுமையால் 'கலி வெண்பா' எனலாம் எனல் நேர்மை அன்று.

அன்றி, மஹா வித்துவான்கள் திருத்தணிகை-சரவணப் பெருமாள் ஐயர், விசாகப் பெருமாள் ஐயர் காலத்தில் அவர்கள் முன்னிலையில் பரிசோதிக்கப்பட்டுப் பதிப்பிக்கப்பட்ட புத்தகத்தில் அப்பாவின் ஈற்றில் 'இந்த முதற் செய்யுளுக்குப் பெயர் பல பிரதி களிற் சிவபுராணத் தகவல் என்றெழுதப்பட் டிருக்கின்றது. அன்றித் திருவாதவூர் புராணத்திலும் அகவல் என்று சொல்லப் பட்டிருக்கின்றது' என்ற குறிப்புக்கள் உள்ளன. அக்குறிப்புக்கள் கருத்தில் இருத்தற்பாலன.

''சொல்லற்கரியானை'' என்ற வெண்பாவை அகவற்பாவோடு கூட்டி ஒரு பாவாக்கிக் கலி வெண்பா என்றவர், அவ்வகவற்பாவின் இடை அடிகளிலும் ஈற்றுஅடியிலும் இடைச்சீர்களிலும் குறைத் தலும், கூட்டலும், செய்திருத்தல் கூடும். இன்று அவற்றை முற் றாகக் கண்டு உணர்தல் இயலாத வொரு செயல். அப்பாவைக் கலி வெண்பா எனக்கொள்ளின் வினை முடிபு பொருத்தமாக அமை- யாது ஒழிதலை நினைக்க. வினை முடிபுக்குப் பொருத்தம் ஆகாதபடி ஒரு பாவை ஒரு ஆசிரியர் பாடினார் எனல் நேர்மை அன்று.

அப்பாவைக் 'கலி வெண்பா' எனக்கொண்ட குற்றத்தினால் தான் திரு. மறைமலை அடிகள் வினை முடிபு காட்ட முயன்றும், முடியாமல் (பொருத்தம் அற்ற) தம் மனத்தின் முடிபை எழுதி வைத்தார் என்பதனை அறிக.

அன்றித், திருவாசகத்துள் ஏனைய நெடும்பாக்களின் ஈற்றுக் களிலும், பதிகங்களின் ஈற்றுக்களிலும் அவ்வப்பாக்களை, அவ்வப் பதிகங்களைச் சிறப்பித்துச் சொல்லாத அடிகள், இவ்வொருபாவை மட்டும் சிறப்பித்துச் சொல்லினர்எனல் பொருத்தம் அன்று.

இவ்வேதுக்களால் "சிவபுராணம்" என்ற இப்பா, என் எனும் ஈறுடு முடிந்த 'அகவல்பா' எனவும், 'சொல்லற் கரியானை......... பணிந்து' என்ற நான்கு அடிகளும் (தனியன்-பலசுருதி) தனி வெண்பா எனவும் கொள்ளுதலே பொருத்தம் ஆகும்.

(தனியன் - பலசுருதி)

சொல்லற்கு அரியானைச் 'சொல்லின்' திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து—சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவன் அடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

பொழிப்புரை: புகழ்ந்து சொல்லுதற்கு அரிய பெருமையினை உடையவன் ஆகிய சிவபெருமானை ஒருவர் புகழ்ந்து சொல்ல விரும்பின், அவர் அச் சிவபெருமானுடைய திரு அடிக்கண் தம் மனத்தினை வைத்துத் திருவாதவூர் அடிகள் 'நமச்சிவாய வாழ்க' என்று பாடிய பாட்டின் பொருளை (தாம் துதிப்பதற்கு எடுத்துக் கொண்ட நிறைமொழி மாந்தர் தம் மறை மொழியின் பொருளை) உணர்ந்து அப் பாட்டினைப் (அம் மறை மொழியைப்) படிப்பர் ஆயின், சிவபுரத்தின் உள்ளார் பலரும் தம்மை எதிர்கொண்டு பணிந்து ஏத்தா நிற்கத் தாம் சென்று அச்சிவபெருமானின் திரு அடிகளை அடைகுவர் என்க.

குறிப்புரை: அடி 1-ல் 'சொல்லித்' என்றபாடம் பொருள் பொருத்தம் உறவில்லை. ஆதலால் அப்பாடம், பொருள் பொருத்தம் உறச் "சொல்லின்" எனத் திருத்தப்பட்டது. கீழ்:-ஏழனுருபு. அடி 2ல் 'சொல்லிய' என்பது 'சொல்லும்' என்பதன் திரிபு எனலும் ஆம்.

சிவபுரம் சேர்வாரை அச் சிவபுரத்தின் உள்ளார் பணிந்து ஏத்துதலைத், திருச் சேரமான் பெருமாள் நாயனார் தம்மையும், திருச் சுந்தரமூர்த்தி நாயனார் தம்மையும் திருக்கயிலாயத்தில் திரு உபமன்னிய முனிவர் முதலிய பலரும் எதிர்ப் பணிந்து எதிர் கொண்டமையால் அறிக. இவ்வெண்பாவை இச்சிவபுராணப் பாவிற்கே அல்லாமல், பிற நூற்கள்-பிறப்பாக்கள் ஆகிய எவற்றுக்கும் பொதுப்பாயிரம் ஆகவும் கொள்ளல் ஆம்.

"அரிய கற்று ஆசு அற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு."
"குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகை நாடி மிக்க கொளல்."

திருவாதவூர் அடிகள் அருளிய திருவாசகத்துள்
சிவபுராணத் திரு அகவல் பாவிற்கு
வே. மு. ஸ்ரீநிவாச முதலியார் எழுதிய உரை முற்றிற்று.

——(திருச்சிற்றம்பலம்.)——

# திருக்குறளின் ஆசிரியர்தம் மதம் சமணமே.

(வே. மு. ஸ்ரீநிவாச முதலியார் எழுதிய கட்டுரை.)

*திருக்குறள் என்னும் நூலின் உள்ளே பல இடங்களில் சமண சமயத்தின் சார்பான நுண் பொருள்கள் (தத்துவக் கருத்துக்கள்) செறிந்து கிடத்தல் அன்றி 'மலர் மிசை ஏகினான் மாண் அடி சேர்ந்தார், நில மிசை நீடுவாழ்வார்' என்ற குறட்பா, கடவுள் வாழ்த்தின் உள்ளே நிற்கின்றது. அப்பாவின் பொருள், பொதுவகையாலும் எம் மதத்தினர் பாலும் சாராமல், சிறப்பு வகையால் சமண சமய கடவுள் ஆகிய ஸ்ரீ அருக தீர்த்தகரின் பெருமையையே சுட்டி நின்றது ஆதலால்.*

*நிகண்டுகளில் பூமிசை நடந்தான் என்ற பெயர் ஸ்ரீ புத்த பகவானுக்கும் சொல்லப்பட்டு உளதால் அப்பெயரைச் சமண சமய கடவுள் ஆகிய ஸ்ரீ அருக தீர்த்தகரருக்கே சிறப்பாகச் சொல்லப்பட்டது எனல் பொருத்தம் ஆமோ? ஆம். என்னை? ஸ்ரீ அருக தீர்த்தகரர் ஆவார் வீற்று இருப்பதற்குச் (சமண சமயத்தவரால் சொல்லப்படும்) சௌதரும இந்திராதி தேவர்கள் என்பார் பூமியின் நின்றும் இருபது ஆயிரம் படிகளை உடையதாய், ஐந்து ஆயிரம் வில் அளவு உயரத்தின்மேல், (ஆகாயத்தில்) பன்னிரண்டு யோசனை எல்லை அளவு அகலம் உடையதாய்ப், பொன்னால் ஆகிய மூன்று மதில்களுடன், சமவசரணம் என்னும் விமானத்தினை (கோயிலை) அமைப்பர் எனவும், அந்த விமானத்தின் நடுவில் அந் தேவர்களால் அமைக்கப்பட்ட அசோக மரத்தின் நிழலில் அரி அணையின்மீது முக்குடை முதலிய பலவகைச் சிறப்புக்களுடன் ஸ்ரீ அருக தீர்த்தகரர் வீற்று இருப்பர் எனவும், அத்தீர்த்தகரர் ஸ்ரீ விகாரம் (உலாப்) போகுங்கால் அவருடன் செல்லும்படி அவருடைய திரு அடிகளின் நின்றும் கீழே நான்கு அங்குலம் அளவு தாழ்வில் ஆயிரத்து எட்டு இதழ்களை உடையதும், ஒரு யோசனை எல்லை அளவு அகலம் உடையதும், பொன் வண்ணம் ஆயதும் ஆகிய பெரிய தாமரை மலர் ஒன்றனை அச் சௌதரும இந்திராதி தேவர்களே அமைப்பர் எனவும், அம்மலரின்மீது தம் திருவடிகள் படாதபடி ஸ்ரீ தீர்த்தகரர் நடப்பர் எனவும், (அவர் நடக்குங்கால் கால்களைப் பெயர்த்துப் பெயர்த்து வையாமல் காற்றால் செலுத்தப்படும் பொருள் போதல் போலப் போவர் எனவும்,) அவர் நடக்குங்கால் அவர்தம் திருஅடிக்கீழ் இருக்கும் அத்தாமரைமலரும் நகர்ந்துகொண்டே இருக்கும் எனவும் கூறுவது, சமண சமயத்தவர் புராணம். அவர்தம் புராணத்தில் கூறப்பட்ட வரலாற்றினைச் சுட்டியே ஸ்ரீ அருகதீர்த்தகரருக்கு மலர்மிசை ஏகினான், பூமிசை*

நடந்தான், கமல ஊர்தி முதலிய பெயர்கள் உண்டாயின என்பது சமண் சமயத்தவர்கருத்து. பூ: மலர். கமலம்: (ஆகுபெயர்) மலர்.

ஸ்ரீ புத்தபகவான், பெரும் செல்வத்தினை உடைய அரசர் குடியில் பிறந்து இராஜ்ய பட்டத்துக்கு உரியராய் வளர்ந்து வரும் நாட்களில் துக்கம், துக்க உற்பத்தி, துக்க நிவாரணம் முதலியவற்றை ஆய்ந்து அறிவான், இராஜ்ய பட்டத்தைத் துறந்து ஊர்தி இன்றிப் பல நாட்கள் தரையில் நடந்தே சென்றனர் என்பதும், அவர், தம்மால் அறியப்பட்ட துக்க நிவாரணத்தின் ஏதுவை, அதனை அறிய மாட்டாத எளியர் ஆவார் யாவருக்கும் எடுத்து உரைத்து, யாவரையும் துக்கத்தின் நின்றும் விடுவித்து அவர்கட்கு இன்பத்தினைச் சாருவித்தல் பொருட்டுப் பல இடங்களுக்கும் நடந்தே சென்றார் என்பதும் ஸ்ரீபுத்தபகவானது புராண வரலாறு.

அப்புராண வரலாற்றினைச் சுட்டியே ஸ்ரீ புத்தபகவானுக்குப் பூமிசை (பூமி மிசை) நடந்தான், தரை மிசை நடந்தான் என்ற பெயர்கள் உண்டாயின என்பது பௌத்தசமயத்தவர் கருத்து. பூ: (வடமொழி) பூமி, தரை.

இவ் வேதுக்களினால் அவ் விரு சமயத்தவர்தம் புராணங்களுள் கூறப்பட்ட வரலாறுகளின்படி வேறு வேறு ஏதுவினால் வேறு வேறு பொருளின் அடியாகப் பிறந்த இரு பெயர்கள், சொல் அளவில் ஒரு பெயர்போலப் "பூமிசை நடந்தான்" என நின்றன என்பது யாவருடைய நினைவிலும் இருத்தற்பாலது. நிற்க,

சமண் சமயத்தவர், தம் கடவுள் ஆகிய ஸ்ரீ அருக தீர்த்தகாருக்கு 'மலர்மிசை ஏகினான்' என்ற பெயரின் கருத்தை ஒட்டிப் 'பூவின்மிசை நடந்தான்' 'கமலஊர்தி' என உறழ்ச்சிப் பெயர்கள் வழங்கினாற் போலப் பௌத்த சமயத்தவர், தம் கடவுள் ஆகிய ஸ்ரீ புத்தபகவானுக்குப் பூமிசை (பூமிமிசை) நடந்தான்' என்றபெயரின் கருத்தை ஒட்டித் 'தரைமிசை நடந்தான்' என உறழ்ச்சிப் பெயர் வழங்கி இருத்தலும், 'மலர்மிசை நடந்தான்' என உறழ்ச்சிப்பெயர் வழங்கா திருத்தலும் நினைவில் இருத்தற்பாலவாம். நிற்க,

இருக்காதி வேத, உபநிடத, ஆகமங்களை ஒப்புக்கொண்ட மதத்தவர்களுள், விடை ஊர்தி, பிறை சூடி, கொன்றை சூடி, மேருவில்லி, காரி உண்டி, ஆல் அமர் கடவுள், கபாலம் ஏந்தி, மழு ஏந்தி, அரவு ஆபரணன் என்ற பெயர்களைச் சைவசமயத்தவர்கள், தம் கடவுள் ஆகிய ஸ்ரீசிவபெருமானுக்கே சிறப்புப்பெயர்களாக வழங்குதல் போலவும்; அரவு அணையான், புள்ஊர்தி, ஆலிலை அமர்ந்தோன், உலகளந்தோன், பத்மநாபன், ஆழிஏந்தி, சாரங்கபாணி, என்ற பெயர்களை வைணவ சமயத்தவர்கள், தம் கடவுள் ஆகிய திருமாலுக்கே சிறப்புப் பெயர்களாக வழங்குதல் போலவும்

மலர்மிசை நடந்தான் (பூவின்மீது நடந்தான்) என்ற பெயரைச் சமண் சமயத்தவரும் தம் கடவுள் ஆகிய ஸ்ரீ அருக தீர்த்தகாருக்குச் சிறப்புப் பெயராக வழங்குகின்றார்கள் எனக்கொள்க.

சமண் சமயத்தவர் அன்றிப் பிற எம்மதத்தினரேனும் தம் கடவுளுக்கு 'மலர்மிசை ஏகினான்' (பூவின்மீது நடந்தான்) என்பதனை ஒரு பெயராக வழங்கிய வழக்கு உண்டோ? இல்லை. சமண் சமயத்தவர் அல்லாதாருள் ஒருமதத்தவரும் தம்கடவுளுக்கு 'மலர்மிசை ஏகினான்'(பூவின்மிசை நடந்தான்-கமலவூர்தி)என்றபெயரை வழங்கிய வழக்கு எந்நூலகத்தும் இல்லை. என்னை? சமண் சமயத்தவர் அல்லாத பிற சமயத்தவர் எவருக்கும் அப்பெயருக்கு ஆம் ஏதுவை உடைய புராண வரலாறு ஒன்று இன்மையால். நிற்க,

'எரியாய தாமரைமேல் இயங்கினாரும் இடை மருது மேவிய ஈசனாரே' (அப்பர்) என்றார் ஆதலால், எரியாய தாமரைமேல் இயங்கினார் என்பது தாமரைமேல் நடந்தார் எனச் சிவபிரானாருக்குப் பெயர் ஆயிற்று அன்றோ? அன்று. என்னை? அப் பெயரைச் சுட்டிய வரலாறு ஒன்று சைவபுராணங்களுள் சிவபிரானுக்கு இல்லை ஆதலால். மற்று என்னை? அத் தொடரை உடைய அப்பாவில் விதந்து கூறப்பட்ட பொருள்கள் யாவும், சமண்சமய சார்பான பொருள்கள் (தத்துவங்கள்) ஆதலால், 'தாமரைமேல் இயங்கினார்' என்ற அப்பெயர், சமண் சமய கடவுள் ஆகிய அருகதீர்த்தகாரையே சுட்டிய படியாம். அத்தொடரின் பொருள்: அப்பாவில் கூறப்பட்ட 'அஞ்சோடஞ்சு, பத்தோடொன்று, நான்கு, ஆறே' என்ற தொகைப் பொருள்களையும், 'குணம் அஞ்சு, சயிதை அஞ்சு, பதம் அஞ்சு, கதி அஞ்சு' என்ற வகைப் பொருள்களையும் சமண் சமயத்தவருக்கு அருளிய சமணர்தம் இறையவராகிய அருகதீர்த்தகரர் ஆகவும், சிவபிரானார் விளங்குகின்றார் என்பது. சிவபிரானார் 'யாவையுமாய் அல்லையுமாய்' இருக்கின்றார் என்றதன் இலக்கணையால், அவர்சமணர் தம் கடவுள் ஆகிய 'தாமரைப் பூவின்மீது நடந்த' அருக தீர்த்தகாராகவும் விளங்குகிறார் என்று இயம்பினார் எனக் கொள்ளுக.

ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களுக்கும் தலைவர்களாகிய மூவருவர் ஆகவும் இருப்பவர் சிவபிரானாரே என்ற புராண வரலாற்றுப்படி, அம்மூவருவில் ஒருவனாகிய அயன் தாமரைப்பூவின்மீது இருப்பவன் ஆதலால், அவன் அடியாக அப் பெயரை ஆகுபெயராகக் கொண்டு, எரியாய தாமரைமேல் இயங்கினார் சிவபிரானார் எனக் கொள்ளுதல் ஆகாதோ? ஆகாது. என்னை? அயன் வீற்றிப்பது வெண்தாமரை. அப்பாவில் சுட்டிய தாமரை 'எரியாய' என்ற அடை மொழியால் பொன்தாமரை ஆயிற்று ஆத

லாலும், அயன் தாமரைப்பூவின்மேல் இருப்பவன் அல்லாமல், அப்பூவின்மேல் இயங்குபவன்-நடப்பவன் அல்லன் ஆதலாலும், அப் பெயர், அயனைச் சுட்டாது ஆதலால். மற்றும், இயங்குதல் என்பது நடத்தல் என்பதன் உறழ்ச்சிப் பெயர். அது இருத்தல் என்பதன் உறழ்ச்சிப் பெயர் அன்று என்பதனை எண்ணுக.

சமண்சமயத்தவர்களால் அவர் தம் மதசார்பாக எழுதப்பட்ட பாகத, பைசாச, வடமொழிகளால் ஆய நூற்கள் பலவற்றுள்ளும், அவர் தம் கடவுள்ஆகிய அருகதீர்த்தகரரை 'மலர்மீது நடந்தவர்' எனப் புகழ்ந்திருத்தல் அல்லாமல், தமிழ் மொழியால் ஆய நூற்கள் பலவற்றுள்ளும் அத்தீர்த்தகரரை 'மலர்மீது நடந்தவர்' எனப் புகழ்ந்துஇருக்கிறார்கள். அப்படி புகழ்ந்துகூறப்பட்ட தமிழ் மொழியால் ஆய நூற்களுள் உள்ள குறிப்புக்களில் சில மேல்வருமாறு:

'கஞ்சப் பொகுட்டின்மீதே ஒதுங்கும்
நான்முகக் கடவுள் பாதம் நாவினால் நவிற்றி' (சூ-நிக-2, 1.)

'வெறிகமழ் தாமரை மீமிசை ஒதுங்கிய
அறிவனை வணங்கி' (யாப்-கலம்-கட)

'தாமரைப்பூவின்மேல் சென்றான் புகழ் அடியை' (அற-கட)
'தாமரையின் சென்னிமிசை நடந்த சேவடியை' (ஜீவ-187.)
'பூவின்மேல் வந்து அருளும் புங்கவன்' (நேமிநா-கட)
'பனிமாமலர் மிசை வரும் மாலே' (திருக்கல—10)
'தாமரைமேல் நடந்து ஏகிய நற்றவனே' (திருநூற்று-45.)
'தாமரைமேல் நடந்தான் தடந்தாள் வணங்கி' (நீலகேசி-3)
'கமல மீது உலவும் உனைக் காதலிப்பார் அரியரே' (மேரு-56.)
'பூமிசை ஒதுங்கிய சேதியம் செல்வ' (சூளா-இரத-96.)
'விரிபூந்தாமரை மேல் சென்ற திருவார் அடி' (சீவக-2814.)
'மலர்மிசைநடந்த மலர்அடிஅல்லது என்தலை' (சில-நா-20)

'மலர் மிசை ஏகினான் மாண் அடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ்வார்' (திருக்கு-5.)

சமண் சமயத்தவர்தம் பல (13) நூற்களின்நின்றும் இவண் காட்டப்பட்ட நூல்வழக்குப் போலச் சமண் சமயத்தவர் அல்லாத பிற சமயத்தவர் எவரும் தம் கடவுளைத் தாமரைமீது அல்லது மலர் மீது நடந்தவர் எனப் பெயர் வழங்கித் தம்நூற்களுள் ஒன்றினும் ஓர் இடத்தும் குறித்திலர் ஆதலால், 'மலர் மிசை ஏகினான்' என்ற பெயர், சமண் சமயத்தவர் கடவுள் ஆகிய ஸ்ரீ அருக தீர்த்தகரர் ஆவாருக்கே உரியது ஆகும். அம் 'மலர் மிசை ஏகினான்' என்ற பெயர், திருக்குறள் உள்ளே கடவுள் வாழ்த்தில் அருகக்கடவுளைச் சுட்டி நிற்றலால், அத்திருக்குறள்ஆகிய நூலை ஆக்கிய ஆசிரியர், சமண் சமயத்தவர் ஆவர் என்பதில் ஐயம் தோன்றுதற்கு ஏதுவே இல்லை. நிற்க,

அப்படி இருந்தும் உண்மையை ஒப்புக்கொள்ள மனம் இல்லாத பெரிய புராணச் சைவர்களுள் சிலர், திருக்குறள் என்ற நூல் தம்முடைய சைவ சமய சார்பானது என்றும், அதன் ஆசிரியர் சைவ சமயத்தவர் என்றும் சொல்லுகிறார்கள். அவர்களால் சொல்லப்படும் சொற்கள் உண்மையினை உணர்ந்தாரால் ஓரம் இன்றி உரைக்கப்படும் உண்மை சிறந்த உரைகளோடு ஒப்பு உடையன அல்ல என ஒழிக்க. என்னை? சமண சமயத்தவர், தம் நூற்களுள், அவர் தம் கடவுள் ஆகிய ஸ்ரீ அருக தீர்த்தகரரை 'மலர் மிசை ஏகினார்' (மலர் மீது நடந்தார்) என எழுதப்பட்ட குறிப்புக்கள் பல (13) நூற்களின் நின்றும் முன்னர் எடுத்துக் காட்டப்பட்ட காட்டுக்களைப் போலச் சைவ சமயத்தவர்க்கு உரிய பெரிய புராணத்துள்ளும் பிற புராணங்களின் உள்ளும் அவ்வப்புராண ஆசிரியர்களால் ஸ்ரீ சிவபெருமானார் 'மலர் மிசை ஏகினவர்' (மலர் மீது நடந்தவர்) என எழுதப்படாமையாலும், பெயர் அளவில் தமிழ் மொழியால் ஆய வேதங்கள் எனச் சொல்லப்படும் தேவார திருவாசகங்கள் ஆகிய திரு முறைகள் உள்ளும் ஏனைய திருமுறைகள் உள்ளும் அவ்வத் திருமுறைகளின் ஆசிரியர்களுள் ஒருவரும் ஸ்ரீ சிவபிரானை 'மலர் மிசை ஏகினான்' (மலர்மீது நடந்தான்) என எழுதாமையாலும், ஸ்ரீ சிவபெருமானை 'மலர் மிசை ஏகினவன்' (மலர் மீது நடந்தவன்) எனச் சொல்லுதற்கு உரிய புராண வரலாறு ஒன்று சைவ சமயத்தவர் தம் தமிழ் மொழியால் ஆய நூற்களுள் ஒன்றன் உள்ளும் இல்லாமல் ஒழிந்ததன்றி, ஆரியர்தம் வடமொழியால் ஆய இருக்காதி வேதங்கள் உள்ளும், உபநிடதங்கள் உள்ளும், ஆகமங்கள் உள்ளும், புராணங்கள் உள்ளும் ஓரிடத்தும் இல்லாமையாலும் ஆம். நிற்க,

திவாகரம், பிங்கலம், சூடாமணி முதலிய பண்டைய நிகண்டுகள் உள்ளும் (பல) பிற்கால நிகண்டுகள் உள்ளும் ஸ்ரீ சிவ பெருமானுக்கு 'மலர் மிசை ஏகினான்' (மலர் மீது நடந்தான்) என்ற பெயர் இல்லாமையாலும், சைவர் தம் இறையவர் ஆகிய ஸ்ரீ சிவபெருமானார் 'மலர் மீது நடந்தவர்' என்ற பெயருக்கு உரியர் அல்லர். அல்லர் ஆகவே 'மலர் மிசை ஏகினான் மாண் அடி சேர்ந்தார் நிலமிசைநீடு வாழ்வார்' என்ற திருக்குறள் பாவின் பொருள், சைவர் தம் இறையவன் ஆகிய சிவபெருமானை எவ்வகையானும் சுட்டாது (சாராது) எனவும், சமண சமயத்தவர் புராண வரலாற்றின்படி அவர்தம் கடவுள் ஆகிய ஸ்ரீ அருக தீர்த்த-கரரையே சுட்டும் (சாரும்) எனவும் கொள்ளுதலே பொருத்தமும் உண்மையும் ஆகும். நிற்க, இவ் வேதுக்களால் திருக்குறள் என்ற நூலைத் தம் மத சார்பான நூல் என்றும், அதன் ஆசிரியரைத்

தம்மதத்தவர் என்றும் சொல்லிக்கொள்ளும் சைவர் உண்மையினை உணராதவரே ஆவர் எனக் கொள்ளுக.

திருக்குறள் எனும் நூல் சமண் சமயத்தவரதே என்பதற்கு மற்றும் ஒரு சான்று உளது. என்னை? 'நீலகேசி' என்பது தமிழ் மொழியால் ஆய ஒரு நூல். அது, தர்க்கமுறையில் பிறர் மதங்களைத் தாழ்த்திச் சொல்லிச் சமண் சமயத்தின் பெருமையினை உயர்த்திச் சொல்லுதலை உடையது. அந்நூலின் உரை ஆசிரியர், பிற மதத்தர் சிறுமையைச் சுட்டுங்கால் அம் மதத்தர்தம் நூற்களின் நின்றும் எடுத்துக்காட்டாகக்காட்டப்பட்ட இடங்களில் அந்நூற்களை, இது நின் ஒத்து (நூல்) இது நின் ஒத்து என்றும், இது அவன் ஒத்து. இது அவன் ஒத்துஎன்றும் முன்னிலை இடத்தும் படர்க்கை இடத்தும் வைத்துச் சொல்லி உள்ளார். அவ்வுரை ஆசிரியர், தம் மதத்தின் பெருமையினைச் சுட்டுங்கால் தம் மதசார்பான நூற்களின்நின்றும் எடுத்துக் காட்டாகக் காட்டப்பட்ட இடங்களில் அந்நூற்களை இது எம் ஒத்து (நூல்) இது எம் ஒத்து என்று தன்மைஇடத்தில் சார்த்திச்சொல்லி உள்ளார். அவரால்காட்டாகக் காட்டப்பட்ட நூற்கள் உள்ளே சமண்சமய சார்பாயதும் இறந்து பட்டநூற்களுள் ஒன்றாகாததும் இன்று உள்ளதும் ஆகிய மேரு மந்தார்புராணம் எனும் தமிழ்மொழியால் ஆயநூலும் ஒன்றாகும் (நீலகேசி-பக்-152) (வடமொழியால், ஆய தத்துவார்த்த சூத்திரம் என்ற நூலும்ஒன்று உண்டு. நீலகேசி-ப-143) அதனுடன் திருக்குறளின்நின்றும் இரண்டு பாக்கள் காட்டாகக் காட்டப்பட்ட இடங்களில் (நீலகேசி-பக்-124-143.) அப்பாக்களை, இது எம் ஒத்து, இது எம் ஒத்து எனத் தன்மை இடத்துச் சார்த்திச் சொல்லி உள்ளார். அவ்வுரை ஆசிரியர் திருக்குறளின் நின்றும் காட்டாகக் கொண்ட பாக்களைத் தன்மை இடத்துச் சார்த்தி இது எம் ஒத்து, இது எம் ஒத்து, என்று உரிமை பாராட்டிச் சொல்லி இருந்தலாலும், திருக்குறள் ஆகிய நூல் சமண் சமயத்தவரதே என்பதில் ஐயம் தோன்றுதற்கு ஏது இல்லை.

அந் நீலகேசியின் உரை ஆசிரியர், பிற மதத்தர் நூற்களைக் காட்டாகக் கொண்ட இடங்களுள் (இது நின் ஒத்து, இது அவன் ஒத்து, என்ற குறிப்புக்களில் சில மேல் வருமாறு :—

‘குழுவாகித் தடுமாறி ஈறுவிடா உடையான்’

என்பது நின் ஒத்து ஆதலின், (நீல-பக்-246)

(ஜாத்யாயுர்போகா: வஹஜ்ஜுஷ்’ என்பது நின் ஒத்து ஆதலின், (நீ-220)

“கேட்டிற்குக் காரணம் கேட்பேன் யானே என மொழிந்தாள்
கேட்டிற்குத் தோற்றமே கெடுப்பது இங்கில் என்றான்’ இது காரணமின்றிக் கெடுமென்பதற்கு அவன் ஒத்து. (நீல-பக்-178.

[illegible]
[illegible]’ எனவும்

“உருவு யாதெனை மொழிந்தான் பூத முபா தானமும்
திரி வுரைப்பின் நிலம் நீர் தீ வளி பூத முபாக்கள்
தெரி வுரைப்பின் நிறம் நாற்றம் சேறொடு ஊன் வலி நான்கும்
உரிய வாம் பெண் இயல்போடு ஒழிந்தனவும் உள என்றான்.’
“ஒழிவு இலவாய்த் தோற்றுங்கள் ஒழிவு இலவாய்க் கெடும் எட்டும்
ஒழி வார்க்கும் பொருள் ஒன்றே உணர்வு உடைய.........
குழி இவற்றுள் மிக்கதனால் கூற்றுடைய மிகை தானும்
அழி வின்றி உணர்வதும் மற்று ஆற்றலும் மூர்த்தியாமே’ எனவும்,
‘அவன் ஒத்தாலும் ரூபஸ்கந்தம் ஆமாறு அறிக’ (நீல-பக்-204-)
[illegible] ।
[illegible]॥’
‘என்பது பஞ்சவாக்கியம் அன்றோ?’ (நீல-பக். 85)

என்று பிற மதத்தார் நூற்கள் காட்டாகக் காட்டப்பட்ட இடங்களில் அந்நூற்களை இது நின் ஒத்து இது நின் ஒத்து என்றன்னிலை இடத்துச் சார்த்தியும் இது அவன் ஒத்து இது அவன் ஒத்து எனப் படர்க்கை இடத்துச் சார்த்தியும் எழுதியுள்ள முறைமையை நினைக்க. நிற்க,

அந் நீலகேசியின் உரை ஆசிரியர் தம்மத சார்பான நூற்களைக் காட்டாகக்கொண்ட இடங்களுள் (இது எம் ஒத்து, இது எம் ஒத்து என்ற குறிப்புகளில்) சில மேல் வருமாறு:

‘[illegible] என்பது எம் ஒத்து’ (நீல-ப-143)
[illegible]
[illegible]’
‘என்பது எம் ஒத்து ஆதலின்’ (நீல-ப-161.)
[illegible]’ என்பது எம்ஒத்து(நீ-ப.169)

‘கல்வியான் நல்லனே காமாதியால் தீயான்
செல்வத்து உயர்ந்தான் குலத்தினில் தாழ்ந்தானும்
வல்லுவான் ஒன்றுஒன்று வல்லான் இது அன்றே
நில்லாமை நிற்றல் நிலை’
‘ஒரு முகத்தான் நிலையினதே ஒரு முகத்தான்
நிலையாது என்று உரைமாறு இல்லா
இரு முகத்தது ஒரு பொருளின் இயல்பு என்று
மொழிந்தவர்தம் இருக்கை போலாம்’
‘என்ப எம் ஒத்து ஆகலின்’ (நீல-பக்-157.)

'மருவிய வினைகள் மாற்ற மாசினைக் கழுவி வீட்டைத்
தருதலால் புனிதன் ஆக்கும் தன்மையால் புண்ணியம் ஆமே'
(மேருமந்-95) 'என்பது எம் ஒத்து ஆகலின்' (நீல-பக்-117)
'பொய்ம்மையும் வாய்மை இடத்த புரை தீர்ந்த
நன்மை பயக்கும் எனின்' (திருக்கு-292)
'என்பது எம் ஒத்து ஆதலான்' (நீல-பக்-124)
'உற்ற நோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு' (திருக்கு-261)

'என்பது எம் ஒத்து ஆதலான்' (நீல-பக்-143.) என்று தம்மத சார்பான நூற்களைக் காட்டாகக் காட்டிய இடங்களில் அந்நூற்களை இது எம் ஒத்து இது எம் ஒத்து எனத் தன்மை இடத்துச் சார்த்தி உரிமை கொண்டு உரைத்துள்ள முறைமையை நினைக்க. அந் நீல கேசியின் உரை ஆசிரியர் திருக்குறளின் பாக்களைக் காட்டாகக் காட்டிய இடங்களில் அப்பாக்களை இது எம் ஒத்து இது எம் ஒதது என்று உரைத்ததனாலே அத் திருக்குறள் சமண் சமயத்தவர் நூல் எனல் ஏற்புடைத்து ஆமா? ஆம். அதனால்தான் அத் திருக்குறள் சமண் சமயத்தவர் நூல் என்பதற்கு ஏற்புடைத்து. என்னை? சமண் சமயத்தவர் பிறமத கடவுளைப் பிறமத ஆகமங்களைப் பிறமத துறவிகளை வணங்குதல்-விரும்புதல் ஆகாது என்பது அவர்தம் மதநூல் முடிபு. அம்முடி பின்படி அவர்கள் பிறமதத்தர் நூல்களைத் தம்முடையன எனக் கொள்ளார். கொள்ளின் அவர்களை அவிநயம் எனும் குற்றம் சாரும் என்பது அவர்களுடைய நூற்களின் முடிபு. அம்முடி பினை அச்சமணர்தம் நூற்கள் ஆகிய அருங்கலச்செப்பு, அறநெறிச்சாரம், நீலகேசி, மேருமந்தர்புராணம்முதலியவற்றுள் அறிக.

சமண் சமயத்தவர்கள் பிறமதத்தவரைப் பிறமதத்தர் நூற்களைப் பாராட்டிப் பேசார்கள். என்னை? பிற மத நூற்களுள் தம்முடைய அஹிம்சா கொள்கைக்கும் அநேகாந்தவாத கொள்கைக்கும் (சப்தபங்கி நியாயத்துக்கும்) நிர்ச்சிரந்த கொள்கைக்கும் (கோவணமும் பற்று ஆம் எனக் கொண்ட கொள்கைக்கும்) மாறான கொள்கைகள் கிடக்கும் ஆதலால். சமண் சமயத்தவர்கள் நூற்களை எழுத விரும்புவர் ஆயின் தம்மத சார்பான அறநெறி கட்கு உரிய நூற்களையே எழுதுவர். பிறமத சார்பான நூற்களை எழுதார்கள். அவர்கள் தம்மால் எழுதப்படும் நூற்களுள் இடை இடையே பிறரால் ஆக்கப்பட்ட நூற்களின் நின்று சில கருத்துக் களைப் பழஞ்சொல்—ஆசிரியவசனம் எனச் சேர்த்துக்கொள்ள விரும்புவர் ஆயின் தம் மத ஆசிரியர்களால் எழுதப்பட்டனவும், தம மத சார்பு ஆயினவும் ஆகிய நூற்களின் நின்றே பழஞ் சொற்களை—ஆசிரிய வசனங்களை எடுத்து எழுதுவர்.

அவர்கள், நூல்கட்கு உரை எழுத விரும்புவர் ஆயின் தம் மத ஆசிரியர்களால் எழுதப்பட்டனவும், தம் மத சார்பு ஆயினவும் ஆகிய நூல்கட்கே உரை எழுதுவர். அவர்கள் தம்மால் எழுதப்படும் உரை நூற்களுள் இடை இடையே காட்டுக்களைக் காட்டி எழுத விரும்புவர் ஆயினும், தம் மத ஆசிரியர்களால் எழுதப்பட்டனவும், தம் மத சார்பு ஆயினவும் ஆகிய நூற்களின் நின்றே காட்டுக்களைக் காட்டி எழுதுவர். அவர்கள், தாம் கொண்ட காட்டுக்களுக்கு உரிய நூற்களை ஆக்கிய ஆசிரியர்களை அவ்வக் காட்டுக்களின் அயலில் பலவாறாய்ப் புகழ்ந்தும் எழுதுவர். அவர்கள் பிறமதத்தர்களால் எழுதப்பட்ட (தம்மதசார்பற்ற) நூற்களின் நின்றும் சில பொது (இலக்கண) கருத்துக்களைக் காட்டுக்களாக எடுத்துக் காட்டுவர் ஆயினும், அவ்வக் காட்டுக்களின் அயலில் அக்காட்டுக்களின் நூற்களை ஆக்கிய ஆசிரியர்களை 'என்றார் பிறரும் என்றார் பிறரும்' என எளிதாக எழுதுவர்.

சமண் சமயத்தவர் பிறமத ஆசிரியர்களை எளிதாக எழுதும் வழக்கினை 'யாப்பருங்கலம்' என்ற நூலின் உரை ஆசிரியர், தம் உரை இடையே பேராசிரியர்கள் ஆகிய அகத்தியனாரையும் தொல்காப்பியனாரையும் அவர்கள் பிற (பௌத்த) மதத்தினர் என்ற எண்ணத்தினால் அவர்களுடைய நூற்களின் நின்று கொண்ட காட்டுக்களின் அயலில் 'என்றார் பிறரும், என்றார் பிறரும்' என்று எளிதாக எழுதிய குறிப்புக்களாலும், நன்னூலின் உரை ஆசிரியர் மயிலைநாதர் தம் உரை இடையே பேராசிரியர்களாகிய 'அகத்தியனாரையும் தொல்காப்பியனாரையும் பிற (பௌத்த) மதத்தர்கள் என்ற எண்ணத்தினால் 'என்றார் அகத்தியனாரும்' என்றார் 'தொல்காப்பியனாரும்' என எளிதாக எழுதிய குறிப்புக்களாலும் அறிக.

சமண் சமயத்தவர் தம் மதத்தவரைப் புகழ்ந்து எழுதும் வழக்கினை நன்னூலின் உரை ஆசிரியர் மயிலைநாதர், அந்நன்னூலின் உரை இடையே ('பெயர் வினை உம்மை என்ற 359-வது பாவின் உரை இடையே) இளம்பூரணர் தம் மதத்தவர் என்ற எண்ணத்தினால் அவரை 'இளம்பூரணர் என்னும் ஏதமில் மாதவர் ஓதிய உரை என்று உணர்க' என்று பெருமை படுத்தி எழுதிய குறிப்பினாலும், அவரே, அவிநயம் என்ற நூலின் உரை ஆசிரியர் தம் மதத்தவர் என்ற எண்ணத்தினால் அவரைப் 'புவி புகழ் புலமை அவிநய நூலுள் தண் தலங்கிழவன் தகைவரும் நேமி எண் திசை நிறை பெயர் இராச பௌத்திரப் பல்லவ தரையன் பகர்ச்சி என்று அறிக' எனப் பெருமை படுத்தி எழுதிய குறிப்பினாலும் இளம்பூரணர் தொல்காப்பியனாரை எளிதாக எழுதிய குறிப்பினாலும் அறிக.

அத்தகைய வழக்கினை உடையவர்கள் திருக்குறள் எனும் நூலைப் பிற மதத்தர் செய்திருப்பின் அதனை 'எம் ஒத்து எம் ஒத்து' எனத் தன்மை இடத்துச் சார்த்தி உரிமை கொண்டு

உரைத்து இருப்பரோ? உரைத்து இரார். ஆதலால், அத்திருக் குறள் சமண சமயத்தவரால் செய்யப்பட்டதே எனவும் அது சமண் சமய சார்பாயதே எனவும் கொள்ளுக.

'வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூல் ஆகும்' என்ற பாவைக் காட்டித் தொல்காப்பியம் செய்தவர் சமண் சமயத்தவர் என்பர் சிலர், அப்படிச்சொல்லுபவர் சமண் சமயத்தவர் ஆயினும் அவர், சமண் சமய நூலின் கருத்தை (பெருமையை) அறியாதவர் ஆவர் எனக் கொள்ளுக. என்னை? அந்நூலைச் செய்தவர் சமண் சமயத் தவர் ஆக இருப்பின்,

'அந்தமில் நல்அறிவு இறைவன்' (மேருமந்-1293)

'குற்றமில் நல்அறிவு உடைய இறைவன்' (மேருமந்-1299) என்ற சமண்சமய நூலின் கருத்தை ஒட்டி 'விளங்கிய அறிவின்' என்பதனை 'விரிந்த நல்அறிவின்' என்றேனும் விளங்கு நல்அறி வின்' என்றேனும் அமைத்து;

'வினையின் நீங்கி விரிந்தநல் அறிவின்' அல்லது

'வினையின் நீங்கி விளங்குநல் அறிவின்' எனச் சூத்திரம் செய்து இருப்பர். என்னை? சமணர், தம் இறையவர் அநந்த ஞானம் உடையவர்-கேவலக் ஞானம் உடையவர் என்பர். அவர் தம் கொள்கைக்கு ஏற்ப அச்சூத்திரம் பொருள் கூட்டாமையால் அதனைச்செய்தவர் சமணர் ஆகார். (விரிந்த: அநந்தம். நல்: கேவலம்) அநந்தம், கேவலம் என்ற இரண்டு சொற்களும் சமண ரால் சிறப்பிக்கப்படும் முறைமையை அவர்தம் நூற்களுள் அறிக.

இன்றுள்ள நிலைமைப்படி தொல்காப்பியத்தின் உள்ளே சமண் சமய கொள்கைக்கு மாறானவை மலிந்து கிடத்தலை அறியாதவர் பாயிரத்தில் உள்ள 'படிமையோன்' என்ற ஒரு சொல்லைக்காட்டி (அதன் உண்மைப் பொருளை அறியாமையால்) தொல்காப்பியத் தைச் செய்தவர் சமணர்என்பர். அவர்கூற்றுப்பொருத்தமற்றதே.

பௌத்தர்தம் கொள்கைப்படி அப்பாவின் பொருள்:—பார் காத்தல், பண்டம் மாற்றல், உழுதல் முதலிய தொழில்களைச் செய்து இல்லின் வாழ்தலைவிட்டு நீங்கித் துறவு நெறியில் ஒழுகிப் புகழொடு விளங்கியவனும், போதி எனும் ஞானத்தைப் பெற்ற வனும், தலைவனும்ஆகிய ஸ்ரீ புத்த பகவானால் சொலப்பட்டது முதன்மை ஆன நூல்ஆகும் என்பது. (வீர சோழியம் பாயிரத் தைப்பார்க்க.)

நன்னூலின் ஆசிரியர் சமணர் ஆதலால், அவர் அந்நூலுள் 'விரிந்த நல் அறிவின்' அல்லது 'விளங்கு நல் அறிவின்' என்று தான் சூத்திரம் செய்து இருப்பர். அச்சூத்திரத்தைத் தொல் காப்பியத்தின் நின்றும் கொண்ட ஆசிரிய வசனம் என நினைத்து

வர் எவரோ ஒருவர், (சமணர்தம் கொள்கையை அறியாமையால்) 'விரிந்த நல்' அல்லது 'விளங்குநல்' என்பதனை 'விளங்கிய' எனத் திரித்து இருத்தல் கூடும். என்னை? அதன் ஏதுவினை யாப்பருங் கலம் விருத்தி உரையுள் பல நூற்களின் நின்றும் எடுத்துக்காட் டப்பட்ட மேற்கோள் பாக்களைக் கண்டு அவற்றால் தெளிக. அவற்றுள் எப்பகுதியை அறிதல் வேண்டும்? ஒவ்வொரு ஆசிரிய ரும், பிறநூற்களின் நின்றும் ஆசிரியவசனமாகக் கொண்ட ஒவ் வொரு பாக்களிலும் எவ்வளவு மாற்றம் (கூட்டலும், குறைத்த லும்) செய்து ஆண்டார்கள் என்பதனை. நிற்க,

யாப்பருங்கலம் என்ற நூலின் உரை ஆசிரியர் அதன் உரை யிடையே பல இடங்களில் மயேசுரர் என்ற சைவமத ஆசிரியர் ஒருவரைத் 'திரிபுரம் எரித்தவர் பெயர் மகிழ்ந்த பேராசிரியர்' எனவும், 'பெண் ஒரு பாகன் பெயர் மகிழ்ந்த பேராசிரியர்' என வும பலவாகப் புகழ்ந்து உளரே எனின், அப்பெயரும், புகழ் உரை களும் இடைச்செருகல் எனக் கொள்ளுக. என்னை? சமண் சம யத்தவர் பிற சமயத்தவரைப், பிற சமய கடவுளரைப், பிறசமய ஆகமங்களைப் புகழ்ந்து-விரும்பி உரையார். புகழ்ந்து—விரும்பி உரைப்பர் ஆயின் அச்செயல் அவர்களுடைய ஆகமவிதிக்கு மாறு ஆகும் என்பது அம்மதத்தவர் நூல் முடிபு ஆதலால். நிற்க,

அந்த யாப்பருங்கலம் நூலின் உரை இடையே அதன் உரை ஆசிரியரால் எழுதப்பட்ட (சமண் சமய ஆசிரியர் ஆகிய) மயேசுரனார் அல்லது இறையனார் என்ற ஒரு பெயரைத் தம் மதத்தவர் பெயராகக்கொண்டு அப்பெயருக்கு ஏற்பச் சில போலிப் புகழ் உரைகளைப் பொருத்திச் சைவசமயத்தவர் எவரோ ஒருவர் இடைச்செருகல் செய்து இருத்தல் கூடும் எனத் துணி தலே பொருத்தம் ஆகும். என்னை? சமண் சமயத்தவர் நூலாகிய சீவக சிந்தாமணி, சூளாமணி. சூடாமணி நிகண்டு, திருக்குறள் முதலிய நூற்கள் உள்ளே சமண் சமயத்தவர் கொள் கைக்கு மாறுன கருத்துக்களை உடைய பல பாக்களும் உரைகளும் செறிந்து கிடத்தலே அதற்குச் சான்றாகும். நிற்க,

அந்த யாப்பருங்கல நூலின் உரை ஆசிரியரே அம்மயேசுரனார் என்ற ஆசிரியரைப் புகழ்ந்து இருப்பர் ஆயின், நன்னூலின் உரை ஆசிரியர் மயிலைநாதர், ஆசிரியர் இளம்பூரணரையும், அவிநய நூலின் உரை ஆசிரியர் பல்லவதரையனாரையும் புகழ்ந்து இருத் தல் போல அம்மயேசுரனார்தம் பெருமையையே எடுத்துச் சொல்லிப் புகழ்ந்திருப்பர். அந்த யாப்பருங்கல உரை ஆசிரியர் மயேசுரனார்க்கு உரிய பெருமையைச் சொல்லிப் புகழ்ந்திலர் என்பது நினைத்தற்பாலது. என்னை? அம் மயேசுரனார் என்ற ஆசிரியர்தம் செல்வம், புகழ், புலமை, தவம், ஒழுக்கம் முதலிய

வற்றின் பெருமைகளுள் ஒன்றனையும் எடுத்து உரையாமல் 'திரிபுரம் எரித்தவர் பெயர் மகிழ்ந்த பேராசிரியர் 'பெண் ஒரு பாகன் பெயர் மகிழ்ந்த பேராசிரியர்' என்பன போன்ற சைவ சமயத்தின் இறையவர் ஆகிய ஸ்ரீ சிவபெருமானின் பல செயல்களைக் (வரலாறுகளைக்) குறிக்கும்படி பலவகைத் தொடர்களால் ஸ்ரீ சிவ பெருமான் பெயரை உடைய ஆசிரியர் என ஒரு ஆசிரியரைச் சொல்லுதலால் அவ்வாசிரியருக்கு யாதேனும் ஒரு பெருமையே புகழே உண்டாகுமோ? உண்டாகாது. அவ்வாசிரியரின் சிறப்பைச் சொல்லுதலே அவருக்குப் புகழாகும். ஆதலால் அப்பெயரைச் சிறப்பிப்பான் நின்ற தொடர்கள் (வாக்கியங்கள்) புகழும் மரபு நெறி அறியாதார் ஒருவரால் புகுத்தப்பட்ட போலிப் புகழ் உரைகள் ஆகும் எனக்கொள்ளுக. நன்னூலின்உரை ஆசிரியர்மயிலைநாதர்தம் உரை இடையே இரண்டு, மூன்று இடங்களில் பேராசிரியர்கள் ஆகத்தியனாரையும், தொல்காப்பியனாரையும் சிறப்பித்து நிற்கும் சில சொற்கள் சைவசமயத்தவர் ஒருவரால் செறிக்கப் பட்ட இடைச்செருகல் எனக் கொள்ளுக. என்னை? முன்னரே கூறப்பட்ட ஏதுக்களால். நிற்க,

பௌத்தசமய ஆசிரியர் சீத்தலைச்சாத்தனார் தம்மால்எழுதப் பட்ட மணிமேகலை துறவு என்ற தமிழ் மொழியால் ஆய நூலுள்,

'தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுது எழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை என்ற அப்
பொய்யில் புலவன் பொருள் உரை தேராய்' என்ற மூன்றுஅடிகளுள் முன்இரண்டு அடிகளில் திருக் குறளின் நின்றும் ஒருபாவைச் சொல்லிய தோடு பொய்யில் புலவன் என்றதனால் அப்பாவை ஆக்கிய ஆசிரியரையும் புகழ்ந்தபடி ஆம் அன்றோ? அதனால் நின் கருத்துப்படி திருக்குறள் ஆசிரியரும் பௌத்தராதல் வேண்டுமே எனின், பௌத்தர் ஆதல் வேண்டாவாம். என்னை? மணி மேகலை துறவு என்ற நூலை ஆக்கிய ஆசிரியர் திருக் குறளின் நின்று 'தெய்வம் தொழாஅள்' என்ற பவை எடுத்துத் தம் நூலுள் சேர்த்து இருப்பின் அப்பாவைத் திருக் குறள் என்னும் நூலுள் உள்ளபடியே "பெய் எனப் பெய்யும் மழை" எனவே வைத்து அதனோடு 'எனச் சொன்ன அப், பொய்யில் புலவன்" எனக் கூட்டி வினை முடிபு கொண்டு இருப்பார். அதாவது:

'தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுது எழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை யெனச் சொன்ன வப்
பொய்யில் புலவன்' என வினை முடிபு கொண்டு இருப்பர்.

அப்படி செய்யாமல் அப்பாவின் இடை அடியில் 'பெய்யும் மழை' என்ற தொடரின் இடையே 'பெரு' என ஒரு சொல்லைப் பெய்து, பெய்யும் 'பெரு மழை' எனத் தொடராக்கி இரார்.என்னை? பேராசிரியர் ஆவார் எவரும் ஆசிரியர் ஸ்ரீ சிவஞானமுனிவர் தம்

கருத்துக்கு மாறுகக் காஞ்சிப்புராணத்துக்கு உரைஎழுதியவர்போல ஒருபாவில் அப்பாவை ஆக்கிய ஆசிரியர் கருதாத ஒருகருத்தைப் பெய்து அப்பாவை ஆக்கிய ஆசிரியர் சொல்லினூர் எனச் சொல்லார். ஒருவர் சொல்லுவர் ஆயின் அவர், இம்மையில் பழிப்பிற்கும், மறுமையில் கொடிய நரகவேதனைக்கும் உரியர் ஆதல் அன்றிப், பேராசிரியர் எனும் பெருமைக்கு உரியர் ஆகார். ஆதலால் மணிமேகலை துறவு என்னும் நூலின் ஆசிரியரால் சொல்லப்பட்ட 'தெய்வம் தொழாஅள்' என்ற அடிகள் திருக் குறளின் நின்று எடுக்கப்பட்டபா அன்று எனக் கொள்ளுக. தெய்வம் தொழாஅள் என்பது முதலாக நின்ற மூன்று அடிகளுள் முன் நின்ற இரண்டாம் அடியின்' பெரு மழை' என்ற வரையில் பௌத்த சமய ஆசிரியர் ஒருவரால் பௌத்த சமய சார்பாகச் செய்யப்பட்டதும் இன்று வரை இறந்து பட்ட நூற்கள் பலவற்றுள் ஒன்றுயதும் ஆகிய பௌத்தசமய நூலின் நின்றும் எடுக்கப்பட்ட தொடர்களாகும் எனக் கொள்ளுதலே பொருத்தம் ஆகும். நிற்க,

சமண் சமயத்தவர்தம் நூலின்நின்றும் ஒருதொடரை, ஒருபாவை எடுத்துத் தம்மால் எழுதப்படும் நூற்களுள் சேர்த்துக் கொண்டு அந்தநூலை ஆக்கிய ஆசிரியரைப் புகழ்ந்து சொல்லுதலால் சமண் சமயத்தவர் அல்லாதவருக்கு இழுக்கு இல்லை போலும். என்னை? பிறமத கடவுளைப், பிறமத ஆகமங்களைப், பிறமதத்துறவிகளைப் பிறமத ஆசிரியர்களை வணங்குதல்—விரும்புதல் ஆகாது என்ற (பகைமை வளர்தற்கு ஏதுவான) அவிநயம்என்னும் கொடிய விதி ஒன்று சமண் சமயத்தவர் அல்லாதவர்க்குஇன்மையால். பகை வளர்தற்கு ஏதுவான அவி நயம் எனும் கொடிய விதி சமண் சமயத்தவர்க்கே தான் உண்டு. சமண் சமயம் தென்னுட்டில் அழிவு உற்றதற்கு உரிய ஏதுக்கள் பலவற்றுள் அம்மத ஆகமங்களில் உள்ள பிறமத கடவுளைப், பிறமத ஆகமங்களைப் பிறமத துறவிகளைப் பிறமத ஆசிரியர்களை வணங்குதல்-விரும்புதல ஆகாது என்ற கொடிய விதியும் ஒரு ஏதுவாகும்போலும். சமண் சமயத்தவர் பிறமத கடவுளை வணங்குதல் இல்லை என்பதனைப் பௌத்த சமய நூலாகிய சிலப்பதிகாரத்தே நாடுகாண் காதை இடையே நூற்றுப் பத்தொன்பதாவது அடி முதல் இருநூற்று ஏழாவது அடிவரை உள்ள சமண் சமய பெண்பால் துறவியாகிய காவுந்தி அடிகளின் கூற்றுக்களைக் காண்க. நிற்க,

'தெய்வம் தொழாஅள்'(குறள்-7.)என்றதொடரில் தொழாஅள் என்பது தொழாஅல் என இருத்தற் பாலது. அது, வினைத்திரிசொல். அப்பாடமே கவிக்கருத்து. அத்தொடரின் பொருள்: 'தெய்வத்தைத் தொழுதல்' (போல) என்பது. மகளிர் தெய்வத்தைத்தொழுதல் ஆகாது என்பது சமணர்தம் கொள்கை அன்று. அந்நூலைக் களவால் கவர்ந்து திருத்திக்கொண்டவர்தம் கொள்கையும் அன்று. அப்பாவிடையே செறிந்த பிழை பாடத்திற்குஏற்பத்

தலைமகனில் தீர்ந்து உறைதல் தான் பிறரின் சேர்தல்
நிலைமையில் தீப்பெண்டிர் நேர்தல்—கலன் அணிந்து
வேற்றார்ப் புகுதல் விழாக்காண்டல் 'நோன்பிகழ்தல்'
கோறிரிந்த கோடியான் கோள் அழியும் ஆறு' என்ற அறநெறிச்
சாரப்பாவில் 'நோன்பிகழ்தல்' என்ற பாடத்தை 'நோன்பிடுதல்'
எனத் திரித்தார்கள் போலும். என்னை? 'பெண்டிர்க்கு அழகு
பண்டி சுருங்குதல்' என்ற முது மொழிப்படி மகளிர் நோன்பு
கொண்டு நுண்ணிய உடம்பினராகி தொன்னூல் துறையில் வாழ்
தல் குற்றம் அன்று. அவர்கள் பாண்டில் மாடு போலப் பண்டி
நிறைய உண்டு பருத்த உடம்பினராகிப் பண்பில் துறையில்
பழகுதலே குற்றம் ஆம் ஆதலால். அப்பாவில் உள்ள ஏனைய பிழை
களை ஆய்ந்து அறிக.

சமண்மதத்தர் நூல் இடையே பிறர் தம்கொள்கையைப் புகுத்தி
எழுதுதல் என்ன முறைமையோ? அறநெறிச் சாரம்
என்ற சமணர்தம் நூலுள் (மேலத்தார் உரை) தம்மத
கொள்கையைப்புகுத்தி உரை எழுதியது அன்றி அந்நூலின் முன்
பாக்களைப் பின்பாக்களாகவும், பின்பாக்களை முன்பாக்களாகவும்
மாற்றினாரொருவர். ஸ்ரீ சிவஞான முனிவர்தம் காஞ்சிப்புராணத்தின்
உரை இடையே அம் முனிவர் தம் கொள்கைக்கு மாறாக
வேதம் என்ற இடங்களில் எல்லாம் தமிழ்மறை தமிழ் வேதம்
எனத் தம் கொள்கையைப்புகுத்தி உரை எழுதினார் ஒருவர்.
(காஞ்சி மெய்கண்டார் கழக உரை) அவர்கள் அந்நூற்களுள் ஆசி
ரியர் கருத்துக்கு மாறாகத் திருத்தியும் பொய்ப்பொருள் புகுத்தியும்
எழுதியது என்ன நீதியோ? அந்நீதியை அறிதற்கு இயலவில்லை.

சமண் சமயத்தவர் பிறமத துறவிகளை—ஆசிரியர்களை
வணங்குதல்-விரும்புதல் இல்லை. வணங்கார்—விரும்பார் என்
பதற்கு அவர்களுடைய ஸ்ரீ புராணத்தில் இருபத்து நான்காம்
தீர்த்தகரர் ஆகிய ஸ்ரீ வர்த்தமான தீர்த்தகரர் புராணத்துள்ள
ஜீவகன்வரலாற்றில் ஒருபகுதி சான்றாகும். அப்பகுதியின் சுருக்கம்:-
ஜீவகன் கந்துக்கடன் வீட்டில் வளரும் இளம்பிராயத்தில்
ஒருநாள் அவன் தன்நகரத்தின் வெளியில் ஒரு உத்தியானத்தில்
தோழருடன் விளையாடிக்கொண்டு இருந்த காலத்தில் பஸ்மக
வியாதியை (பெரும்பசிநோயை) உடைய துறவி ஒருவர், அச்
ஜீவகனை நோக்கிக் குமரா சமீபத்தில் இங்கு நகரம் உண்டோ
எனக் கேட்டார். அச்சொல்லைக்கேட்ட ஜீவகன், புன் முறுவல்
உடையவனாய் இளையராகிய எங்களைக்கண்டால் நகரம்சமீபமே
என்பது சொல்லுதலும் வேண்டுமோ? இதனைக் கேட்கின்றீரே
என்று சொல்லினன். அவன் சொல்லைக் கேட்டதுறவி, அவனுடைய
அழகைக் கண்டு அவனை ஒரு அரசகுமாரன் எனத்துணிந்து தனக்கு
உண்டிவேண்டும் என்ற விருப்பத்தை வெளி இட்டார், ஜீவகன்

அத்துறவியின் விருப்பத்தினுக்கு இணங்கியவனாய் அத்துறவியைத் தன்னுடன் அழைத்துப் போய் அவருக்குத் தன்னுடைய உணவைக் கொடுத்தான் அந்தக்காலத்திலே அத்துறவியினைப்பற்றி இருந்த பஸ்மக வியாதி (பெரும்பசியை உண்டாக்கும் நோய்) முற்றும் அத்துறவியை விட்டு நீங்கிற்று. தன்னை வருத்திக்கொண்டு இருந்த பெரும்பசி நோய் நீங்கிய மகிழ்ச்சியினால் அத்துறவி, சீவகனின் வளர்ப்புத் தந்தை ஆகிய கந்துக்கடன் என்னும் வணிகனை அணுகி என் பெரும்பசிநோயைப் போக்கிய மகாஉபகாரி ஆகிய நின் மகனுக்கு யான் சாஸ்திர பயிர்ச்சியைப் பண்ணி வைத்திட விரும்புகின்றேன் எனத் தம் விருப்பத்தினைத் தெரிவித்தார். அத்துறவியின் சொற்களைக்கேட்ட கந்துக்கடன் 'சாஸ்திர குருவாயினார்க்கு நமஸ்கார விநயங்கள்' செய்யவேண்டுமே அப்படிச் செய்தற்கு 'நீர் சமண்சமயத்தவர் அல்லாத துறவி' ஆக இருக்கின்றீர் ஆதலின், என் மகனை நும்மிடம் சாஸ்திர பயிர்ச்சி பண்ணுவிக்க இயலாது என்று சொல்லினான். அக் கந்துக்கடன் சொல்லிய சொற்களைக் கேட்ட துறவி, யான் சிம்மபுரம் என்னும் நகரத்து அரசன் ஆர்ய நந்தி என்பேன், [illegible] முனிவர் இடத்தில் தருமம் கேட்டேன், அதன்பின் என்னுடைய மகனுக்கு என் அரசைக் கொடுத்துத் தீக்ஷைபெற்றேன், அதன் பின் சிலநாட்கள் கழிந்தபின் பஸ்மகம் என்ற ஒரு (பெரும்பசி) நோய் என்னிடத்தில் உண்டாயிற்று, அதனால் யான் தீக்ஷா நெறியின் நீங்கித் தாபத வேடத்தைக் கொண்டேன், யான் சம்யக் திருஷ்டியே (சமண் சமயத்தவனே) ஆதலின் உன்மகனுக்கு நல்ல தருமம் சொல்லுதற்கு உரியன் ஆகின்றேன் எனச் சொல்லினார். அச்சொற்களைக் கேட்ட கந்துக்கடன் மிக்க மகிழ்ச்சியை உடையவனாய்த் தன் மகன் சீவகனின் வரலாற்றினை அத்துறவி இடம் மறைவாக அறிவித்துச் சீவகனைச் சாஸ்திரபயிர்ச்சி பண்ணுவித்தான். சீவகன் அத்துறவியிடம் குறுகியகால அளவில் எல்லாக்கலைகளையும் கற்றுத் தேர்ந்து வல்லவன் ஆயினான் என்பது.

இவ்வரலாற்றின்படியும் சமண் சமயத்தவர் பிறசமய துறவிகளை ஆசிரியரை வணங்கார்-விரும்பார் என்பது புலனாகின்றது, இவ் வேறுபாட்டினால் திருக்குறள் எனும் நூலைப் பிற மதத்தர் ஒருவர் செய்திருப்பின் அதனை, நீலகேசியின் உரை ஆசிரியர் 'எம் ஒத்து எம் ஒத்து, என உரிமை கொண்டு உரைத்திரார் எனவும் அதனைச் சமண் சமயத்தவர் ஒருவரே சமண் சமய சார்பாகச் செய்திருப்பர் எனவும் கொள்ளுதலே நேர்மையாகும் என்பது என் நம்பிக்கை.

திருக்குறளின் ஆசிரியர் தம் மதம் சமணமே. 'என'
வே. மு. ஸ்ரீ நிவாச முதலியார் எழுதிய கட்டுரை
முற்றிற்று.

# கோகழி என்பது திருக்காழித் திருப்பதியே.

(வே. மு. ஸ்ரீநிவாச முதலியார் எழுதிய கட்டுரை.)

'கோகழி' என்ற மொழி 'திருவாவடுதுறை' என்ற திருப்பதிக்கு ஒரு பெயர் என்பர் சிலர். அவர் கூற்றுப் பொருத்தம் அன்று. அதன் ஏது மேல் வருமாறு:

திருவாதவூர் அடிகள், தம்மால் ஆக்கப்பட்ட 'திருவாசகத்தின்' இடையேயும், 'திருக்கோவையாரின்' இடையேயும், ஓர் இடத்தும் 'திருவாவடுதுறை' என்னும் திருப்பதியைக் குறித்திலர். அவர்கள், அந்நூற்கள் இடையே வேறு பல திருப்பதிகளைக் குறித்தார்கள். அப் பல திருப்பதிகளுள், 'திருவிடைமருதூர்' என்னும் திருப்பதியும் ஒன்றாகும். அத் திருவிடைமருதூர் என்ற திருப்பதியினை மிக அடுத்து இருப்பதுவும், திருச் சைவ ஆகிய ஆதீனத்தார் இருக்கைக்கு இடமாக இருப்பதுவும் ஆகிய சிறப்பினை உடைய 'திருவாவடுதுறை' என்னும் திருப்பதியினை அதன் உறழ்ச்சிப்பெயர்களுள் ஒன்றனைக்கொண்டும் அடிகள் அந்நூற்கள் இடையே ஓர் இடத்தும் குறித்திலர். ஆதலால் அடிகள், தம்மின் முன் ஆசிரியர்களால் நூல் வழக்கினும் உலக வழக்கினும் ஆளப்படாததும், தம்மால் புதிதாக ஆக்கப்பட்டதும் ஆகிய 'கோகழி' என்ற மொழியினைத் தம் நூற்கள் இடையே தம்மால் ஓர் இடத்தும் குறிப்பாகவும் சுட்டப்படாத 'திருவாவடுதுறை' என்னும் திருப்பதிக்குப் பெயர் ஆக ஆண்டார்கள் எனல் பொருத்தம் அன்று.

திருவாதவூர் அடிகளின் பிற்காலத்தே (திருவாசகத்தே குறிக்கப்பட்ட 'கோகழி' என்ற புதிய மொழியினுக்குப் பொருள் விளங்காமையால் மயக்கங்கொண்ட காலத்தே) திருவாவடுதுறையின்கண் உள்ள திருச் சைவசமய ஆதீனத்து ஆசிரியர்கள், தங்களால் எழுதப்பட்ட நூற்கள் இடையேயும், 'கோகழி' என்ற மொழியினைத் தங்கள் இருக்கை ஆகிய 'திருவாவடு துறை' என்னும் திருப்பதியினுக்குப் பெயர் ஆக ஆண்டார்கள். அவர்கள் (திருவாதவூர் அடிகளால் ஆக்கப்பட்ட திருவாசகத்தே அன்றி) திருவாவடுதுறை ஆதீனத்து ஆசிரியர்களில் முற்காலத்தே எவராலும் எந்நூல் அகத்தும் ஆளப்படாதது ஆகிய அக் 'கோகழி' என்ற மொழியினைத் 'திருவாவடு துறை' எனும் திருப்பதிக்குப் பெயர் எனக் கொண்டது என்னை எனின், தங்கள் ஆதீனத்து இருக்கை ஆகிய ஊரினைத் திருவாதவூர் அடிகளும் தம் நூலிடையே சிறப்பாக எடுத்து உரைத்தார்கள் என்ற பெருமையினைத் தாங்கள் பெறுதல் பொருட்டுப் போலும். சிற்க,

009950



தாம் திருவாசகத்தினைப் பலவாக ஆய்ந்து ஆங்கில மொழியிலும் மொழிபெயர்த்ததில் பாதிரியார், ஸ்ரீமத் ஜீ. யூ. போப் அனை அவர்களும், திருவாசகத்துள் முதல் நான்கு நெடும் பாக் கட்டு மட்டும் உரை எழுதிய (தம் 'திருவாசக விரிவுரை முதற் பாகம்' என்ற புத்தகத்துள்.) திரு மறை மலை அடிகளும் 'கோகழி' என்ற மொழி 'திருப்பெருந்துறை' என்னும் திருப் பதிக்கு ஒரு பெயர் என்று எழுதினார்கள். அவர்கள் கொண்ட பொருள் பொருத்தம் அன்று. அதன் ஏது மேல் வருமாறு:

அடிகள், திருவாசகத்தே 'திருப்பெருந்துறை' எனும் திருப் பதியினை ஒரு பாவில் குறிப்பார்கள் ஆயின் 'திருக்காழி' என்னும் திருப்பதியின் உறழ்ச்சிப் பெயர் ஆகிய 'கோகழி' என்ற பெயரையும் அப்பாவில் குறிப்பார்கள் 'கோகழி' என்ற பெயர் திருப் பெருந்துறை' என்னும் திருப்பதியின் உறழ்ச்சிப் பெயர்களுள் ஒன்று அன்று. அதனால் கூறியது கூறல் என்னும் குற்றம் இன்று ஆதலால். 'திருக்காழி' என்னும் திருப்பதியை ஒரு பாவில் குறிப்பார்கள் ஆயின், அதன் உறழ்ச்சிப் பெயர் ஆகிய 'கோகழி' என்ற பெயரை அப்பாவில் குறியார்கள். குறிப்பின் கூறியது கூறல் எனும் குற்றம் ஆகும் ஆதலால். அவ்வழக்கினை இப்பாவில் வாழ்த்துப் பகுதியுள் 'கோகழி' ஆண்ட குருமணிதன் தாள் வாழ்க' என்று திருக்காழிப்பதியின் உறழ்ச்சிப் பெயர் ஆகிய 'கோகழி' என்ற பெயரை ஆண்டதால் அதன் ஏனைய பெயர்க ளாகிய 'கழுமலம், சிவபுரம். தோணிபுரம்' முதலிய பெயர்களுள் ஒன்றனையும் குறித்திலர் அதனாலும், கீர்த்தித் திரு அகவலுள் 'கழுமலம் ' அதனில் காட்சி கொடுத்தும்' என்று 'திருக்காழி' யின் உறழ்ச்சிப் பெயர் ஆகிய 'கழுமலம்' என்ற பெயரைக் குறித்தபடி யால், மற்றும் அதன் உறழ்ச்சிப் பெயர் ஆகிய 'கோகழி' என்ற பெயரைக் குறியாமல் 'திருவார் பெருந்துறைச் செல்வனுகி'என்று திருப்பெருந்துறையைக் குறித்தமையாலும், போற்றித் திரு அகவலுள் 'கோகழி மேவிய கோவே போற்றி'என்று 'திருக் காழி' த் திருப்பதியின் உறழ்ச்சிப் பெயர் ஆகிய 'கோகழி' என்ற பெயரைக் குறித்தபடியால், மற்றும் அதன் உறழ்ச்சிப் பெயர்கள் ஆகிய 'கழுமலம்' 'சிவபுரம், தோணிபுரம், முதலிய பெயர்களுள் ஒன்றனைக் குறியாமையாலும். அறிக.

இவ்வேதுக்களினுல் திருவாதவூர் அடிகள் 'கோகழி' என்ற பெயரால் திருப்பெருந்துறை' என்ற திருப்பதியினைக் குறித்தார்கள் எனல் பொருத்தம் அன்று. நிற்க,

திருவாசகத்தே பண்டாய நான்மறைப் பகுதியுள்;
நண்ணிப் பெருந்துறையை நம் இடர்கள் போய் அகல
எண்ணி எழு கோகழிக்கு அரசைப்-பண்ணின்

மொழியாளோடு உத்தர கோச மங்கை மன்னிக்
கழியாது இருந்தவனைக் காண்' என ஒரே பாவில் திருப்பெருந்துறை, கோகழி, உத்தரகோசமங்கைஎன்ற மூன்று திருப்பதிகளை அடிகள் குறித்தார்கள் என்பது மறவாமல் பாதுகாக்கத் தக்கது.

இதன் பொருள்: 'நெஞ்சே! நம்முடைய துன்பங்கள் கெடும் பொருட்டுச் சூழ்ந்து சென்று 'திருப்பெருந்துறை' எனும் திருப்பதியை அடைந்து அவ்விடத்தே எழுந்து அருளிய 'கோகழி' (திருக்காழி)என்னும் திருப்பதியின்கண் வீற்றிருக்கும் தலைவனும், 'உத்தரகோச மங்கை' என்னும்திருப்பதியின்கண் பண்போலும் இனிய மொழியாளோடும் பொருந்தி நீங்காமல் வீற்று இருப்பவனும் ஆகிய சிவபெருமானைக் கண்டு வணங்குவாயாக' என்பதாம்.

இவ்வகை அன்றி, இப்பாவில் ஆளப்பட்ட 'கோகழி' என்ற மொழியைத் ('திருக்காழி' என்ற திருப்பதிக்குப் பெயராகக் கொள்ளாமல்,) 'திருப்பெருந்துறை' என்ற திருப்பதிக்குப் பெயராகக் கொள்ளல் ஆம் எனின் அது கூறியது கூறல் எனும் குற்றம் ஆம். ஆதலால், அது கவிக்கருத்து அன்று என்க.

திருவாசகத்தே பண்டாய நான்மறைப் பகுதியுள் முதற்பாவில் 'கோகழி' என்ற திருப்பதியின்பெயரைக் கூறி அப்பகுதி முற்றும் (ஏனைய பாக்கள் ஆறினும்) 'திருப்பெருந்துறை' என்ற திருப்பதியின் பெயரைக்கூறி இருத்தலால், அம்முதல் பாவில் குறிக்கப்பட்ட'கோகழி' என்ற பெயர் திருப்பெருந்துறை' என்ற திருப்பதியைக் குறித்தபடி ஆம் என்றும், அதனால் அந் 'நண்ணிப் பெருந்துறையை' என்ற பாவில் குறிக்கப்பட்ட 'பெருந்துறை' என்ற மொழி 'ஒரு திருப்பதியின் பெயர்' என்றும், அப்பாவில் குறிக்கப்பட்ட 'கோகழிக்கு அரசு' என்ற பெயர் 'அத்திருப்பதியில் எழுந்து அருளிய' இறைவனைக் குறித்தபடி என்றும் எழுதினார், தாராபுரம், ந. ஆறுமுகம்பிள்ளை என்பார் ஒருவர். (சென்னை மாத வெளியீடு—சித்தாந்தம் மலர் மூன்று இதழ் எட்டில்) 'நண்ணிப் பெருந்துறையை' என்ற பாவின் பிற்பகுதியில் 'உத்தரகோச மங்கை' மன்னிக் கழியாது இருந்தவனைக் காண்' என மூன்றுவதாகக் குறிக்கப்பட்ட 'உத்திரகோச மங்கை' என ஒரு திருப்பதியின் பெயர் குறிக்கப்பட்டு இருத்தலை அவர் படித்திலர் போலும். என்னை? அவர் உடைய மனம் மாண்பில் மறுப்பு உரைத்தல் செயலிலே மகிழ்ந்து சென்றதால் பிற்பகுதியைப் படித்தற்கு மறந்தார் போலும். நிற்க, அவர் தம் மறுப்புரை மாண்பு அற்றது என்பதனை மேல் வரும் ஏதுக்களாலும் அறிக.

திருவாசகத்தே 'பண்டாய நான்மறைப் பகுதி' முற்றும் 'திருப் பெருந்துறை, கோகழி, உத்தரகோசமங்கை' என்ற மூன்று

திருப்பதிகளையே குறித்தாற் போலக் 'குயில் பத்திலும்' முற்றும்
பிற திருப்பதிகளைக் குறியாமல் 'திருப்பெருந்துறை, கோகழி,
உத்தர கோச மங்கை' என்ற மூன்று திருப்பதிகளே குறிக்கப்பட்
டுள. அக் 'குயில் பத்தில்' குறிக்கப்பட்ட உத்தர கோச மங்கை
என்ற பெயரையும் 'பண்டாய நான்மறை'ப் பகுதியில் குறிக்கப்
பட்ட 'உத்தரகோச மங்கை' என்ற பெயரையும் 'திருப்பெருந்
துறை' என்ற திருப்பதிக்கே பெயராகக் கொள்ளல் வேண்டும்
அன்றோ? அன்றி, திருவாசகத்தில் 'திருப்பள்ளி எழுச்சியுள்'
முற்றும் ஒவ்வொரு பாட்டிலும் 'திருப்பெருந்துறை'யைக் குறித்த
அடிகள் அப்பள்ளி எழுச்சியுள் ஏழாவது பாவில்,

'மது வளர் பொழில் 'திரு உத்தரகோச
மங்கை' உள்ளாய் 'திருப் பெருந் துறை' மன்னா, எனத்
'திரு உத்தரகோச மங்கையையும், திருப்பெருந்துறையையும்'
குறித்தார். அப் பள்ளி எழுச்சியுள் முற்றும் பிற திருப்பதிகளுள்
ஒன்றனையும் கூறாமல், 'திருப்பெருந்துறை' ஒன்றனையே குறித்த
தால் அத் 'திரு உத்தரகோசமங்கை' 'என்ற பெயரையும் திருப்
பெருந் துறை என்ற திருப்பதிக்கே பெயர் எனக் கோடல் வேண்
டும் அன்றோ? அப்படி கொள்ளுதல் நேர்மையாகுமா? ஆகாது.
அன்றிச் செத்திலாப் பத்தில் (முற்றும்) பிற திருப்பதிகளின்
பெயர்களுள் ஒன்றனையும் குறியாமல் திருப்பெருந்துறை ஒன்ற
னையே குறித்ததால் அச்செத்திலாப் பத்தில் நான்காவது பாவில்

'தென்பராய்த் துறையாய் சிவலோகா
திருப்பெருந்துறை மேவிய சிவனே' எனக் குறிக்கப்பட்ட
தென்பராய்த் துறை, என்ற பெயரையும், 'சிவலோகம்' என்ற
பெயரையும் திருப்பெருந்துறை என்னும் திருப்பதியின் பெயர்
களே எனக் கொள்ளல் வேண்டும் அன்றோ? அப்படிக் கொள்ளு
தல் நேர்மை ஆகுமா? ஆகாது. ஆதலால் திருவாசகத்தே
'பண்டாய நான்மறை'ப் பகுதியுள் முதற் பாவில் குறிக்கப்பட்ட
'கோகழி' என்ற மொழியைத் 'திருப்பெருந்துறை' என்ற திருப்
பதிக்குப் பெயர் எனல் பொருத்தம் அன்று. இவ்வேதுக்களினால்
தாராபுரத்தார் மறுப்புரை மாண்பற்றது ஆயிற்று அன்றோ? நிற்க,

அடிகள், திருவாசகத்தே பண்டாய நான் மறைப் பகுதி
முற்றும் திருப்பெருந்துறை, கோகழி, உத்தர கோச மங்கை,
என்ற மூன்று திருப்பதிகளையே குறித்தார்கள். அன்றி, அப்
பகுதியுள் 'நண்ணிப் பெருந்துறையை' என்ற ஒரே பாவிலும் திருப்
பெருந்துறை, கோகழி என்ற இரண்டு பெயர்களோடு மூன்றா
வதாக 'உத்தரகோச மங்கை' என்ற ஒரு பெயரையும் குறித்
தார்கள். அப்படியே குயிற்பத்திலும் (முற்றும்) பிற எத்திருப்
பதியினையும்குறியாமல் 'திருப்பெருந்துறை, கோகழி, உத்தரகோச

மங்கை' என்ற மூன்று திருப்பதிகளையே குறித்தார்கள். திருவாசகத்தே பிறபகுதிகளிலும். இம் மூன்று (திருப்பதிகளின்) பெயர்களைப் பல முறை குறித்தார்கள். ஆதலால், திருவாதவூர் அடிகட்கு 'வேறுபல திருப்பதிகளிலும்' 'திருப்பெருந்துறை' 'உத்தரகோச மங்கை' 'கோகழி' (திருக்காழி) என்ற மூன்று திருப்பதிகள் இடத்தும் மிக விருப்பம்போலும். நிற்க,

'கோகழி' என்ற மொழி 'திருப்பெருந்துறை' என்ற திருப்பதிக்கு ஒரு பெயர் என்பார் கூற்றுப் பொருத்தம் அன்று என்பதற்கும், 'கோகழி என்ற பெயருக்குத்' 'திருக்காழி' என்ற 'திருப்பதியே' 'பொருள்' என்பதற்கும் உரிய ஏதுக்கள் பலகள் உள்ளும், திருவாசகத்தே பண்டாய நான்மறைப் பகுதியுள் 'நண்ணிப் பெருந்துறையை' என்ற பாவின் குறிப்பே சாலச் சிறந்ததொன்றாகும் என்பதனை நடுநின்று ஆயும் நல்லறிவைப் பெற்றார்அறிகுவர்.

அடிகள் 'திருக்காழி' என்ற திருப்பதியினைக் காழி என்ற பெயரால் திருவாசகத்தே ஓர் இடத்தும் குறித்திலர், ஆதலால், 'கோகழி' என்ற பெயருக்குத் 'திருக்காழி' எனப் பொருள்கூறுதல் பொருத்தம் அன்று என்று (சென்னை-சித்தாந்தம்-மலர் மூன்று-இதழ் எட்டில் தாராபுரம், ந. ஆறுமுகம் பிள்ளை என்பார்) ஒருவர் மறுப்புரைத்தார். அவர் யான் திருவாவடு துறை என்ற திருப்பதியினை அடிகள், திருவாசகத்தே ஓர் இடத்தும் குறித்திலர் என்றதற்கு எதிராகக் 'காழி' என்ற பெயரால் திருக்காழி என்ற திருப்பதியை அடிகள் திருவாசகத்தே ஓர் இடத்தும் குறித்திலர் என்றார் போலும். அவர்தம் எதிர் உரை எழில் அற்றதாகும். என்னை? திருவாசகத்தே சிவபுரம், கழுமலம், ஆழி, (காழிவிகாரம்) என்ற பெயர்கள் திருக்காழி என்னும் திருப்பதிக்குப் பெயர்களாக இருத்தலால் அடிகள் 'காழி' என்ற பெயரையே மொழி முதல் மெய்யைக்கெடுத்து ஆழி என்று குறித்தார்கள் எனக் கொள்ளுக.

காழி என்ற மொழியை ஆழி எனத் திரித்துக் கொள்ளுதல் பொருத்தம் ஆமோ எனின், ஆம். பொருத்தமே. 'என்னை? இப் பாவில், 'உந்தை வினை முழுதும் ஓய உரைப்பன் யான்' என்ற அடி 20-ல், 'முந்தை' என்ற மொழியை மொழி முதல் மெய்யைக் கெடுத்து 'உந்தை' என ஆண்டாற்போல, அடைக்கலப்பத்தில் பா ஆறில் திருக்காழித் திருப்பதியில் எழுந்தருளிய இறையவரைத் தோணி 'அப்பர்' என்னும் சிறப்பு வழக்குப் பற்றி ஆழி(காழி) 'அப்பா' என 'ஆழி (காழி) அப்பா உடையாய் உன்அடைக்கலமே' என்று காழி என்ற பெயரை-மொழியை, மொழி முதல் மெய்யைக் கெடுத்து ஆழி எனத் திரிசொல்வழக்கில் அடிகள் குறித்தார்கள். அவர்கள், காழி என்ற மொழியை ஆழி எனத் திரித்துக் கொண்டது ஆன்றோர்தம் வழக்குப்பற்றியே யாம். என்னை?

ஆன்றோர்கள் மொழிகளை மொழி முதல் மெய்யைக் கெடுத்து ஆண்ட வழக்கிற்கு உரிய பல எதுக்களை இப்பாவின் 20-வது அடியின் குறிப்புரைப் பகுதியுள் 'உந்தை' என்ற மொழிக்குக் கொண்ட காட்டுக்களைப் பார்க்க. நிற்க,

திருஞான சம்பந்தர் 'ஆழி எந்தை' என்ற தொடரில் (சீபுரம்-6ல்) திருக்காழி என்னும் திருப்பதியின் பெயர் ஆகிய 'காழி' எனும் மொழியை, மொழி முதல் மெய்யைக் கெடுத்து 'ஆழி' என ஆண்டு இருத்தலையும், சுந்தர மூர்த்திநாயனார், 'ஆழியூர் அன' என்ற தொடரில் (நாட்டுத்-7-ல்) திருக்காழி எனும் திருப்பதியின் பெயர் ஆகிய 'காழியூர்' என்ற மொழியை, மொழி முதல் மெய்யைக் கெடுத்து 'ஆழியூர்' என ஆண்டு இருத்தலையும் நினைக்க.

[மற்றும், ஆசிரியர் கம்பர் 'மேனகை' என்றமொழியை'ஏனகை' எனவும், (இராமா-ஆரணி-சடாயு-42-ல்; யுத்த-இராவ-தானை-6-ல்) மணிமேகலையின் ஆசிரியர் 'மும்மைவினை (பழைமை வினை) என்பதனை 'உம்மை வினை' எனவும், 'மணி-26-33' சீவகசிந்தாமணியின் ஆசிரியர், திருத்தக்கதேவர் 'எலி மயிர்' என்ற தொடரில் (மென்மை திரிந்த) மெலி என்ற மொழியை, மொழி முதல் மெய்யைக் கெடுத்து 'எலி' எனத் திரித்து 'எலி மயிர்' என ஆண்டிருத்தலையும் நினைக்க. (எலிக்கு மயிர் மிகுதியாக இன்மையால்—அதன் மயிர் நலம் பயவாது ஆகையால்) 'எலியின் மயிரால், எக்காலத்திலும் போர்வை செய்யப்பட்டது இல்லை என்பதனை மறந்தமையால் 'எலிமயிர்' என்ற தொடருக்கு (மெலி மயிர் எனப் பொருள் கொள்ளாமல் எலியின் மயிர் என்றே பொருள் கொண்டார்கள் போலும். அக்கொள்கை தவறுயதே.]

அடிகள் காழி என்ற மொழியை ஆழி எனத் திரித்துக் கொண்டது மோனைத் தொடை மூரணுகாமைப் பொருட்டே ஆம். ஆதலால், அடிகள் காழி(ஆழி)என்ற பெயராலும் திருக்காழி என்ற திருப்பதியினைக் குறித்தபடியாம்.

இவ்வேதுக்களினுல் அடிகள், 'காழி' என்ற பெயரால் 'திருக் காழி' என்ற திருப்பதியினைக் குறித்திலர் என்ற தாராபுரத்தார் எதிர் உரை எழில் அற்றது என்க. மற்றும் 'காழி' என்ற பெயரால் அடிகள் திருக்காழித் திருப்பதியின் உறழ்ச்சிப் பெயர்கள் ஆகிய 'கழுமலம், சிவபுரம்' என்ற பெயர்களைக் குறித்தபடியால்

கோகழி என்ற மொழி திருக்காழி என்னும் திருப்பதிக்குப் பெயர் ஆமோ எனின் ஆம். எங்ஙனே? 'திரு' என்னும் மொழி 'பெருமை' என்னும் பொருளை உணர்த்துவது போலப் 'பெருமை' என்னும் பொருளை உணர்த்துவது ஆகிய 'கோ' என்னும் உரிச் சொல் 'காழி' எனும் மொழி முன்கூடி(கோ+காழி) 'கோக்காழி, குறுக்கும் வழி குறுக்கப்பட்டு 'கோகழி' என ஒரு சொல் நீர்மைத் தாய் நின்று 'பெருமை பொருந்திய காழி' எனப் பொருள் சுட்டிய

படி ஆம் ஆதலால். அன்றி, 'வளம்' என்னும் பொருள் உணர்த்துவது ஆகிய 'கொழு' என்னும் உரிச்சொல் 'காழி' என்னும் மொழி முன்னர்க்கூடி (கொழு+காழி) 'கொழுக்காழி' மரூஉவின் பாற்றியாய்க் 'கோகழி' என ஒருசொல் நீர்மைத்தாய் நின்று வளமுடைய காழி' எனப் பொருள் சுட்டியபடியும் ஆம். 'திருக்காழித் திருப்பதியை' வளமுடைய காழி நகர் என்று சிறப்பித்து இருத்தலைச் செந்தமிழ்த் திரு மறைகளாகிய திருத் தேவாரங்கள் உள்ளே காண்க.

இவ்வேதுக்களினால் 'கோகழி' என்ற மொழியைத் 'திருவாவடுதுறை' எனும் திருப்பதிக்கு எனும் 'திருப்பெருந்துறை' என்ற திருப்பதிக்கு எனும் பெயராகக் கூறுபவர் கூற்றுக்கள் பொருத்தம் உடையன அல்ல. அக் கோகழி என்ற மொழியைத் திருக்காழி என்ற திருப்பதிக்கே பெயர் ஆகக் கூறுதல் தான் பொருத்தமும் கவிக்கருத்தும் ஆகும் என்க. இற்றை

திருவாசகத்துள்ளே அடிகள் திருப்பெருந்துறை, உத்தரகோசமங்கை, கோகழி என்ற மூன்று திருப்பதிகளையே பலவாக எடுத்துப் பாராட்டி இருத்தலாலும், அவர்கள் பாண்டிய நாட்டில் பிறந்தவரும், பாண்டிய அரசனின் அமைச்சரும் ஆக இருந்தாலும், திருப்பெருந்துறை, உத்தரகோச மங்கை என்ற திருப்பதிகள் பாண்டி நாட்டில் இருக்தலாலும், அத்திருப்பதிகளைச் செப்பிய பாக்களில் பல இடங்களில் கோகழி என்ற திருப்பதியைச் சேர்த்துச்சொல்லி இருப்பதாலும், முன்னர்ப் பாண்டியநாட்டில் கோகழி என்ற பெயருடைய ஒரு திருப்பதி இருந்து பின்னர் அது அழிவுற்று அல்லது வேறு பெயரை ஏற்றுத் திரிந்திருத்தல் கூடுமோ என ஐயுறுதற்கும் இடம் உண்டு ஆதலால், கோகழி என்ற பெயரைப்பற்றி மேலும் அறிஞர் நன்கின்று ஆய்வாராக.

கோகழி என்பது திருக்காழித் திருப்பதியே. (என)
வே. ஸ்ரீநிவாசமுதலியார் எழுதிய கட்டுரை
முற்றிற்று.

'ஆக்குமாறு அயனாய் முதல் ஆக்கிய உலகம்
காக்குமாறு செங்கண் நெடுமாற கருணையங் கடலாம்
வீக்குமாறு அரனும் அவனை (அவர்) வீந்தநாள் மீளப்
பூக்குமாமுதல் எவன் அவன் பொன்னடி போற்றி.'

திருவாதவூர் அடிகள் திருவடிகட்கு வணக்கம்.



௲-17-மு-88 வரை பதிப்பு. ஸ்ரீகிருஷ்ண விலாசம் பிரஸ், காஞ்சீ.